ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வாரருளிச் செய்த

# திருவாய்மொழி-ஏழாம்பத்து.



ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

திவ்யார்த்ததீபிகை யுரையுடன் கூடியது.

(இரண்டாம் பதிப்பு.)

ஸ்ரீஸ்வாமியின்

ஷஷ்டி பூர்த்தி நினைவு மாலையின்

பன்னிரண்டாவது மலராக வெளியிடப்பட்டது.

ஸ்ரீகாஞ்சி ஸ்ரீ வேங்கடேச்வர அச்சுக்கூடம்.

கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்.

விலை 2—4—0

1952

ஸ்ரீ:

# ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய புத்தக விளம்பரம்

## (காஞ்சிபுரம் P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளின் க்ரந்தமாலா ஆபீஸ் பதிப்புகள்)

---

ஸ்ரீஸ்வாமி மூலமாய் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய நூல்கள் யாவும் எளிய தெளிய உரையுடன் தமிழ் தெலுங்கு ஹிந்தி ஸம்ஸ்க்ருதம் ஆகிய நான்கு பாஷைகளிலும் வெளிவந்திருக்கின்றன. வெளிவந்து கொண்டுமிருக்கின்றன. ஆழ்வார்களின் நாலாயிர திவ்யப்ரபந்தங்கள் முழுமைக்கும் திவ்யார்த்ததீபிகை யென்கிற விரிவான வுரை பூர்த்தியாக வெளிவந்திருக்கிறது. மொத்தம் விலை 50 ரூ. தனித்தனிப் பகுதிகளாகவும் கிடைக்கும். திவ்யப்ரபந்தங்களுக்கு ஸம்ஸ்க்ருத—தெலுங்கு—ஹிந்தீ பாஷைகளிலும் ஸ்வாமியின் வியாக்கியானம் அச்சாகி வருகின்றது. இதுவரையில் 500 பாசுரங்களுக்கு வெளிவந்திருக்கின்றது.

ஸ்தோத்ரபாடங்களென்று ப்ரஸித்தமாயுள்ள ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் ஸ்வாமியின் மணிப்ரவாள வியாக்கியானங்களும் தமிழுரைகளும் தெலுங்கு டீகைகளும் வெளிவந்திருக்கின்றன. முகுந்தமாலை, ஆளவந்தார் ஸ்தோத்ரம், பஞ்சஸ்தவம், ஸ்ரீரங்கராஜஸ்தவம் ..........இத்யாதிகளான ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் தெளிவான வுரை கிடைக்கும்.

பிள்ளை லோகாசார்யரருளிச் செய்த ஸ்ரீ வசநபூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி ரஹஸ்யங்களுக்குப் பூர்வாசார்ய வியாக்கியானங்கள் தெலுங்கு லிபியிலும், ஸ்வாமியின் உரைகள் தமிழ் லிபியிலும் கிடைக்கும். ஆசார்யஹ்ருதயமென்னும் அரிய பெரிய ரஹஸ்ய நூலுக்குப் பலவகைப்பட்ட உரைகள் வெளிவந்திருக்கின்றன. ஸத்ஸம்ப்ரதாயார்த்த நிதிகளாக ஸ்வாமியினால் எழுதப்பட்ட பலவகையுபந்யாஸநூல்களும் பூர்வபக்ஷநிரஸநபூர்வக ஸித்தாந்த ஸ்தாபன நூல்களும் விசேஷமாகவுண்டு. இவை பல துறைகளில்.

ஈடு முப்பத்தாறாயிரப்படியென்கிற பகவத்விஷயம் நித்ய காலக்ஷேபத்திற்கு ஸௌகரியமாகத் தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் பதிப்பிக்கப்பட்டது ரூ. 25—0—0.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகனருளிச் செய்த ஸகல க்ரந்தங்களும் தேவநாகர லிபியில் வெகு நேர்த்தியாக எட்டு ஸம்புடங்களாய் அச்சிடப்பட்டிருக்கின்றன. பயிண்டுடன் விலை 46 ரூ, மற்றும்பலவகைப்பட்ட நூல்களுமுண்டு. விரிவான கியாட்லாக் பார்க்க.

### மாதப்பத்திரிகைகள்.

தமிழிலும் தெலுங்கிலும் ஸ்ரீராமாநுஜன் என்கிற மாதப்பத்திரிகையும், ஸம்ஸ்க்ருதத்தில் வைதிகமநோஹரா என்கிற மாதப்பத்திரிகையும் வெகு காலமாக நடத்தப்பட்டு வருகின்றன. ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா என்றொரு ஸபை ஸ்தாபிக்கப்பட்டு அதன் மூலமாக அநேக க்ரந்தங்கள் அச்சிடப்பட்டு வருகின்றன.

இப்படிக்கு,

10—9—52. **ம. திருமலாசாரியர்,**

க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வாரருளிச்செய்த

# திருவாய்மொழி—ஏழாம்பத்து

(காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்ததீபிகை யுரையுடன் கூடியது)

## முதல் திருவாய்மொழி-உண்ணிலாவிய.

**உரையவதாரிகை:**—எம்பெருமான் கீதையிலே *தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா* என்று சொல்லிவைத்து, உடனே *மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே* என்றும் சொல்லிவைத்தான். அதாவது—ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவராலவிழ்க்க வொண்ணாதாப்போலே தான் பிணைத்த மாயப்பிறவிப் பிணையானது ஒருவராலும் கழற்ற வொண்ணாதது என்று முன்னம் சொல்லிவைத்து, என் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றுவார் யாவரோ அவர்கள் அந்தப்பிணையை எளிதாகக் கழற்றிக்கொள்ள வல்லார்கள் என்று பின்னைச் சொன்னான். அந்தத்திருமுகப் பாசுரத்தில் நம்பிக்கையாலே ஆழ்வார் கீழ்த் திருவாய்மொழியில் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஆர்த்தராய்ச் சரணம் புகுந்தார் மாயப்பிறவி மயர்வறுத்து நித்ய கைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெறவேணுமென்று.

அந்த சரணாகதி பலித்ததில்லை. பரதாழ்வானுடைய சரணாகதிக்கு முன்னே தேவதைகளின் சரணாகதி கிடந்ததாய் அதற்குப் பலன் அளித்த பின்னரே பரத சரணாகதிக்குப் பலன்தர வேண்டினாப்போலே—இங்கும் ஆழ்வாருடைய சரணாகதிக்கு முன்னே இவ்வுலகில் சில ஸம்ஸாரிகள் சரணாகதி செய்திருப்பர்கள் போலும்; நாங்கள் வாழலாம்படி ஸர்வோத்துங்கமானதொரு பிரபந்தத்தை உபகரித்தருள வேணுமென்று சிலர் சரணாகதி செய்திருந்தார்களாகவேணும்; அதுதான் முந்தின சரணாகதியாகையாலே அதற்குப் பலனளித்த பின்னரே ஆழ்வாருடைய சரணாகதிக்குப் பலனளிக்க வேண்டி எம்பெருமான் தாழ்த்தான்.

ஆழ்வாருடைய சரணாகதிக்கு முன்னே இப்படியொரு சரணாகதியிருந்திருக்க வேணுமென்னுமிடம் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாலும் தெரியாநின்றது. ஆழ்வார் தாமே மேலே "எண்ணாதனகளெண்ணும் நன் முனிவரின்பந்தலைச் சிறப்பப் பண்ணார்பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத்தான்பாடி" என்றருளிச் செய்யாநின்றார்; திருவாய்மொழி யருளிச் செய்கைக்கு நிதானம் கூறுகிற பாசுரமாயிற்றிது. "எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரின்பந்தலைச் சிறப்ப" என்றவிடத்து ஆழ்வார் திருவுள்ளத்தில் ஓடிக்கிடந்த பொருளாவது—

திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்னே முனிவர்களெல்லாரும் திரள்கூடி 'எம்பெருமானுடைய பெருமைகளையெல்லாம் வருணிக்கப் பிறந்த உபநிஷத்துக்களுங்கூட *யதோ வாசோ நிவர்த்தந்தே* என்று பின்வாங்கிப்போயின; அப்படியன்றிக்கே பகவத் ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்களையெல்லாம் செவ்வனே பேசவல்லதொரு பிரபந்தம் அவதரிக்க வேணுமென்று பெருமாளைப் பிரார்த்திப்போம்' என்று நினைத்தார்களாம். பிறகு

திருவாய்மொழி அவதரித்தான பின்பு அம்முனிவர்கள் மறுபடியும் திரள்கூடி 'எம்பெருமானுக்கு இன்னம் சில குணங்களும் இன்னம் சில விபூதிகளும் உண்டாக வேணும்' என்று நினைத்தார்களாம். இப்படியே நம்பிள்ளை அர்த்தமருளிச் செய்கிறார். *எண்ணுதனகளெண்ணும் நன் முனிவர்* என்கிற மூலத்திற்கு இங்ஙனே பொருள் சொல்லியே தீரவேண்டும். திருவாய்மொழியினால் எம்பெருமானுடைய குணவிபூதிகளெல்லாம் கபளீகரிக்கப்பட்டுவிட்டன என்பது பரம தாற்பரியம்.

இப் பாசுரத்தின்படி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களைக் குறையறப் பேசவல்லதொரு பிரபந்தம் திருவவதரிக்கவேணுமென்று ஏற்கெனவே சிலர் சரணாகதி செய்திருக்க வேண்டுகையாலே முந்துற முன்னம் அதற்குப் பலனளிக்கவேண்டி எம்பெருமான் ஆழ்வாருடைய சரணாகதியைப் பழுதாக்கினானென்னலாம். இவருடைய சரணாகதிக்கு இப்போதே பலன் தந்தால் திருவாய்மொழி அரைகுறையாயன்றோ போயிருக்கும். முந்தின சரணாகதிக்குப் பலன் முற்றிற்றாகாதே. திருவாய்மொழி தலைக்கட்டவேண்டி ஆழ்வாரை இன்னமும் இவ்விபூதியிலே வைத்தானாயிற்று. முன்னமே இவர் "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" என்று வயிறெரிந்திருக்கிறாரே; அந்த வயிற்றெரிச்சல்தானே மேலும் தலையெடுத்து *அங்கோ வடியேனுனபாத மகலகில்லேனிறையுமே யென்று சொன்ன வடியேனை, இன்னமும் அகற்றுமவற்றின் நடுவேயிருத்தித் துடிக்கவைப்பது தருமமோ வென்று கூப்பிடுகிறார் இத் திருவாய்மொழியில்.

ஜிதேந்திரியரில் தலைவரான ஆழ்வார் இந் நிலத்திலிருப்புக்குத் துடிக்கவேண்டிய அவசியமுண்டோ? விஷயங்களும் இந்திரியங்களும் இருந்தாலென்ன? அவற்றில் ஆழ்வார் கலங்குகைக்கு ப்ரஸக்தியில்லையே, துடிப்பானேன்? என்னில்; இதற்கு ஆழ்வார் தாமே இதில் ஆறும் பாட்டில் ஸுஸ்பஷ்டமாக உத்தரமருளிச் செய்கிறார் "விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை, மண்ணுளென்னைப் பெற்றால் என்செய்யா மற்று நீயும் விட்டால்" என்று.

*மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்த மங்கையர்கோன் தம்முடைய பெரிய திருமொழியிலே இத் திருவாய்மொழியை விவரியா நிற்பாராய் இரண்டு திருமொழிகள் அருளிச் செய்கிறார்; [1. திருவுக்குந் திருவாகிய செல்வா. 2. மாற்றமுள.]

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"*முடியானேயிற் கரணங்களையுடைய இவர்க்கு இந்த்ரியவச்யதை யுண்டென்னுமிடம் ஓரோடு விருத்தமன்றோ என்னில்; அசல் அகம் நெருப்புப்பட்டு வேவாநின்றால் தந்தாம் அகம் பரிஹரியாதிருப்பாரில்லையிறே; புற்றினருகே பழுதை கிடந்தாலும் ஸர்ப்பம் என்று புத்திபண்ணி ப்ரமிக்கக்கடவதாயிருக்குமிறே. அங்குத்தைக்கும் இங்குத்தைக்கும் பொதுவான வுடம்போடே யிருக்கிறபடியைக் கண்டார்; நாட்டாருடைய இந்த்ரிய வச்யராய்க் கிடந்து நோவுபடுகிறபடியையும் கண்டார்; இது நம்மளவும் வரில் செய்வதென்? என்று அஞ்சிக் கூப்பிடுகிறார்."

இந்தப் ப்ராக்ருத மண்டலத்திலே யிருந்தால் என்ன அநர்த்தம் விளையுமோ என்கிற அச்சம் மேலிட்டு ஓலமிடுகிறார் என்றதாயிற்று. .... .... *)

உண்ணிலாவியவைவரால்குமைதீற்றி என்னையுன்பாதபங்கயம் *
நண்ணிலாவகையே நலிவானின்னமெண்ணுகின்றாய் *
எண்ணிலாப்பெருமாயனேயிமையோர்களேத்தும் உலகம்மூன்றுடை *
அண்ணலே யமுதே யப்பனே என்னையாள்வானே! (க)

| | |
|---|---|
| எண் இலா பெருமாயனே | அளவிட முடியாத ப்ரக்ருதி தத்வத்தை உபகரணமாக வுடையவனே! |
| இமையோர்கள் ஏத்தும் | தேவர்களாலே துதிக்கப்படுபவனும் |
| உலகம் மூன்று உடை | மூவுலகங்களையும் சேஷமாக வுடையவனுமான |
| அண்ணலே | ஸ்வாமியே! |
| அமுதே | பரமபோக்யனே! |
| அப்பனே | மஹோபகாரங்கள் செய்பவனே! |
| என்னை ஆள்வானே | என்னை நிர்வஹித்துக் கொண்டு போருமவனே!; |
| என்னை | அடியேனை |
| உள் நிலாவிய ஐவரால் குமைதீற்றி | உள்ளே நிரந்தர வாஸம் பண்ணுகின்ற பஞ்சேந்திரியங்களாலும் நலிவுறும்படி பண்ணி |
| உன் பாதபங்கயம் | உனது திருவடித்தாமரைகளை |
| நண்ணிலா வகையே | கிட்டாதபடியாகவே |
| இன்னம் நலிவான் எண்ணுகின்றாய் | இன்னமும் ஹிம்ஸிப்பதாக எண்ணியிருக்கின்றாய் போலும். |

* * * [உண்ணிலாவிய.] பிரானே! உன் திருவடிகளையே சரணமாகப்பற்றின வென்னை இந்திரியங்களை யிட்டு நலியப் பார்க்கிறாயே! இது தகுதியோ? என்கிறார். பகைவர் பாஹ்ய சத்ருக்களென்றும் ஆந்தர சத்ருக்களென்றும் இருவகைப்படுவர்; ஆயுதங்களாலே நமது உடலுக்கு நலிவை விளைக்கும் பகைவர் பாஹ்ய சத்ருக்களாவர். அப்படியன்றிக்கே கண்ணுக்குத் தெரியாதபடி உள்ளேயிருந்துகொண்டே நலிகின்ற பஞ்சேந்திரியங்கள் ஆந்தர சத்துருக்களெனப்படும்; இத்தன்மையை 'உண்ணிலாவிய ஐவரால்' என்று ஆழ்வார் தெரிவிக்கிறார். அசேதநங்களான இந்திரியங்களை 'ஐந்தால்' என்று சொல்லவேண்டுமிடத்து 'ஐவரால்' என்றது—இந்த்ரியங்களானவை அசேதனங்களைப் போலன்றிக்கே சேதநர்கள் போலவே நின்று நலியுந் தன்மையைப் பற்ற. திருமங்கையாழ்வாரும் "உடனின்று ஐவரென்னுள் புகுந்து" என்றருளிச் செய்தது காண்க.

குமைதீற்றி—குமைக்கும்படி பண்ணி; குமைத்தலாவது ஸஹிக்க வொண்ணாதபடி ஹிம்ஸித்தல். இந்திரியங்கள் ஹிம்ஸித்தால் அதற்காக எம்பெருமானை நொந்து பேசலாமோ வென்னில்; எம்பெருமானுக்கு ஹ்ருஷீகேசனென்று ஒரு திருநாமமுண்டு; ஹ்ருஷீகமென்று இந்திரியங்களுக்குப் பெயர்; அவை தானிட்ட வழக்காம்படியிருப்பவன் என்பது பற்றியே ஹ்ருஷீகேசனென்று திருநாமமாயிற்றென்பதை ஆழ்வார் தாம் அறிந்தவராதலால் இங்ஙனே சொல்லுகிறார் போலும். பிரானே! உனக்கு விதேயமல்லவோ அவை; நீ நியமித்தால் கேளாவோ அவை; நீயேயன்றோ அவற்றை ஏவி நலிகின்றாய் என்கிறார்.

தமக்கு நலிவாவது இன்னதென்பதைக் காட்டுகிறார் "உன் பாத பங்கயம் நண்ணிலா வகையே" என்று. திருவடிகளைக் கிட்டாதொழிகையே இவ்வாத்மாவுக்கு நலிவு என்றிருக்கிறார். நலிவான் இன்னமெண்ணுகின்றாய்—*அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா! உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்றபின்பும் என்னை இன்னம் நலியப் பார்க்கிறாயே இது தகுமோ? என்கிறார்.

ஆழ்வார் இங்ஙனே யருளிச் செய்வதைப்பற்றி ஸ்ரீவசநபூஷணத்தில் சில ஆராய்ச்சிகள் தோன்றியுள்ளன; அதில் மூன்றும் பிரகரணத்தில் "ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது; பகவத் குணாநுஸந்தாநம் அபயஹேது; பயாபயங்களிரண்டும் மாறாடில் அஜ்ஞதையே ஸித்திக்கும்" என்று முந்துற அருளிச்செய்தார். சேதநன் தன்னுடைய தோஷங்களைப் பார்த்தவாறே பயப்படவும், எம்பெருமானுடைய திருக்குணங்களை அநுஸந்தித்தவாறே அந்தபயம் தீரவும் நேரும்; இப்படியன்றிக்கே 'அநாதிகாலம் தனக்குப் பரதந்த்ரமான ஆத்மவஸ்துவை கர்மவ்யாஜத்தாலே ஸம்ஸரிக்கச் செய்து போந்தவனன்றோ, கேட்பாரற்ற ஸ்வதந்திரனானவன் இன்னமும் ஸம்ஸரிப்பிக்கில் செய்வதென்?' என்று அவன்படியை நினைத்து பயப்படுகை

யும், 'முன்போலன்றிக்கே நமக்கிப்போது ஆத்ம குணங்களுண்டாகையால் பேற்றில் கண்ணழிவு இல்லை' என்று தன்படியை நினைத்து பயம் கெடுகையும் ஆகுமானால் அவிவேகமே ஸித்தித்து விடும்; தான் தனக்கு நாசகனென்று பயப்படுகையும் ஈச்வரனே ரக்ஷகனென்று பயம் கெடுகையுமாகிற விவேக வேஷம் இல்லாமையாலே அவிவேகமே சித்தித்துவிடும்—என்பதாக அருளிச்செய்தார்; இதற்குமேலே தோன்றக்கூடிய சங்கையை அநுவதித்துப் பரிஹாரமும் காட்டியருளினர் (பிள்ளை லோகாசார்யர்);

"ஆனால் *நலிவானின்ன மேண்ணுகின்றாய்* ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன் என்கிற பாசுரங்களுக்கு அடியேன்னேன்னில்; பந்தாநுஸந்தாநம். ப்ரஜை தேருவிலே யிடறித் தாய் முதுகிலே குத்துமாபோலே நிருபாதிக பந்துவாய் சக்தனுமிருக்கிறவன் விலக்கா தொழிந்தால் அப்படிச் சொல்லலாமிறே. ப்ரஜையை கிணற்றின் கரையில் நின்றும் வாங்காதொழிந்தால் தாயே தள்ளினளென்னக் கடவதிறே."

என்கிற சூர்ணிகைகள் அருமருந்தானவை. இவற்றின் கருத்தாவது—எம்பெருமான் படியை நினைத்து பயம் தீரவேணுமே யல்லது பயப்படுகை கூடாதென்பது சாஸ்த்ரார்த்தமானால் தத்வ வித்துக்களில் தலைவரான ஆழ்வார்கள் *உண்ணிலாவிய வைவரால் குமை தீற்றி யென்னையுன் பாதபங்கயம் நண்ணிலாவகையே நலிவானின்ன மெண்ணுகின்றாய்* மக்கள் தோற்றக் குழிதோற்றுவிப்பாய் கொலென்று இன்னமாற்றங்கரை வாழ்மரம் போலஞ்சுகின்றேன் என்று அருளிச்செய்த பாசுரங்களுக்குக் கதியென்ன? என்று சங்கை; அதற்குப் பரிஹாரமாவது—பேறும் இழவுமான இரண்டும் அவனாலே யென்னலாம்படி நிருபாதிகரக்ஷகனை அவனோடு தங்களுக்குண்டான ஸம்பந்தத்தினுடைய அநுஸந்தானமே அப்படியருளிச் செய்கைக்குக் காரணம். ஸம்பந்தாநுஸந்தானத்தாலே இப்படி அவன் குறையாகச் சொல்லலாமோ வென்னில், விளையாட்டுக்காகத் தெருவிலே யோடித்திரிகிற ப்ரஜை, அங்கே இடறிக் கால் நொந்தவாறே அழுதுகொண்டு அகத்திலே வந்து தனக்கு இந்தவேதனை வந்தது தாயாலேயாக நினைத்து அவள் முதுகிலே குத்துமாபோலே, ஒழிக்க வொழியாத உறவுடையனாய் நலிவைத் தவிர்க்கைக்கு சக்தனுமாயிருக்கிறவன் நலிவுபடவிட்டு விலக்காதொழிந்தால் 'அவன் இவற்றையிட்டு நலிவிக்கிறான்' என்னலாமன்றோ. விலக்காத மாத்திரமே கொண்டு அவன் செய்தானென்னலாமோவென்னில், கிணற்றின் கரையில் நின்றும் வாங்காவிட்டால் கிணற்றிலே பிரஜை விழுந்தவளவில் 'தாய் அப்போதே சென்று எடுத்தாளாகில் இந்த ஆபத்து நேருமோ? கிணற்றின் கரையிலிருப்பை இவள் இசைந்திருக்கையாலன்றோ குழந்தை விழுந்தது; ஆனபின்பு இவளன்றோ தள்ளினள்' என்று லோகம் சொல்லக்கடவதன்றோ.........இதற்கு மேலும் அறிந்துகொள்ள வேண்டிய அர்த்த விசேஷங்களை ஸ்ரீவசநபூஷண தத்வ்யாக்யானங்களில் அறிந்துகொள்வது.

இத் திருவாய்மொழியில் முன்னடிகளெல்லாம் அஞ்சிக் கதறுகிறபடியாயும், பின்னடிகளெல்லாம் அச்சந்தீர எம்பெருமான் படிகளைப் பேசுகிறபடியாயும் செல்லாநின்றது. பிள்ளை திருநறையூரரையர் "இப்பாட்டுக்களில் முன்னடிகளெல்லாம் புலியின் வாயிலே அகப்பட்ட ப்ரஜை தாய்முகத்திலே விழித்துக்கொண்டு புலியின்வாயிலே கிடந்து நோவுபடுமாபோலேயாயிருக்கிறது" என்று பணிப்பராம்.

எண்ணிலாப் பெருமாயனே !—எண்ணிறந்த மிகவும் ஆச்சரியமான குணங்களை யுடையவனே! என்பது ஒரு நிர்வாஹம். எண்ணிறந்த செயல்களைச் செய்யவல்லதான ப்ரக்ருதியைப் பரிகரமாக வுடையவனே! என்பது மற்றொரு நிர்வாஹம். ... ... (க)

என்னையாளும்வன்கோவோரைந்திவைபெய்து இராப்பகல்மோதுவித்திட்டு*
உன்னைநானணுகாவகை செய்துபோதிகண்டாய்*
கன்னலேயமுதே கார்முகில்வண்ணனே கடல்ஞாலம் காக்கின்ற*
மின்னுநேமியினாய் வினையேனுடைவேதியனே! (உ)

| | | | |
|---|---|---|---|
| கன்னலே அமுதே | பரமபோக்யனே! | என்னை ஆளும் வன் கோ ஓர் ஐந்து இவை பெய்து | என்னை அடிமை கொள்ளுகிற கொடிய அரசர்கள் போன்ற இந்த பஞ்சேந்திரியங்களை ஏவி வைத்து |
| கார் முகில் வண்ணனே | காளமேக நிறத்தனே! | இராப் பகல் | இரவும் பகலும் |
| கடல் ஞாலம் காக்கின்ற | கடல் சூழ்ந்த வுலகங்களை ரக்ஷித்தருள்கின்ற | மோதுவித்திட்டு | பீடிக்கச்செய்து |
| மின்னு நேமியினாய் | உஜ்ஜ்வலமான திருவாழியை யுடையவனே! | நான் உன்னை அணுகா வகை | நான் உன்னைக் கிட்டாதபடி |
| வினையேனுடை வேதியனே | பாவியேனான என் திறத்திலே எட்டாதபடி வேத வேத்யனா யிருக்குமவனே! | செய்து போதி கண்டாய் | பண்ணிப்போருகிறாய். |

* * * [என்னையாளும்வன்கோ.] எலியெலும்பனான வென்னை இந்திரியங்களாலே நோவுபடுத்தி அந்த நோவை அறிவிக்க முடியாதபடி கடக்க நிற்கிறாயே! என்கிறார். ஈச்வரன் ஸர்வ சேஷியாயிருப்பவன்; அவனுக்கு ஜீவாத்மா அடிமைப்பட்டிருப்பன்; அவனுக்கு மனஸ்ஸு விதேயமாயிருக்கும்; மனஸ்ஸுக்கு இந்திரியங்கள் சேஷமாயிருக்கும்—என்றிப்படி ஒரு முறையுண்டு; இந்த முறை கெட்டு என்னை இந்திரியங்கள் ஆளும்படியாவதே! என்கிற பரிதாபத்தைக் காட்டுகிறார் "என்னையாளும் வன்கோ ஓரைந்திவை" என்பதனால். இந்திரியங்களுக்கு நான் ஆட்பட்டு அவற்றின் வழியே ஒழுகவேண்டும்படியான நிலத்திலே என்னை வைத்தாயே! என்று நொந்து சொல்லுகிறபடி.

இப்பாட்டின் முதலடியைத் திருவுள்ளம்பற்றியே மங்கையர்கோன் தமது திருமொழியில் * கோவாய் ஐவரென் மெய்குடியேறிக் கூறை சோறிவைதா வென்று குமைத்துப் போகார், நானவரைப் பொறுக்ககிலேன் * (7-7-9) என்றருளிச் செய்தார்.

இவைபெய்து இராப்பகல் மோதுவித்திட்டு—தர்மார்க்க ப்ரவ்ருத்திக்கு அடியான இந்த இந்திரியங்களை எனக்கு எதற்காகக் கொடுத்தாய்? இவற்றை என்னிடத்திலே உண்டுபண்ணாதிருக்கலாகாதோ? இரவு பகலென்கிற வாசியில்லாமல் இடைவீடின்றி என்னை நலிகைக்காகவேயன்றோ இவற்றை நீ என் பக்கலிலே உண்டாக்கிற்று என்று நெஞ்சுளுத்துச் சொல்லுகிறார்.

ஆழ்வீர்! இவ்விந்திரியங்களினால் உமக்கு என்ன பாதகம்? இதற்காக நீர் நெஞ்சு நோவானேன்? செவி வாய் கண் மூக்குடல் என்கிற ஐந்து இந்திரியங்களாலும் நீர் நம்மை அநுபவிக்கலாமன்றோ; செவிகளாலே என் கதைகளைக் கேட்கலாம்; வாயாலே என்னை வாழ்த்தலாம்; கண்களாலே என்னையும் என் அடியார்களையும் காணலாம்; மூக்காலே என்னுடைய பிரசாதமான திருத்துழாய் முதலியன மோரலாம்; உடலாலே என்னைத் தழுவி முழுசிப் பரிமாறலாம். இப்படி நல்லுபபோகங்களுக்கு உரியனவான இவற்றைப்பற்றி ஏதுக்கு இப்படி நெஞ்சுடைந்து சொல்லுகிறீர்? என்று எம்பெருமான் திருவுள்ளமாக, அதற்கு உத்தரமருளிச் செய்கிறார்—உன்னை நானணுகாவகை செய்து என்று. பிரானே! இந்த இந்திரியங்கள் உன்னுடைய அநுபவத்துக்கே ஏகாந்தமாகில் வெறுப்பனோ நான்!, அப்படி ஆகமாட்டாதே; * அகற்ற நீ வைத்த மாய வல்லைம்புலன்களாமவை நன்கறிந்தனன் * என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறேனே; விஷயாந்தரங்களிலே பரந்தோடி உன்னருகு வாராமைக்கு இட்ட இடையூறுகளன்றோ இவை என்கிறார்.

ஆழ்வீர்! அப்படியாகாது; ஒருகால் அப்படியானல் அப்போது எம்மிடமறிவித்தால் பரிஹரித்துத் தருகிறோம் என்று எம்பெருமான் திருவுள்ளமாக, போதிகண்டாய் என்கிறார்; இவற்றால் படும் எளிவரவை அறிவிக்கவொண்ணுதபடி கண்மறையப்போகிறாயே! எங்கு வந்து எங்ஙனம் அறிவிப்பது என்கை. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"உன்னை அநுபவிக்க வேணுமென்று போந்த பிராட்டியை மாயமானைக் காட்டிப் பிரித்து ஏகாக்ஷி ஏகர்ணிகள் கையிலே காட்டிக்கொடுத்து உன்னைக் கொண்டகன்றாற்போலே கிடாய் இதுவும்."

சன்னலேயமுதே! உன்னுடைய பரம போக்யதையை எனக்கு நீ காட்டிக்கொடாமலிருந்தால் இந்திரியங்களின் வழியே நான் ஓடித்திரிய ருசியுடையேனுவேன்; உன்னுடைய போக்யதையையும், கார்முகில் போலும் வடிவழகையும் காட்டிக்கொடுத்தாயாதலால் உன் அநுபவத்திற்கு விரோதியாக இவ்விந்திரியங்கள் என்ன பாடுபடுத்துமோ என்று அஞ்சாநின்றேனென்கை.

கடன்ஞாலம்காக்கின்ற மின்னு நேமியினுய்!—'காக்கின்ற' என்ற விசேஷணம் நேமியிலும் அந்வயிக்கலாம், நேமியானிடத்திலும் அந்வயிக்கலாம். *அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்* (திருவிருத்தம்) என்ற பாசுரம் இங்கு நினைக்கத்தகும். கையும் திருவாழியுமான அழகைக்காட்டி என்னை யீடுபடுத்திப்புறம்பு தள்ளலாமோ? என்றவாறு.

வினையேனுடை வேதியனே—இவ்விடத்தில் ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்:—"*தேவா நாம் தாநவாநாஞ்ச ஸாமாந்ய மதிதைவதம்* என்றும், *பொதுநின்ற பொன்னங்கழல்* என்றும் சொல்லுகிறபடியே ஸர்வ்பொதுவாயிருக்கிற நீ, என்னளவிலே வந்தவாறே, வேதைகஸமதிகம்யனுய்; இன்றிருந்து ஓலைப்புறத்தே கேட்கும்படியான பாபத்தைப் பண்ணுவதே நான்!" என்று. பிரானே! உன்னைப் பிரத்யக்ஷமாகக் கண்ணாரக்கண்டு அநுபவிக்க வேண்டிய நான் அப்படி யநுபவிக்க ப்ராப்தமாகாமல் 'சாஸ்த்ரங்களால் கேட்டறியத்தக்கவனத்தனை' என்று நிற்கும்படியாவதே, இப்படியும் எனக்கொரு பாபமோ? என்றவாறு. மேலே உதாஹரித்த ஈட்டு ஸ்ரீஸூக்தியில் "என்னளவிலே" என்றிருப்பதைக்கொண்டு சிலர் மூலபாடத்தை 'வினையேனிடை' என்று திருத்துவர்கள்; அதுவேண்டா; 'வினையேனுடை' என்ற பாடத்திலும் வியாக்கியானம் பொருந்தும். வேதியன்—வேதவேத்யன் என்றபடி. (உ)

வேதியாநிற்குமைவரால் வினையேனைமோதுவித்து*உன் திருவடிச்
சாதியாவகை நீதடுத்தேன்பெறுதியந்தோ *.
ஆதியாகியகலிடம்படைத்து உண்டுமிழ்ந்துகடந்திடந்திட்ட *
சோதிநீண்முடியாய்! தொண்டனேன்மதுசூதனனே! (ந.)

| | | | |
|---|---|---|---|
| ஆதி ஆகி | காரணபூதனாய்க்கொண்டு | தொண்டனேன் மதுசூதனனே | என்னை யீடுபடுத்திக் கொண்ட மதுசூதனனே! |
| அகல் இடம் படைத்து | விஸ்தாரமான ஜகத்தை ஸ்ருஷ்டித்து | வினையேனை | பாவியான வென்னை |
| உண்டு | (பிரளயத்லே) வயிற்றிலே வைத்து நோக்கி | வேதியா நிற்கும் ஐவரால் | இடைவிடாதே நலியும் பஞ்சேந்திரியங்களாலே |
| உமிழ்ந்து | பிறகு வெளிப்படுத்தி | மோதுவித்து | பீடிக்கச்செய்து |
| கடந்து | (ஒருகால்) அளந்து | உன் திருவடி சாதியாவகை | உன் திருவடிகளைக் கிட்டாதபடி |
| இடந்திட்ட | (வராஹரூபியாய்) இடந்தவனே! | நீ தடுத்து என் பெறுதி | நீ தடைசெய்து என்ன பயன் பெற்றாயாகிறாய்; |
| சோதி நீள் முடியாய் | உஜ்ஜ்வலமாய் நீண்ட திருவபிஷேகத்தை யுடையவனே! | அந்தோ | ஐயோ!. |

* * * [வேதியாநிற்கும்.] 'ஆழ்வீர்! உம்மை நான் இந்த ப்ரக்ருதியிலே வைத்தது ஒரு ப்ரயோஜனத்துக்காகக் காணும்' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, பிரானே! என்னை இப்படி நலிவித்து என்ன ப்ரயோஜனம் கொள்ளப்பார்க்கிறாய்? என்கிறார்.

'வேதியாநிற்கும்' என்கிற சொல் 'வெய' என்கிற வட சொல்லடியாகப் பிறந்தது. நசமீ வேயம், க்ருத்திகா வேயம் என்பது முதலான வியவஹாரங்களில் வேயபதப்ரயோகம் காண்க. வேதமாவது அடித்தல்; ஹிம்ஸித்தலென்று தாற்பரியம். இடைவீடின்றிக் கொலை பண்ணுவதையே தொழிலாகவுடைய பஞ்சேந்திரியங்களினால் என்னை க்லேசப்படுத்தி உன் திருவடிகளுக்கு தூரஸ்தனும்படி செய்துவைத்து என்ன ப்ரயோஜனம் பெறப் பார்க்கிறு யென்கிறார்.

முதலடிக்கு மிக அழகிய ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—" * யாவஜ் ஜீவ மக்நி ஹோத்ரம் ஜுஹுயாத் * என்றால் *ஸாயம் ப்ராத:* என்று ஒரு காலங்களிலே ஒதுக்கா நின்ற திறே; அங்ஙனன்றிக்கே ஸர்வாவஸ்தைகளிலும் அடிமை செய்ய ஆசைப்பட்டுச் சொன்ன தெல்லாம் இவற்றின் பக்கலிலேயானபடி. போகத்துக்குப் பாரித்ததெல்லாம் க்லேசப்படு கைக்கு உடலாவதே!." என்று. இதன் கருத்தாவது—சாஸ்த்ரங்களில் யாவஜ்ஜீவம் அக்நி ஹோத்ரம் செய்து போரவேணுமென்று சொல்லிற்று. யாவஜ்ஜீவமென்றால் உயிருள்ள வரை யில் என்று பொருள். உயிருள்ளவளவும் இரவும் பகலும் முடுக்க அக்நிஹோத்ரம் செய்ய வேணுமென்பதாகத்தேறும்; ஆனால் அப்படியில்லை; அதே சாஸ்த்ரத்தில் மற்றோரிடத்தில் *ஸாயம் ப்ராதரக்நிஹோத்ரம் ஜுஹுயாத்* என்று காலையிலும் மாலையிலும் அக்நிஹோத்ரம் செய்யும்படி விதித்திருக்கையாலே அதற்கு ஒரு காலநியதி ஏற்பட்டுவிட்டது. எம்பெருமா னுக்குக் கைங்கர்யம் பண்ணவேணுமென்று பாரிப்புக்கொண்ட ஆழ்வார் *ஒழிவில் கால மெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்றார். யாவஜ்ஜீவம் அடிமைசெய்யவேணுமென்று பாரித்தபடி. இஃதே விவரித்தபடி. அக்நிஹோத்ரத்திற்குக் காலை மாலை யென்று ஒரு காலநியதி ஏற்படுத்தினாற்போல இங்கும் கைங்கர்யத்திற்கு ஒரு காலநியதி ஏற்படுத்த வேண்டியதுண்டோ வென்னில், அது கிடையாது; ஒரு கணப்பொழு தும் இடைவீடின்றியே கைங்கர்யம் செய்யவேடாயிற்று இவருடைய பாரிப்பு. ஐயோ! அந்தப் பாரிப்பெல்லாம் விபரீதமாகிறதே! ஒருகொடிப்பொழுதும் ஓய்வின்றி இந்திரியங்களின் பக்க லிலே ஹிம்ஸைப்படுவதே பலனாகத் தேறப்போகிருக்கிறதே! நான் பாரித்த பாரிப்பு இப் படியா ஆவது ! என்று கிலேசிக்கிறபடியாக நம்பிள்ளை விவரித்தருளினாராயிற்று.

[ஆதியாகி இத்யாதி.] பிரானே! உன்னுடைய சேஷ்டிதங்களை ஆராய்ந்தால் ரக்ஷிப்ப தொன்றே உன் தொழிலாகக் காண்கிறது; * படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்து தேர்ந்து உலகளிக்கும் முதற்பெருங் கடவுளாயிருக்கின்ற நீ என்னை இங்ஙனே நலியவேணுமென்று திருவுள்ளம் பற்றலாமோ? என்றவாறு. சோதிநீண்முடியாய்!—ரக்ஷிப்பதற்கென்றே முடிகவித் திருப்பவனல்லையோ? ... ... ... ... (க)

சூதுநானறியாவகை சுழற்றியொரைவரைக்காட்டி * உன்னடிப்
போதுநானணுகாவகை செய்துபோதிகண்டாய் *
யாதும்யாவருமின்றிநின்னகம்பாலொடுக்கி ஓராலினிலை *
மீதுசேர்குழவி! வினையேன்வினைதீர்மருந்தே! ... ... (௨)

| | | | |
|---|---|---|---|
| யாதும் யாவரும் இன்றி | சேதநாசேதனப் பொருள்க ளொன்றொழியாமல் | ஓர் ஐவரை காட்டி | பஞ்சேந்திரியங்களைக் காட்டி |
| நின் அகம் பால் ஒடுக்கி | உன் திருவயிற்றின் ஏக தேசத் திலே ஒதுங்கும்படி பண்ணி | நான் சூது அறியா வகை | நான் உறுவது அறியாதபடி |
| ஓர் ஆலின் நீள் இலை மீது | ஓர் ஆலமரத்தினுடைய சிறிய இலையின்மீது | சுழற்றி | என்னை மருளப்பண்ணி |
| சேர் குழவி | குழந்தையாய்க் கண்வளர்ந்தரு ளினவனே! | உன் அடி போது நான் அணுகா வகை செய்து | உன் திருவடி மலர்களை நான் கிட்டாதபடி பண்ணி |
| வினையேன் வினை தீர் மருந்தே | பாவியேனான என்னுடைய பாவங்களைத் தீர்க்கும் மருந் தானவனே! | போதிகண்டாய் | கண்காணாதபடி கடக்க நிற்கின்றாயே !. |

* * *—[சூது நானறியாவகை.] பிரானே ! உன் திருவடிகளைப் பெறுவதற்கு உபாயம் உன்திருவடிகளே யென்றிருக்கிற இந்த என்னுடைய அறிவுங்கூட அழியும்படி இந்திரியங்களைக்கொண்டு என்னைக் கலக்கி உன் திருவடிகளைச் சேராதபடி பண்ணவா நினைத்திருக்கிறாய் ? என்கிறார்.

சூது என்பதற்கு க்ருத்ரிமம் என்கிற பொருள் உலகில் ப்ரஸித்தமானாலும் அந்தப் பொருள் இங்கு விவக்ஷிதமன்று; * தொழக் கருதுவதே துணிவது சூதே * சூதாவதென்னெஞ்சத் தெண்ணினேன் * என்ற விடங்களில் போல இங்குப் பொருள் கொள்க. சூது—உறுவது. 'இவ்வாத்மாவுக்கு விஷயப்ராவண்யம் விநாச ஹேது, எம்பெருமானை யநுபவித்தலே உஜ்ஜீவநம்' என்றறிவதன்றோ உறுவது; அப்படி நான் அறியாதபடிக்கு சப்தாதி விஷயங்களைக் காட்டி பிரமிப்பித்து உன் திருவடிமலர்களை நான் கிட்டாதபடி பண்ணிக் கண்ணுக்குத் தோற்றாமே கடக்க நிற்கிறாயே! இது தகுதியோ வென்கிறார்.

போதிகண்டாய் என்ற விடத்திற்கு நம்பிள்ளை யருளிச்செய்வது—"கூட நிற்கில் இதெல்லாம் படவல்லேன் கிடீர்; கூட நிற்கில் கண்ணோட்டம் பிறக்குமென்று கடக்கப் போவாரைப் போலே." (இதன் கருத்தாவது) கொலைப்பாதகர்களான இந்திரியங்களோடே என்னைவைத்து எவ்வளவு வதைசெய்தாலும், நீ அகன்று போகாமல் கூடவே யிருப்பாயாகில் எந்தக் கஷ்டமும் பொறுத்துக்கொள்ளத் தடையிராது. 'கூடவேயிருந்தால் தயை பண்ண வேண்டிவருமே' என்று நினைத்து அகன்று போவாரைப்போலே நீயும் அகன்று போவதனால் வருத்தம் பொறுக்கக் கூடியதாக இல்லையே ! என்றவாறு.

[யாதும் யாவருமின்றி இத்யாதி.] பிரானே! ஆபத்துக்களைப் போக்கிக் காத்தருள்வது உன்பணியே யன்றி ஆபத்தை விளைப்பது உன் பணியன்றே; பிரளயங்கொள்ளாதபடி உலகங்களைத் திருவயிற்றிலே வைத்து நோக்கி ஓர் ஆலந்தளிரிலே சிறு குழவியாய்க் கண்வளர்ந்தருளுமவனான நீ உன்னுடைய ஆபத்ஸகத்வத்தை ப்ரஸித்தப்படுத்திக் கொண்டவனாயிருந்து வைத்து இப்போது எனக்கு ஆபத்தை விளைக்கப் பார்ப்பது தகுதியோ? என்றவாறு.

வினையேன் வினைதீர்மருந்தே!—பாபமே நிரூபகமான என்னுடைய பாபங்களைப் போக்கும் மருந்தாகவல்லவனே! என்றபடி. ஏற்கெனவே எனக்கிருந்த பாவங்களைப் போக்கி விஷய ப்ராவண்யத்தில் நின்றும் மீட்டு உன்னளவிலே யீடுபடுத்திக்கொண்டு இவ்வளவு செய்த நீ மறுபடியும் நான் விஷயப்ரவணனாம்படி வழிதேடுவது தகுதியோ? இந்நிலத்திலே வைப்பது விஷயப்ரவணனைக்கு இட்ட வழியன்றோ. ... .... ... (ச)

தீர்மருந்தின்றியைந்துநோயடும் செக்கிலிட்டுத்திரிக்குமைவரை *
நேர்மருங்குடைத்தாவடைத்து நெகிழ்ப்பானொக்கின்றாய் *
ஆர்மருந்தினியாகுவார் ? அடலாழியேந்தியசுரர்வன்குலம் *
வேர்மருங்கறுத்தாய் ! விண்ணுளார்பெருமானேயோ ! (௭)

| | | | |
|---|---|---|---|
| அடல் ஆழி ஏந்தி | தேசு பொருந்திய திருவாழியைக் கையிலே தாங்கி | ஐந்து நோய் அடும் | ஐந்து வகைப்பட்ட சப்தாதி விஷயங்களாகிற நோய்களாலே முடிக்கக்கடவதான |
| அசுரர் வன்குலம் | அசுரர்களின் பிரபலமான கூட்டங்களை | செக்கில் இட்டு | (சரீரமாகிற) செக்கிலே தள்ளி |
| | | திரிக்கும் ஐவரை | நெருக்குகிற பஞ்சேந்திரியங்களை |
| மருங்கு வேர் அறுத்தாய் | பக்கவேரோடே அறுத்தவனே ! | நேர் மருங்கு உடைத்தா அடைத்து | நேரிலும் பக்கங்களிலுமாக நிறுத்தி |
| ஓ விண்ணுளார் பெருமானே | ஓ நித்யஸூரிநாதனே ! | நெகிழ்ப்பான் ஒக்கின்றாய் | நெகிழ விடுவான் போலேயிராநின்றாய்; |
| தீர் மருந்து இன்றி | மாற்று மருந்தில்லாதபடி [அபரிஹார்யமாக] | இனி மருந்து ஆகுவார் ஆர் | இனி மருந்தாகக்கூடியவர் யார் ? |

* * *—[தீர் மருந்தின்றி] நான் ஒரு ஸமாதானம் செய்துகொள்ள முடியாதபடி விஷயங்களாலும் இந்திரியங்களாலும் என்னை நலிந்து நீ கைவிட்டால் ரக்ஷகராவார் வேறு உளரோ வென்கிறார். என்னை ஹிம்ஸிப்பவர்களும் ஐவர்; ஹிம்ஸைக்குப் பரிகாரமான வஸ்துக்களும் ஐந்து என்கிறார். சப்தாதி விஷயங்களாகிற ஐந்து நோய்களாலே பஞ்சேந்திரியங்கள் நலிகின்றமையைச் சொன்னபடி. தீர்மருந்தின்றி என்றது—வேறொரு ப்ரதிக்ரியை பண்ணவொண்ணாதபடி என்றவாறு. ஸர்வசக்தியான ஸர்வேச்வரனாலும் போக்கப் போகாதவையாதலால் இங்ஙனே சொல்லுகிறது. சரீரத்தை இங்குச் செக்கு என்கிறது. செக்கானது சுழன்று கொண்டேயிருப்பதும், தன்னிடத்தில் வந்து விழுந்த எள் முதலிய வஸ்துக்களை ஒரு கணப்பொழுதில் உருமாய்க்குமதுமாயிருத்தலால் இது சரீரத்திற்குப் பொருத்தமான த்ருஷ்டாந்தமென்க.

நேர் மருங்கு உடைத்தா அடைத்து—நேர்—எதிர்; மருங்கு—பக்கம். என்னுடைய எதிரிடமும் பக்கவிடமும் இந்த ஐந்து சத்துருக்களை யுடைத்தாம்படி நெருக்கி என்றபடி. எங்குப் பார்த்தாலும் இவையேயாம்படி செய்து என்கை. இங்கே ஈடு;—"அபிமந்யு என்றொரு பாலனை நலிகைக்கு அதிரத மஹாரதர்களடங்கலும் சூழப்போந்தாப்போலே இந்திரியங்களைக் கையடைப்பாக்கி."

நெகிழ்ப்பானொக்கின்றாய்—நெகிழவிடுவான் போலேயிராநின்றாய்: உன்பக்கலில் உண்டாகியிருக்கிற விச்வாஸமும் குலையும் போலேயிராநின்றது என்று தாற்பரியம். இதுவரையில் உன்னை ரக்ஷகனென்று நம்பியிருந்தேன் : ரக்ஷகனல்லன், பக்ஷகன்போலும் என்று இப்போது நினைக்க வேண்டியதாகிறதே! என்றவாறு.

இப்படிச் சொன்ன ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! உம்முடைய கஷ்டத்திற்கு நீரே ஒரு மருந்து தேடிக்கொள்ளப்பாரும்' என்ன, ஆர்மருந்தினியாகுவார்? என்கிறார். மருந்து என்றும் மருத்துவனென்றும் ப்ரஸித்தனான நீயே கைவிட்டால் இனி வேறொரு மருந்து தேடப்போமோ? என்கை. மருந்து என்பது அசேதநமாகையாலே 'எது மருந்தாகும்' என்று சொல்லவேண்டுவது முறைமையாயிருக்க 'ஆர் மருந்தினியாகுவார்' என்று உயர்திணையாகக் கூறினமையால் ஆழ்வாருடைய மருந்து ஒரு பரமசேதநனாகவே யிருக்க

வேணுமென்னுமிடம் பெறப்படுகிறது. *நிர்வாணம் பேஷஜம் பிஷக்* என்ற ஸஹஸ்ரநாமம் இங்கே அநுஸந்திக்கத்தக்கது.

அடலாழியேந்தி யசுரர் வன்குலம் வேர்மருங்கறுத்தாய்—இங்கு அசுரர் என்னும்சொல் அஸுரர்களென்கிற தைத்யவகுப்பினரை மாத்திரம் சொல்லுவதன்று; ஆஸுர ப்ரக்ருதிகளாயுள்ளவர்களை யெல்லாம் சொல்லுகிறது; ஆகவே ராக்ஷஸர்களும் இச் சொல்லில் அடங்குவர்கள். ஸுதர்சநசதகத்தில் * காசீ விப்லோஷ சைத்யக்ஷபண* என்பது முதலான சுலோகங்களில் அடலாழியின் அதிசயம் அறியத்தக்கது.

விண்ணுளார் பெருமானேயோ!—இவ்விடத்தில் பரமபோக்யமான ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"ஒருத்தன் சிறையிருக்க, பிதாவும் மாதாவும் ப்ராதாக்களுமாய்க் கல்யாணம் செய்யக்கண்டு தான் கூடப்பெறுதே நோவுபடுமாபோலே, நித்யஸூரிகளும் பிராட்டியும் அவனுமாகப் பரமபதத்திலே யிருக்கிறபடியை அநுஸந்தித்து அங்கே கேட்கும்படி கிடந்து கூப்பிடுகிறுர். ஹா ராம! ஹா லக்ஷ்மண! ஹா ஸுமித்ரே* என்று பிராட்டி தனியே கிடந்து கூப்பிட்டாப்போல, பரமபதத்திலிருப்பும் அணிகலங்கும்படி கூப்பிடுகிறுர்." ... (ரு)

விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையும்செறும் ஐம்புலனிவை *
மண்ணுளென்னைப்பெற்றுல் என்செய்யாமற்றுநீயும்விட்டால் ? *
பண்ணுளாய்கவிதன்னுளாய் பத்தியினுள்ளாய்பரமீசனே! * வந்தேன்
கண்ணுளாய்நெஞ்சுளாய் ! சொல்லுளாய் ! ஒன்றுசொல்லாயே. (சு)

| | |
|---|---|
| விண் உளார் | விண்ணுலகில் உள்ளவர்களாய்க் கொண்டே |
| பெருமாற்கு | பராத்பரனை உனக்கு |
| அடிமை செய்வாரையும் | அடிமை செய்பவர்களான நித்ய ஸூரிகளையும் |
| மண்ணுள் | இந்நிலத்திலே |
| செறும் | மேலிட்டு நலியக்கூடிய |
| ஐம்புலன் இவை | இந்த பஞ்சேந்திரியங்கள் |
| என்னை பெற்றால் என் செய்யா | (இவற்றை வெல்லுதற்குரியவலிமையற்ற) என்னிடம் வந்து சேர்ந்தால் இவை என்னதான் செய்யமாட்டா; |
| மற்று | அதற்குமேலே |
| நீயும் விட்டால் | சக்தனை நீயும் கைவிட்டால் |
| (என் செய்யா) | என்ன செய்யமாட்டா; [எதுவும் செய்யக்கூடுமன்றே.] |
| பண் உளாய் | (என்னுடைய) ஆர்த்த ஸ்வரத்தை அறியுமவனே ! |
| கவிதன் உளாய் | (என்னுடைய) ஆர்த்தியே வடிவெடுத்த சொற்களை யறியுமவனே! |
| பத்தியின் உள்ளாய் | என்னுடைய ஆற்றாமையை அறியுமவனே! |
| பரம் ஈசனே | பராத்பரனே! |
| என் கண் உளாய் நெஞ்சு உளாய் சொல் உளாய் | என்னுடைய கண்ணோடும் நெஞ்சோடும் வாகிந்திரியத்தோடும் வாசியற உன்னை ஸந்நிதி பண்ணியிருப்பவனே! |
| வந்து | என்னளவில் வந்து |
| ஒன்று சொல்லாய் | (அபயமாக) ஒரு வார்த்தை யருளிச் செய்யவேணும். |

* * *—[விண்ணுளார் பெருமாற்கு] நம்மிற் காட்டில் எவ்வளவோ மேம்பட்டவர்கள் என்று ப்ரஸித்தி பெற்றவர்களையும் நலியக்கடவ இந்திரியங்கள் என்னை என்னபாடு படுத்தா? என்கிறுர். விண்ணுளாருடைய பெருமானுக்கு அடிமைசெய்வாரையும் செறும் என்றும் பொருள்கொள்ளலாம்; விண்ணுளார்— விண்ணுலகத்திலே யிருப்பவர்களாய்க் கொண்டு. பெருமானுக்கு அடிமை செய்வாரையும் செறும் என்றும் பொருள் கொள்ளலாம். அடிமை செய்வார்—அடிமைசெய்ய ருசியுடையார் என்றும், அடிமைசெய்து கொண்டிருப்பவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். ஸ்வர்க்கலோக வாஸிகளான இந்திராதி தேவர்களைக் கொள்ளவுமாம்; பரமபதவாஸிகளான கருத்மான் முதலிய நித்யஸூரிகளைக் கொள்ளவுமாம். இருவகுப்பினர் விஷயமாகவும் இரண்டு இதிஹாஸங்களை ஆசாரியர்கள் எடுத்துக்காட்டி இவ்வர்த்தத்தை முதலிக்கின்றுர்கள்.

நரகாஸுரனென்பவன் ப்ராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகல ப்ராணிகளையும் நலிந்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம் புணர்வதாகக் கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரிசிகரமான ரத்னபருவதத்தையும் தேவமாதாவான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்துபோனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக் கொண்டுபோகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரன் வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்து ஸத்யபாமையுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தையடைந்து போர்செய்து நரகனைக்கொன்று, அவன் பல திசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாயிரத்தொருநூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு, நரகனால் முன்பு கவரப்பட்ட (இந்திரமாதாவான அதிதி தேவியின்) குண்டலங்களை அவளிடம் கொடுக்கும்பொருட்டு ஸத்யபாமையுடனே கருடன் தோள்மேல் ஏறிக்கொண்டு தேவலோகத்துக்குச்செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப்பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்க வில்லையாதலின், அதனைக்கண்டு பாமை விருப்புற்றவளாய் நாதனை நோக்கி 'பிராணநாதனே! இந்தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுபோக வேண்டும்' என்றதைக் கண்ணபிரான் திருச்செவி சார்த்தி உடனே அந்த வ்ருக்ஷத்தை வேரோடு பெயர்த்துக் கருடன் தோளின் மேல் வைத்தருளி த்வாரகைக்குக் கொண்டுபோக, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் இந்திரன் தேவஸைன்யங்களுடனே வந்து மறித்துப் போர்செய்தான்; கண்ணபிரான் அவனை ஸகல ஸைன்யங்களுடன் பங்கப்படுத்திப் பின்பு அம்மரத்தைக் கொணர்ந்து ஸத்யபாமையின் வீட்டுப் புழைக்கடைத் தோட்டத்தில் நாட்டியருளினன் என்கிற மேல்கதை யிருக்கட்டும்; தனக்கு மஹோபகாரம் செய்தருளின பகவான் திறத்திலே இந்திரன் த்ரோஹியானனென்பது இவ்வரலாற்றினின்று அறியத்தக்கது. "விண்ணுளாரையும் ஐம்புலன் செறும்" என்னத் தட்டுண்டோ?

ஈட்டில் மற்றொருகதையை எடுத்தருளிச் செய்கிறார்—அதாவது; "ஸுமுகனென்கிற ஸர்ப்பவிசேஷம் திருவடிகளிலே சென்று கிட்ட, பெரிய திருவடி ஓடிச்சென்று 'எனக்கு ஆமிஷமாயிருக்கிற இத்தைக் கைக்கொண்டு நோக்குவதே!' என்று வெறுத்து 'தேவரீரையும் நாய்ச்சிமாரையும் நெடுங்காலம் வஹித்துக்கொண்டு திரிந்தேன், நான் என் பெற்றேன்' என்றானிறே. இதிறே ஸம்ஸாரஸ்வபாவமிருக்கும்படி."

இங்கு அறியவேண்டிய கதையாவது—தேவேந்திரனுக்கு நண்பனும் மந்திரியும் ஸாரதியுமான மாதலியானவன் அழகிலும் குணத்திலும் மிகச் சிறந்த தன் புதல்வியான குணகேசியென்னும் கன்னிகைக்குத் தக்க வரனைத் தேடுபவனாய்ப் புறப்பட்டு வழியில் நாரதமுனிவரைச் சந்தித்துத் துணையாகக் கொண்டு பலவுலகங்களிற் சென்று பார்த்துத் தக்க வரனைக் காணாமல் பாதாளலோகத்தில் வாஸுகியினால் ஆளப்படுகின்ற போகவதி யென்னுஞ் சிறந்த நகரத்தை யடைந்து அங்கேயிருக்கின்ற அனேக குமாரர்களைப் பார்க்கின்றபொழுது ஸுமுகனென்னும் நாககுமாரனை நோக்கி அவனுடைய ரூபலாவண்யங்களிலீடுபட்டு அவனுக்குத் தன் மகளைக் கொடுக்கக் கருதி அவனது பாட்டனாரைக் கண்டுபேச, அவர் மகிழ்ச்சியோடு துயரமுங் கொண்டவராய் 'இவனது தந்தையைக் கருடன் பக்ஷித்து இந்த ஸுமுகனையும் ஒரு மாதத்திற்குள் பக்ஷிப்பேனென்று சொல்லியிருக்கின்றானாதலால் இவ

னுக்கு மணஞ்செய்தல் ஏற்றதன்று' என்று தெரிவித்தார். அதுகேட்ட மாதலி 'என்னால் மருமகனாக வரிக்கப்பட்ட உனது பௌத்திரன் எங்களுடன் வந்து தேவேந்திரனைக் காண்பனாயின் அவனுக்கு ஆயுளைத் தந்து கருடனைத் தடுக்க முயல்வேன்' என்று சொல்லி ஸுமுகனை யழைத்துக்கொண்டு இந்திரனிடஞ் சென்றுசேர, அங்கு இந்திரனுடனே உபேந்திர மூர்த்தியான திருமாலும் வீற்றிருக்கையில், நிகழ்ந்த செய்திகளை யெல்லாம் நாரதமுனிவர் சொல்லக்கேட்ட திருமால் இந்திரனை நோக்கி 'இவனுக்கு அமிர்தத்தைக் கொடுக்கலாம்; அதனால் இவர்கள் இஷ்டஸித்தி யடைந்தவராவர்' என்று சொல்லியருள, இந்திரன் கருடனது பராக்கிரமத்தை ஆலோசித்துத் திருமாலை நோக்கி 'தேவரீரே அவனுக்கு அமுதத்தையும் ஆயுளையும் தந்தருள்க' என்றதற்கு, திருமால் 'ஸகல லோகாதிபதியான நீ கொடுப்பதே போதும்; அதனை மாற்றுபவர் யார்?' என்றுகூற, பிறகு இந்திரன் ஸுமுகனுக்கு அமுதமுண்பியாமல் நீண்ட ஆயுளை வரமளிக்க, உடனே மாதலி ஸுமுகனுக்குத் தன்மகளை மணம் புரிவித்தான். இச்செய்தியைக் கேள்வியுற்ற கருடன் கோபங்கொண்டு இந்திரனோடு மாறுபட்டு, தனது இரையை அவன் தடுத்து விட்டதற்காகப் பலபல நிஷ்டூர வார்த்தைகள் கூறுகையில் ஸுமுகன் தான் நீண்ட ஆயுளை வரம் பெற்றிருந்தாலும் கருடனுடைய கறுவுதலைக்கண்டு அஞ்சிப் பாம்புவடிவாய்த் திருமாலினருகிற் சேர்ந்து அப்பெருமானது கட்டிலின் காலைக் கட்டிக்கொண்டு சரண்புக, பின்பு கருடன் திருமாலை நோக்கி 'ஸகல தேவர்களினுள்ளும் மஹா பலசாலியான வுன்னைச் சிறிதும் சிரமமின்றி இறகு முனையாற் சுமக்கின்ற என்னினும் வலிமையுடையார் யார்? இதனைச் சற்று ஆலோசித்துப்பார்' என்று செருக்கிப் பேச, அக்கடுஞ் சொற்கேட்ட திருமால் கருடனை நோக்கி 'மிகவும் துர்ப்பலனான நீ உன்னைத் தானே மஹா பலசாலியாக எண்ணி எனது முன்னிலையில் தற்புகழ்ச்சி செய்து கொண்டது போதும்; மூவுலகமும் எனது உடம்பை வஹிக்க முடியாவே; யானே எனது சக்தியால் என்னை வஹித்துக்கொண்டு உன்னையும் வஹிக்கின்றேன்? எனது இந்த வலக்கை யொன்றை மாத்திரமாவது நீ தாங்கவல்லையாகில் உனது செருக்குமொழி பயன் பட்டதாகும்' என்று சொல்லிக் கருடனது தோளில் தனது வலக்கையை வைத்த மாத்திரத்தில் அவன் அதன் அதிபாரத்தைத் தாங்க மாட்டாமல் வருந்தி வலிமையொழிந்து மூர்ச்சித்து விழுந்து, பின்னர் அரிதில் தெளிந்து திருமாலை வணங்கிப் பலவாறு பணிமொழி கூறி 'என் பிழையைப் பொறுத்தருள வேண்டும்' என்று பிரார்த்திக்க, திருமால் திருவுள்ளமிரங்கி அவனுக்கு ஸமாதானங்கூறித் தனது திருவடியின் பெருவிரலால் ஸுமுகனை யெடுத்துக் கருடன் தோளிலிட்டு 'இவனை நீ உனது அடைக்கலமாகக் கொண்டு பாதுகாக்கக் கடவை' என்று குறிப்பிக்க. அதுமுதல் கருடன் ஸுமுகனோடு நட்புக்கொண்டு அவனைத் தோளில் தரிக்க, அவனும் அச்சமின்றி 'கருடா! ஸுகமா?' என்று க்ஷேமம் விசாரிப்பவனாயினன்—என்பதாம்.

இன்னமும் ஈட்டு ஸ்ரீ ஸூக்திகள் காண்மின்;—"அவன் தான் அவதரித்து சோகிப்பது மோஹிப்பதானப் போலேயாயிற்று இவர்களும். அன்றிக்கே, * அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கிற ஸர்வேச்வரனுக்கு, ஸம்ஸாரத்திலே முமுக்ஷுக்களாய் கைங்கர்யத்திலே அவகாஹித்திருக்கக் கடவரானவர்களையும் நெருக்கக்கடவ இந்த்ரியங்களிவை. ஒரு விச்வாமித்ர ஸுக்ரீவாதிகளைக் கண்டோமிறே. ஜ்ஞாநாதிகனான விச்வாமித்ரனகப்பட ஒரு விஷயத்தின் காற்கடையிலே நெடுங்காலம் கிடந்தானிறே. பெருமாளுக்குப் பரிவரான மஹாராஜர், பெருமாளை மின்னுக்கும் இடிக்கும் இரையாக விட்டுவைத்து நாலுமாஸம் இந்த்ரிய பரவசராய் அவ்வழியென்று நினைத்திலரிறே."

"மண்ணுளேன்னைப் பெற்றால்" என்ற சொல்நயத்தால் ஆழ்வார் தாம் விண்ணு ளாரில் ஒருவர் என்பது தோன்றுமென்ப.

பின்னடிகளின் உட்கருத்தை நம்பிள்ளை வெகு அழகாகவும் உருக்கமாகவும் எடுத் தருளிச்செய்கிறபடி பாரீர்;—"[பண்ணுளாய்] என் ஆர்த்தஸ்வரம் கேளாதிருக்கிறாயல்லையே. [கவி தன்னுளாய்] என்னுடைய ஆர்த்திகர்ப்பமான உக்தி கேளாதிருக்கிறாயல்லையே. [பத்தியினுள்ளாய்] இப்படி சொல்லுகிற ஆற்றாமை அறியாதிருக்கிறாயல்லையே. [பரமீசனே] உனக்கு முடியாததொன்று உண்டாயிருக்கிறாயல்லையே. உன் சேஷித்வம் ஏறிப் பாயாத இடமுண்டோ?" .... ... ... .... (சு)

ஒன்றுசொல்லியொருத்தினில் நிற்கிலாத ஓரைவர்வன்கயவரை*
என்றுயான்வெல்கிற்பன் உன்திருவருளில்லையேல்? *
அன்றுதேவரசுரர்வாங்க அலைகடலரவமளாவி * ஓர்
குன்றம்வைத்த எந்தாய் கோடியேன்பருகின்னமுதே! (எ)

| | | | |
|---|---|---|---|
| அன்று | பண்டொரு காலத்திலே | கொடியேன் பருகு இன் அமுதே | பாவியேனான நானும் பருகும் படியான இன்னமுதமே! |
| தேவர் அசுரர் | தேவர்களும் அசுரர்களும் | உன் திரு அருள் இல்லை ஏல் | உன்னுடைய கிருபை இல்லையாகில், |
| வாங்க | வலிக்கும்படியாக | ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத ஓர் ஐவர் வன் கயவரை | ஆறியிருக்கமாட்டாத பஞ்சேந்திரியங்களாகிற பிரபலக் கொடியவர்களை |
| அலை கடல் | அலையெறிகிற கடலிலே | | |
| அரவம் அளாவி | வாஸுகியென்கிற பாம்பைச் சுற்றி | | |
| ஓர் குன்றம் | மந்தர மலையை | யான் என்று வெல்கிற்பன் | அடியேன் என்றைக்கு வெல்லவல்லவனாவேன்? |
| வைத்த எந்தாய் | நாட்டின பெருமானே! | | |

* * * [ஒன்று சொல்லி] அடியார்கட்கு அருந்தொழில் செய்தும் அபேக்ஷிதம் தலைக் கட்டுவதையே இயல்வாக வுடையனான உன்னுடைய கருணையில்லையாகில் பிரபலமான இந்திரியங்களை நான் வெல்லுவதென்றொரு பொருளுண்டோ வென்கிறார்.

ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத—ஒரு விஷயத்திலே சாபலத்தைப் பண்ணி அதுகை புகும்வரையில் அதிலே நிலைநில்லாத என்றபடி. ஒருத்து—ஒருமைப்பாடு. இன்—சாரியை; இல்—ஏழனுருபு. கயவர்—கொடியர். "ஓர் அர்த்தத்திலே நிற்கக் கடவதல்லாத" என்று ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்கையாலே அதற்கேற்க "ஒரத்தனில்" என்று பாடமிருக்கலாம் என்றார் ஒரு பெரியார். அர்த்தம் என்பது 'அத்தன்' என்று திரியலாம்; மகரனகரப்போலி. ஆனாலும் "ஒருத்து—ஒருமைப்பாடு" என்று வியாக்கியானங்கள் காண்கையாலே பாடத்திருத்தம் வேண்டாவென்க.

பின்னடிகளிற் குறித்த வரலாறு:—முன்னொரு காலத்தில் இவ்வண்ட கோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச் சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப்பெற்ற ஒரு வித்யாதர மகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கை வீணையில் தரித்துக்கொண்டு பிரமலோக வழியாய் மீண்டுவருகையில் துர்வாஸமஹாமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவத யானையின்மேற் பவனி வந்துகொண்டிருந்த இந்திரனைக்கண்டு அவனுக்கு அம்

மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்தவளவில் அம்மதயானை அதனைத் துதிக்கையாற் பிடித்திழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முனிவரன் கடுங்கோபங்கொண்டு இந்திரனை நோக்கி 'இவ்வாறு செல்வச்செருக்குற்ற உன்னுடைய ஐச்வரியங்களெல்லாம் ஒளிந்துவிடக்கடவன' என்று சபிக்க, உடனே தேவர்களின் செல்வம் ஒழிந்தன; ஒழியவே அசுரர் வந்து பொருது அமரரை வென்றனர். பிறகு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக் கொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகியென்னும் மஹா நாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர். அப்பொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமை வடிவமெடுத்து அம்மலையின் கீழே சென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனன். இப்படி ஸ்ரீமந்நாராயணன் அக்கடலினிடையே மஹா கூர்மமாய் மந்தர பர்வதத்திற்கு ஆதாரமாய் எழுந்தருளியிருக்க, வாஸுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப் பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய இருதிறத்தாரும் அதனை வலியப்பிடித்து இழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அத்திருமால் தான் ஒரு திருமேனியைத் தரித்து இருவகுப்பினர் பக்கத்திலேயும் நின்று வாஸுகியின்வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக் கடைந்தனன். அப்பால் அந்த மஹாவிஷ்ணு தந்வந்தரி யென்னும் தேவரூபத்தைத் தரித்து அம்ருதபூர்ணமான கமண்டலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு அந்த க்ஷீரஸமுத்திரத்திலிருந்து தோன்றினன். அப்பொழுது அசுரர்கள் தந்வந்தரியின் கையிலிருந்த அம்ருத கலசத்தை பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்ள அந்த எம்பெருமான் ஜகந்மோஹனமான ஒரு பெண்வடிவத்தைத் தரித்து அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்களுடைய கோஷ்டிக்கு மாத்திரம் ப்ரஸாதித்தனன்.

[இப்படி எம்பெருமான் மோஹினீரூபத்தால் அசுரர்களை மயக்கித் தேவர்களுக்கே அமிருதத்தைப் பங்கிட்டுக் கொடுத்துவருகையில், ராஹுவென்னும் ஓர் அசுரன் தான் இருக்கவேண்டிய அசுரர் கூட்டத்தைவிட்டுத் தந்திரமாகத் தேவகோஷ்டியினிடையிலே புகுந்து கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனை ஸூர்ய சந்திரர்கள் குறிப்பித்த மாத்திரத்தில், எம்பெருமான் அவனை அகப்பையாலடித்துத் தலைவேறு உடல்வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர் நீங்காத அந்தத் தலையும் உடலும் விஷ்ணுவின் அநுக்ரஹத்தால் ராஹு கேதுக்கள் என இரண்டு க்ரஹங்களாகி ஸூர்யன் முதலிய ஏழு க்ரஹங்களோடு சேர்ந்து தம்மேற் கோள்சொன்ன ஸூர்ய சந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சில காலத்தில் அவர்களைப் பிடித்துக்கொள்ளுகின்றன; அதுவே க்ரஹணமெனப் படுகின்றது—என்பதும் இங்கு அறியத்தக்கது.] ... ... .... .... .... (எ)

இன்னமுதெனத்தோன்றி ஓரைவர்யாவரையும்மயக்க* நீவைத்த
முன்னமாயமெல்லாம் முழுவேரரிந்து * என்னையுன்
சின்னமும்திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக் கைதொழவேயருளெனக்கு*
என்னம்மா! என்கண்ணா! இமையோர்தம்குலமுதலே! (அ)

| | |
|---|---|
| என் அம்மா | என் ஸ்வாமியே ! |
| என் கண்ணை | என்க்கு எளியவனானவனே ! |
| இமையோர் தம் குலம் முதலே | நித்யஸூரிகளின் திரளுக்குத் தலைவனே ! |
| ஓர் ஐவர் | சப்தாதி விஷயங்கள் ஐந்தும் |
| இன் அமுது என தோன்றி | இனிய அமிருதம்போல் போக்யமாய்த் தோன்றி |
| யாவரையும் மயக்க | எப்படிப்பட்டவர்களையும் மயக்கும்படியாக |
| நீ வைத்த | நீ உண்டாக்கி வைத்த |
| முன்னம் மாயம் எல்லாம் | அநாதியான ஸம்ஸாரத்தை யெல்லாம் |
| முழுவேர் அரிந்து | வாஸனையோடே போக்கி |
| என்னை | அடியேனை |
| உன் சின்னமும் திரு மூர்த்தியும் | உனது அஸாதாரண லக்ஷணங்களான சங்கசக்ராதிகளையும் திவ்யமங்கள விக்ரஹத்தையும் |
| சிந்தித்து | நெஞ்சார நினைத்து |
| ஏத்தி | வாயாரத் துதித்து |
| கை தொழ | கையாரத் தொழும்படியாகப் பண்ணி |
| எனக்கே அருள் | எனக்கென்று விசேஷித்த க்ருபையைப் பண்ணவேணும். |

* * * [இன்னமுதேன.] எனக்குண்டான ப்ரக்ருதி ஸம்பந்தத்தையறுத்து, மனமொழி மெய்களாலே உன்னையே நான் நிரந்தரமாக அநுபவிக்கும்படி பண்ணியருளவேணுமென்கிறார். முன்னம் [அநுபவிக்குங்காலத்தில் அமுதம்போல் பரமபோக்யமாகத் தோற்றுவதும், பிறகு பரிபாகத்தில் விஷமாயிருப்பதும் சப்தாதி விஷயங்களுக்குண்டான இயல்பு. இங்கு " இன்னமுதேனத்தோன்றி " என்று முன்னம் தோன்றுகிற ரீதி மாத்திரமே சொல்லப்பட்டது; பரிணமத்தில் விஷமாகுமதென்னுமிடம் இங்குச் சொல்லிற்றில்லையேயாகிலும் அது சொற்போக்கில் அர்த்தாத்ஸித்தம்.

இத்திருவாய்மொழியில் பாசுரந்தோறும் ஐவர் என வருமது பஞ்சேந்திரியங்களைக் குறிக்குமதாயினும் இப்பாசுரத்தில் ஐவரென்பது சப்தாதி பஞ்ச விஷயங்களைக் குறிக்குமதாக ஆசாரியர்கள் வியாக்கியானமருளி யுள்ளார்கள். ஈடு காண்மின்;—" [ஓரைவர்] தனித்தனியே ப்ரபலமாய் அத்விதீயமான சப்தாதி விஷயங்கள் ஐந்தும்." ஆறாயிரமும் ஒன்பதினாயிரமும் இருபத்தினாலாயிரமும் இப்படியே. பன்னீராயிரவுரைகாரர் மாத்திரம் "ஐவர்—ஐந்து இந்த்ரியங்களாலே" என்று உரையிட்டார்.

சப்தாதி விஷயங்களானவை முகப்பில் பரமபோக்யம் போலத் தோற்றி எப்படிப்பட்டவர்களையும் மதிகெடுக்கும்படியாக நீ பண்ணிவைத்த பழையதான இந்த ஸம்ஸாரபந்தத்தை நிச்சேஷமாக விடுவித்து உன்னுடைய பஞ்சாயுதாதி திவ்ய சின்னங்களையும் அவற்றால் பொலியும் திருமேனியையுமே இடையறாது சிந்திக்கவும் துதிக்கவும் கைதொழவும் பாங்கான திருவருளைச்செய்யவேணுமென்று ப்ரார்த்திக்கிறாராயிற்று. ·சின்னம்—வடசொல் விகாரம். .... .... .... .... ... .... (அ)

குலமுதலடும்தீவினைக் கொடுவன்குழியினில் வீழ்க்குமைவரை *
வலமுதல்கெடுக்கும் வரமேதந்தருள்கண்டாய் *
நிலமுதலினியெவ்வுலகுக்கும் நிற்பனசெல்வனவென * பொருள்
பலமுதல்படைத்தாய் என்கண்ணா! என்பரஞ்சுடரே ! (கூ)

| | |
|---|---|
| நிலம் முதல் | பூமி முதலாக |
| இனி எவ்வுலகுக்கும் | மற்றும் ஸகல லோகங்களுக்கும் |
| நிற்பன செல்வன என | ஸ்தாவர ஜங்கம ரூபமான |
| பொருள் பல | பொருள்கள் பலவற்றையும் |
| முதல் படைத்தாய் | முன்னம் படைத்தவனே! |
| என் கண்ணா | என் கண்ணனே! |
| என் பரம் சுடரே | என் பரஞ்சோதி வடிவனே!, |
| குலம் | குலத்தை |
| முதல் அடும் | வேரோடே முடிக்கவல்ல |
| தீவினை | பாபங்களை விளைக்கவல்ல |
| கொடு வன் குழியினில் | (சப்தாதி விஷயங்களாகிற) படுகுழியிலே |
| வீழ்க்கும் ஐவரை | தள்ளக்கூடிய பஞ்சேந்திரியங்களை |
| வலம் முதல் கெடுக்கும் வலமே | மூல பலத்தோடே முடிக்கும்படியான மிடுக்கை |
| தந்தருள் கண்டாய் | அநுக்ரஹித்தருளவேணும். |

* * * விஷயங்களிலே ஆத்மாவைத் தள்ளும் இந்திரியங்கள் என்னை நலியாதபடி பண்ணவேணும் என்று இரக்கிறார்.

குலமுதலடுந்தீவினை—ஒருவன் பண்ணின பாபம் அவனோடவனோடே போகையல்லாமல் குலமாக முதலற முடிக்க வல்லவையான பாவங்களை விளைக்கக் கூடியதாய், கொடியதாய், அநுபவித்து முடியவொண்ணாதபடியாயிருக்கிற குழியிலே தள்ளி ஹிம்ஸிக்கின்றவர்களாம் ஐவர்; அவர்கள் தாம் பஞ்சேந்திரியங்களென்று பேர்பெற்ற மஹாநுபாவர்கள். அந்தப் பெருமிடுக்காளருடைய மிடுக்கை முதலிலே முடிக்கக் கடவதான உன்னுடைய அநுக்ரஹத்தைப் பண்ணியருளவேணுமென்கிறாராயிற்று முன்னடிகளில். இங்குக் குழியென்றது சப்தாதி விஷயங்களை.

இவ்விடத்து ஈடுமுப்பத்தாறாயிரத்திலும் இருபத்திநாலாயிரத்திலும்—“ * ந ஹி தர்ம விருத்தேஷு பஹ்வபாயேஷு கர்மஸு, மூலகாதிஷு ஸஜ்ஜந்தே புத்திமந்தோ பவத்விதா:. என்றானிறே மால்யவான் ராவணனுக்கு” என்கிற ஸ்ரீஸூக்தி காண்கிறது. இந்த ச்லோகம் மால்யவானுடையதாக ஸ்ரீ ராமாயணத்தில் இப்போதுள்ள பதிப்பு ஒன்றிலும் காணப்படவில்லை; திருவடியின் வார்த்தையாகக் காண்கிறது. ஆகவே இங்கு நேர்ந்திருக்கும் பிறழ்வு குறிக்கொள்ளத் தக்கது.

நிலமுதலினி இத்யாதி. பிரானே! நீ ஜகத் ஸ்ருஷ்டி முதலியவற்றைச் செய்கிறபோது உனக்கு ஆரேனும் துணைபுரிந்ததுண்டோ? ஸங்கல்ப மாத்திரத்தையே துணைக்கொண்டன்றோ செய்தாய். ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜனம் மோக்ஷமன்றோ. அது பெறவேண்டாவோ? பூமி முதலாக மற்றும் இப்படியுண்டான எல்லாவுலகங்களிலும் ஸ்தாவரஜங்கமங்களான பல பதார்த்தங்களையும் முன்பே யுண்டாக்கினாய்; அப்படிப் பொதுவான ரக்ஷணம் செய்தது மாத்திரமேயல்லாமல் கண்ணபிரானாய் வந்தவதரித்து ஒருநாடாக வடிவழகை அநுபவிப்பித்தாய்; அவ்வழகை நானொருவனே அநுபவிக்கும்படியும் உதவினாய்; இத்தனையுஞ் செய்தவுனக்கு இந்தப் பஞ்சேந்திரியப் பாவிகளிடத்தினின்று மீட்டு ரக்ஷிக்கை அரிதாயிற்றோ? என்றாராயிற்று.

இரண்டாமடியில் “வலமே தந்து” “வரமே தந்து” என்பன பாடபேதங்கள். (௬)

என்பரஞ்சுடரேயென்றுன்னையலற்றி உன்னிணைத்தாமரைகட்கு *
அன்புருகிநிற்குமதுநிற்கச் சுமடுதந்தாய் *
வன்பரங்களெடுத்தைவர்திசைதிசை வலித்தெற்றுகின்றனர் *
முன்பரவைகடைந்து அமுதம்கொண்டமூர்த்தியோ ! (௭)

| | |
|---|---|
| முன் | முன்பொரு காலத்திலே |
| பரவை கடைந்து | கடலைக் கடைந்து |
| அமுதம் கொண்ட மூர்த்தி | அமுதத்தை யெடுத்து உதவிய ஸ்வாமியே!, |
| என் பரம் சுடரே என்று உன்னை அலற்றி | எனக்கு விதேயனான பரஞ்சோதியே! என்றிப்படி உன்னை நோக்கிக் கூப்பிட்டு |
| உன் இணை தாமரைகட்கு | உனது உபய பாதங்கள் விஷயத்திலே |
| அன்பு உருகி நிற்குமது நிற்க | அன்பினாலே உருகியிருக்க வேண்டியது ப்ராப்தமாயிருக்க |

| | |
|---|---|
| | (அதற்கு விரோதமாக) |
| சுமடு தந்தாய் | (சரீரமாகிற) சும்மாட்டைத் தந்தாயே!, (அதனால்) |
| வன் பரங்கள் எடுத்து | பிரபலமான விஷய பாரங்களைச் சுமத்தி |
| ஐவர் | பஞ்சேந்திரியங்கள் |
| திசை திசை | ஒவ்வொரு மூலையாக |
| வலித்து | இழுத்து |
| எற்றுகின்றனர் | பீடிக்கின்றனர் ; |
| ஓ | இது பொறுக்கமுடியவில்லையே. |

* * * பிரானே !உன் திருவடிகளிலே அடிமை செய்கைக்கு இடையூறாய் விஷயாநுபவங்களுக்குப் பாங்கான உடம்பை எனக்குத் தந்தாய்; அதுவே ஹேதுவாகப் பஞ்சேந்திரியங்களும் பொறுக்கவொண்ணாத ஹிம்ஸைகளைச் செய்கின்றன; அவற்றைப் பரிஹரித்தருள வேணும் என்று ஆர்த்தியோடே பெருமிடறு செய்து கூப்பிடுகிறார்.

முதலில் 'என்பரஞ் சுடரே' என்று ஒருவிளி யிருப்பது அதுபோன்ற பல்லாயிரம் விளிகளுக்கு உபலக்ஷணம்; "ஸ்ரீநாத நாராயண வாஸுதேவ ஸ்ரீக்ருஷ்ண பக்தப்ரிய சக்ரபாணே, ஸ்ரீபத்மநாபாச்யுத கைடபாரே ஸ்ரீராம பத்மாக்ஷ ஹரே முராரே!; அநந்த வைகுண்ட முகுந்த க்ருஷ்ண கோவிந்த தாமோதர மாதவ........." என்றிப்படி ஓய்வின்றி எம்பெருமானது திருநாமங்களையே சொல்லிச் சொல்லிப் போதுபோக்குவதென்று ஒன்றுண்டே; அதுதான் இங்கு முதலடியில் விவக்ஷிதம்; என்பரஞ்சுடரே! என்றாற்போலே பலபல திருநாமங்களை வாயாரச் சொல்லியலற்றி நீராயுருகி நிற்கையன்றோ என் ஸ்வரூபத்திற்குச் சேருவது; பிரானே! அந்த நிலைமையிலன்றோ என்னை நீ நிறுத்தவேண்டும்; அஃதொழிய அதற்கு எதிரான நிலையிலே வைத்திருக்கின்றாயே; அதாவது விஷயாநுபவங்களுக்கு உபகரணமான ப்ரக்ருதியைத் தந்துவைத்திருக்கிறாயே! என்கிறார் முன்னடிகளில். சுமடு—இந்திரியங்கள் சுமத்தின சுமையையெல்லாம் சுமக்கைக்கீடான சரீரமாகிற சும்மாடு என்றபடி.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"ஒன்றுக்கொன்று ஒப்பாயிருப்பன இரண்டு செவ்விப் பூப்போலேயிருக்கிற உன் திருவடிகளில் போக்யதையை அநுஸந்தித்து ப்ரேம பரவசனாய் நெகிழ்ந்து நீராய் நிற்கை இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபமாகக் கடவது. [அது நிற்கச் சுமடு தந்தாய்] ஸ்வரூபமிதுவாயிருக்க உன்பக்களில் நின்றும் அகற்றி விஷயங்களிலே கொடுபோய் மூட்டக்கடவதான சரீரத்தைத் தந்தாய்; உன்னையநுபவிக்கைக்கு உறுப்பாக சேதநத்தைத் தந்தாயானாய் நீ; அதுதானே எனக்கு இழவுக்கு உடலாயிற்று. ராஜபுத்ரன், தலையில் முடியை வாங்கிச் சும்மாட்டைக்கொண்டு வழியிலே நின்றால் அது அறியாதார் சுமையெடுத்திக்கொண்டு போமாபோலேயாயிற்று பகவதநுபவத்துக்கீடாகக் கொடுத்த சரீரம் இந்திரியங்களுக்குப் பணி செய்யும்படியாய் விட்டது."

மூன்றாமடி பரிதாபமே வடிவெடுத்தது. ஒரு எளியவெளும்பன் தலையிலே அளவு கடந்த சுமையையெடுத்து வைத்துச் சிலர் சுற்றும் நின்று மூலைக்கொருவராக இழுத்தால் என்ன பாடு படலாகுமென்பது சொல்லப்போமோ? என்னால் தாங்கவொண்ணாத சுமையை என் தலைமேலே வைப்பது; ஒருவரிருவரன்றிக்கே ஐவர் வலிப்பது; அதுதானும் ஒருவழியாக வலிக்கையன்றிக்கே திசைதோறும் வலிப்பது; இப்படியானால் இது பொறுக்கக்கூடிய விஷயமோ பிரானே! என்கிறார். ஈற்றடியினால், அமுதம் கொடுப்பது சிலர்க்கு; விஷம் கொடுத்து உயிரை மாய்ப்பது சிலர்க்கு என்றிப்படி ஒரு விரதம் கொண்டிருக்கிறாயோ? என்று கேட்கிறபடி. ... .... ... .... ... (க0)

கொண்டமூர்த்தியோர்மூவராய்க் குணங்கள்படைத்தளித்துக்கெடுக்கும்* அப்
புண்டரீகக்கொப்பூழ்ப் புனற்பள்ளியப்பனுக்கே *
தொண்டர்தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன் சொல்லாயிரத்துள்ளிப்பத்தும் *
கண்டுபாடவல்லார் வினைபோம்கங்குலும்பகலே. (கக)

குணங்கள் கொண்ட } ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களைக்கொண்ட | மூர்த்தி ஓர் மூவர் ஆய் } மும்மூர்த்திகளுமாய்

| | | | |
|---|---|---|---|
| படைத்து அளித்து கெடுக்கும் | ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்ற | சொல் ஆயிரத்துள் | அருளிச் செய்த ஆயிரத்தினுள் |
| அ புண்டரீகம் கொப்பூழ் | அப்படிப்பட்ட பத்மநாபனாய் | இப் பத்தும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| புனல்பள்ளி அப்பனுக்கே | காரண ஜலத்திலே கண்வளர்ந்த பெருமானுக்கு | கங்குலும் பகலும் | ஸதாகாலமும் |
| தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் | தாஸாநுதாஸரான ஆழ்வார் | கண்டு பாட வல்லார் | பொருள்கண்டு பாடவல்லாருடைய |
| | | வினை போம் | பாவங்கள் தொலைந்துபோம். |

* * *—இத்திருவாய்மொழியைப் பாடவல்லார்க்கு இந்திரியங்களால் நலிவுபடவேண்டிய பாவங்கள் தொலையுமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகின்றார். "கொண்ட மூர்த்தியோர் மூவராய்க் குணங்கள்" என்றதை "குணங்கள் கொண்ட மூர்த்தியோர் மூவராய்" என்று அந்வயித்துக் கொள்வது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற மூன்று குணங்களுக்கும் தகுதியாக மூன்று திருக்கோலங்களைப் பரிக்ரஹித்தான் எம்பெருமான். ஸத்வகுணங்கொண்ட மூர்த்தி—தானான மூர்த்தி; ரஜோகுணங்கொண்ட மூர்த்தி—பிரமனான மூர்த்தி; தமோகுணங்கொண்ட மூர்த்தி—உருத்திரனான மூர்த்தி. பிரமனுக்கு அந்தர்யாமியாய்ப் படைத்தல் தொழிலைச் செய்தும், ருத்ரனுக்கு அந்தர்யாமியாய் ஸம்ஹாரத் தொழிலைச் செய்தும், தானான தன்மையிலே நின்று காத்தல் தொழிலைச் செய்தும் போருமவன் என்கிறது முதலடி.

அப்புண்டரீகக் கொப்பூழ்—எம்பெருமானே முதல்வன் என்பதைத் திருநாபிக்கமலமே மூதலித்துக் கொடுக்கும். இவ்வாழ்வார்தாமே பெரிய திருவந்தாதியில்* முதலாந் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்கு மென்பர் முதல்வா,! நிகரிலகு காருருவா நின்னகத்ததன்றே புகரிலகு தாமரையின் பூ * என்ற பாசுரத்தினால் வெளியிட்டருளின அர்த்தத்தை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே "ஸ்வயோ ஷேவரஷ்ணஷ்த்ரா:" என்கிற ச்லோகத்திலே "விஹோநஷாஷீவஷெ விஷிபவிநிஷா நம ஹமலத: தஷநத்ஷ ஹ ஷஹம்ஷீவாவஷிதி வீஷாஷ யதி ந:" என்பதனால் விவரித்தருளினார்.

புனல்பள்ளியப்பனுக்கே—ஜகத்தையெல்லா முண்டாக்குகைக்காக ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியைச் சொல்லுகிறது. அப்படிப்பட்ட எம்பெருமானுக்குத் தொண்டர் தொண்டர் தொண்டர்க்குத் தொண்டராம் ஆழ்வார். இங்கே நம்பிள்ளை அருளிச் செய்யும்படி பாரீர்;—"விஷயங்களையும் இந்த்ரியங்களையும் அநுஸந்தித்த நெஞ்சாறல்தீர சேஷத்வத்தினுடைய எல்லை நிலத்திலே போய் நிற்கிறார், நாபார்த்தன் மடுவிலே ஆழ விழியுமாப்போலே."

தாஸாநுதாஸசரமாவதி தாஸரான ஆழ்வாரருளிச் செய்த ஆயிரத்தினுள்ளே இத்திருவாய் மொழியைக் கண்டு பாடவல்லாருடைய வினைகள் தொலைந்திடும்.

"கங்குலும் பகலுங் கண்டு பாடவல்லார்" என்றும் அந்வயிக்கலாம்; "கண்டுபாட வல்லாருடைய கங்குலும் பகலும் வினைபோம்" என்றும் கொள்ளலாம்; இரவும் பகலுமுண்டாகிற வினைகளெல்லாம் போம் என்றபடி.... ... .... .... (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

# இரண்டாந்திருவாய்மொழி-கங்குலும் பகலும்.

---

உரையவதாரிகை:—கீழே ஆரும்பத்தின் ஈற்றுத் திருவாய்மொழியில்—பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே விழுந்து சரணம் புகுந்த விடத்திலும் ஆழ்வார் தாம் எம்பெருமானுடைய திருவடிவாரத்திலே சென்று நிற்கக் கண்டிலர். இன்னமும் இந்த ப்ரக்ருதி மண்டலத்திலேயே தம்மைக்கண்டார். சப்தாதி விஷயங்களும் இந்திரியங்களும் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே வைத்தபோதே தன்பக்கலில் நின்றும் நம்மை அகற்றப்பார்த்தானன்றே வென்று கருதிப் புலியின் வாயிலே அகப்பட்டாப்போலே கூப்பிட்டார் கீழ்த் திருவாய்மொழியிலே.

இந்த ஆர்த்தியை எம்பெருமான் அறியாதவனல்லன்; "எப்படியும் இவர்க்கு நாம் பேறுபெறுவிப்பது திண்ணம்; இவர் அங்கே வந்து செய்யும் காரியத்தை இங்கேயிருந்து தான் செய்யட்டுமே" என்றிருந்தானவன். மக்களைப் பட்டினியிட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப்போலே 'இவ்வாழ்வார் தாம் நாளுநாள் கோவுபட்டாராகில் படுகிறார்; இவருடைய திவ்யப்பிரபந்தத்தைக் கொண்டு நாட்டை வாழ்விப்போம்' என்றிருந்தான். இவர் ஒரு கொடிப்பொழுது இங்கிருந்தாலும் எம்பெருமான்றன்னாலும் திருத்தவொண்ணாத ஸம்ஸாரம் எவ்வளவோ திருந்திவாழும்படியாயன்றே விருப்பது. அதற்காகவே இவரை இங்கு வைததான் அவன். "அந்தோ! இக்கொடுவுலகத்தில் இருப்புப் பொருந்தாத நம்மைக்கொண்டோ இவன் காரியம் நிர்வஹிக்கப் பார்ப்பது! இந்நிலத்தில் இருப்புப்பொருந்துவார் பலருண்டே; அன்னவர்களில் ஆரேனுமொருவரைக் கொண்டு காரியம் பார்க்கலாகாதோ!" என்று துடிக்கிறார் ஆழ்வார். இங்கு இருப்புப் பொருந்தாதாரைக் கொண்டே காரியம் பார்க்கவேணும் என்பதே எம்பெருமானுடைய பிடிவாதமாயிற்று.

இப்படி எம்பெருமானைப் பிரிந்து துடிக்கவேண்டியதாயிற்றே யென்று நிலைகலங்கின ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து தமது பரிதாபத்தைத் தம் வாயாலே சொல்லகில்லாதாராய்த் தாய் சொல்லவேண்டும்படியான தளர்த்தியுண்டாக, திருத்தாயார் பாசுரமாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

திருத்தாயார் இப்பராங்குச நாயகியைப் பெரிய பெருமாள் [ஸ்ரீரங்கநாதர்] திருவடிகளிலே யிட்டு வைத்துக்கொண்டிருந்து இவள் அழுவது தொழுவது மோஹிப்பது பிரலாபிப்பது அடைவுகெடப் பேசுவது நெடுமூச்செறிவது அதுவும்மாட்டாதொழிவது ஸ்தப்தையாயிருப்பது முதலியவற்றை ஒவ்வொன்றாக எடுத்துச் சொல்லி இவள் திறத்திலே நீர் என் செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறீர்? என்று கேட்கிறபடியாய்ச் செல்லுகிறதாயிற்று.

நம்பிள்ளையீடு;—"இத் திருத்தாயாரும் ஸர்வபரங்களையும் அவர் தலையிலே பொகட்டுப் பெண்பிள்ளையைத் திருமணத்தூணுக்குள்ளேயிட்டு அவருடைய அசரண்ய சரண்யத்வாதி குணங்களை விண்ணப்பஞ் செய்யாநின்றுகொண்டு, ஒரு காலநியதியாதல் ஒரு தேசநியதியாதல் அதிகாரிநியதியாதலின்றிக்கே ஸர்வஸமாச்ரயணீயராயிருக்கிறபடியை யநுஸந்தித்துத் தன் பெண்பிள்ளையினுடைய தசையைத் திருவுள்ளத்திலே படுத்துகிறாள் இத் திருவாய்மொழியாலே."

*"பட்டர் இத்திருவாய்மொழி அருளிச் செய்யும்போதெல்லாம் 'ஆழ்வார்க்கு ஓடுகிற நிசையறியாதே அவருடைய ஸாவவ்ருத்தியுமின்றிக்கே யிருக்கிற நாம் என் சொல்லுகிறோம்! என்று திருமுடியிலே கையை வைத்துக் கொண்டிருப்பர்."* ... .... (*)

கங்குலும்பகலும்கண்டுயிலறியாள் கண்ணநீர்கைகளாலிறைக்கும் *
சங்குசக்கரங்களென்றுகைகூப்பும் தாமரைக்கண்ணென்றேதளரும் *
எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னும் இருநிலம்கைதுழாவிருக்கும் *
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்கின்றாயே. (க)

| | | | |
|---|---|---|---|
| செம் கயல் பாய் நீர் திரு அரங்கத்தாய் | அழகிய மீன்கள் துள்ளி விளையாடுமிடமான திருக்காவேரி சூழ்ந்த கோயிலில் சயனித்தருள்பவனே! | என்று கை கூப்பும் | என்று சொல்லி அஞ்ஜலி பண்ணி நின்றாள்; |
| | (இப் பெண்பிள்ளையானவள்) | தாமரை கண் என்றே தளரும் | (என்னைக் கடாக்ஷித்த) தாமரைக் கண்களன்றோ இவை! என்று சொல்லித் தளர்கின்றாள்; |
| கங்குலும் பகலும் | இரவும் பகலும் | | |
| கண் துயில் அறியாள் | கண்ணுறங்கப் பெறுகின்றிலள்; | உன்னை விட்டு எங்ஙனே தரிக்கேன் என்னும் | (பிரானே) உன்னைவிட்டுப் பிரிந்து தரிக்கவும் முடியுமோ?' என்கின்றாள்; |
| கண்ண நீர் கைகளால் இறைக்கும் | கண்ணீரைக் கைகளாலே இறைக்க வேண்டும்படி தாரை தாரையாய்ப் பெருக விடா நின்றாள்; | இரு நிலம் | விஸ்தீர்ணமான பூதலத்தை |
| | | கைதுழாவிருக்கும் | கைகளாலே துழாவா நின்றாள்: (ஸ்ரீரங்கநாதனே!) |
| சங்கு சக்கரங்கள் | திருவாழி திருச்சங்குகள் இதோ ஸேவை ஸாதிக்கின்றன | இவள் திறத்து என் செய்கின்றாய் | இப் பெண்பிள்ளை விஷயத்தில் ஏது செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறாய்? |

* * *—பேச்சுக்கு நிலமல்லாதபடி தன் மகளுக்குண்டாயிருக்கிற நிலைமையைப் பெரியபெருமாளுக்கு அறிவித்து இவள் விஷயமாக நீர் செய்தருள நினைத்திருக்கிறது என்னோ? என்று கேட்கிறாள் ஸ்ரீபராங்குச நாயகியின் திருத்தாய்.

கங்குலும் பகலும் கண்துயிலறியாள்—*கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே* என்று (திருவிருத்தத்தில்) அருளிச் செய்தவர் இவ்வாழ்வாரேயாதலால் இரவோடு பகலோடு வாசியறக் கண்துயிலாதே இவர்க்கு. ஸம்ஸாரிகள் உறக்கமே யாத்திரையாயிருப்பர்கள். ஆழ்வார் இந்நிலத்திலிருந்துவைத்தே இமையோர் படியாயிருப்பர். விசாரமுள்ளவர்கட்குக் கண்ணுறங்குமோ. *என்றுகொல் சேர்வதந்தோ* என்றும் *எந்நாள் யானுன்னையினிவந்து கூடுவனே* என்றும் இடையறாத விசாரங்கொண்டவிவர்க்குக் கண்ணுறங்க விரகில்லையன்றோ. "கண்துயில் கொள்ளாள்" என்னாதே 'கண்துயில் அறியாள்' என்றதன் கருத்தை நம்பிள்ளை காட்டியருளுகிறார்—"ஸம்ச்லேஷத்தில் அவன் உறங்கவொட்டான்; விச்லேஷத்தில் விரஹவ்யஸநம் உறங்கவொட்டாது; ஆகையாலே இவளுக்கு இரண்டுபடியாலும் உறக்கமில்லாமையாலே அறியாளென்கிறது."

கண்ணநீர் கைகளாலிறைக்கும்—*தூராதமனக்காதல் தொண்டர் தங்கள் குழாங்குழுமித் திருப்புகழ்கள் பலவும்பாடி ஆராத மனக்களிப்போடழுத கண்ணீர் மழைசோர* என்றும், *ஏறடர்த்ததும் ஏனமாய் நிலங்கீண்டதும் முன்னிராமனாய் மாறடர்த்ததும் மண்ணளந்ததும் சொல்லிப்பாடி வண்பொன்னிப் பேராறு போல்வரும் கண்ணநீர் கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றஞ் சேறுசெய் தொண்டர்* என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானுடைய ஒவ்வொரு குணசேஷ்டிதங்களை நினைத்துத் தாரைதாரையாய்க் கண்ணீர் பெருக

லைக் கொண்டுசென்று திருக்காவேரியிலே போடவல்லார் ஆரேனுமுண்டோ!' என்று அலே பாய்வதாகக் கருத்துத் தோன்றும். திருக்காவேரியிலே கொண்டுவந்து போடுவானேன்? தம் கண்ணெதிரே தாமிரபர்ணி இல்லையோ? அதில் விழலாகாதோவென்று சிலர் கேட்கக் கூடுமே; அதற்கு நம்பிள்ளையருளிச் செய்கிறார்—"திருப்பொருநலில் நீர், பிரிந்தார்க்கு நிலாப் போலே உபதப்தமாயிரா நின்றதுபோலே." என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. தம்முடைய தாபம் தாமிரபர்ணியிலும் ஏறிப்பாய்ந்து அதிலே அடிவைக்கவும் அணுகவும் போகாமையாலே திருக்காவேரியிலே திருவுள்ளம் சென்றதென்கை.

வெவ்வுயிர்த்துயிர்த்து உருகும்—பிரிந்தவர்கள் பூவும் பல்லவமுமான செடி கொடி மரங் களை அருகே கண்டால் ஆறியிருக்க மாட்டார்களே; *உஷ்ணேவ நி:ச்வாஸோ வ்ருக்ஷாந் பல்லவதாரிண:—தஹந்தீமிவ நிச்ச்வாஸை: வ்ருக்ஷாந் பல்லவதாரிண:* என்று பிராட்டியான வள் பல்லவந்திகழ் பூஞ்செடிகளை பெருமூச்செறிந்து அழிக்க நினைத்தாப்போலே இப் பராங் குச நாயகியும் * நீள்பொழில்குருகூரை உஷ்ணோஷ்ணமான பெருமூச்செறிதலாலே பங்கம் செய்யப் பார்த்தாள்போலும். உருகும் என்கிறவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— "உருகுகிறபடியே நிற்குமத்தனை; இனி நெடுமூச்செறிகைக்கு தர்மியுமில்லையோ வென்னும் படி யுருகும்; வெவ்விதாகப் பலகால் நெடுமூச்செறிந்து அவ்வுஷ்ணத்தாலே உருகாநிற்கும்."

முன்செய்தவினையே முகப்படாயென்னும்—எம்பெருமான் என்னை இப்படி உபேக்ஷிக் கும் படி நான் என்ன பாவம் பண்ணிவிட்டேன்? அப்படி நான்செய்த பாவம் ஏதேனுமுண் டாகில் அது என்னெதிரே வந்து நிற்கட்டுமே என்கிறாள். நாம் முன்செய்த முழுவினையால் இழக்கிறோமேயல்லது அவன்மேலே பழிசொல்லிப் பயனென்? என்று திருவுள்ளம்போலும். * மமைவ து³ஷ்க்ருதம் கிஞ்சித் மஹத³ஸ்தி ந ஸம்ஶய:—மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹதஸ்தி ந ஸம்சய: * என்று பிராட்டி தான்செய்த பாபத்தின் பலனைத் தான் அநுபவிப்பதாகச் சொன்னாளன்றோ.

அப்படி நான் பாபம் செய்திருந்தால்தானென்ன? பாபமென்று ஒரு பெருமூட்டை ஏதேனுமுண்டோ? உன் திருவுள்ளத்தில் உதிக்கின்ற நிக்ரஹ ஸங்கல்பத்திற்கேயன்றோ பாப மென்று பெயர். நீ திருவுள்ள மிரங்கினால் அந்த நிக்ரஹ ஸங்கல்பம் குலையாதோ? உன் இரக்கம் எங்கே போயிற்று? என்கிறாளாயிற்று 'முகில்வண்ணா தகவு இதோ' என்னும். நீ முகில் வண்ணனல்லையோ? மேகத்திற்குண்டான தன்மையெல்லாம் உனக்குமுண்டே; பெய்ய நினைத்த இடமளவும் சென்று பெய்யுமதன்றோமேகம்; அது கைம்மாறு கருதுவது முண்டோ? புண்ய பாபங்களைப் பார்த்துப் பின்வாங்குவது தானுமுண்டோ? என்கிறாள். 'தகவு இதோ' 'தருவ தோ' என்பன பாடபேதங்கள்.

நம்முடைய ஔதார்யம் எங்கே பலிக்கக்கண்டு முகில்வண்ணா! என்கிற இவ் வார்த்தை சொன்னதென்று எம்பெருமான் கேட்க; அதற்குத் தாய் விடை கூறுகின்றாள் போலும்; முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய்! என்கிறாள். முன்பு ஜகத்ஸ்ருஷ்டி முதலிய வற்றை நிர்ஹேதுகமாகப் பண்ணினவனன்றோ நீ, கரணகளேபரங்களில்லாத வித்தை வெறும் உன் க்ருபையாலே உண்டாக்கினையித்தனையன்றோ. உண்டாக்கிவிட்டவளவேயோ? ப்ரளயாபத்திலே வயிற்றிலே வைத்து நோக்கி, உள்ளே கிடந்து நோவுபடாதபடி புறப்பட விட்டு எல்லை நடந்து மீட்டுக்கொண்டு ஸகலவித ரக்ஷணமும் பண்ணினையல்லையோ? என்று ளாயிற்று.

இவட்கு முடிகின்றது என்கோலோ?—இவள் விஷயத்தில் என்ன செய்வதாகத் திருவுள்ளத்தில் முடித்திருக்கிறீர்! இவளுடைய நிலைமை என்னாய் முடியுமோ? என்றமாம். (உ)

வட்கிலளிறையும்மணிவண்ணவென்னும் வானமேநோக்கும்மையாக்கும் *
உட்குடையசுரருயிரெல்லாமுண்ட ஒருவனேயென்னுமுள்ளுருகும் *
கட்கிலீயுன்னைக்காணுமாறருளாய் காகுத்தாகண்ணனேயென்னும் *
திட்கோடிமதிள்சூழ்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்திட்டாயே. (௩)

| | |
|---|---|
| இறையும் வட்கு இலள் | சிறிதும் வெட்கமில்லாதவளாகி |
| மணிவண்ண என்னும் | நீல மணிவண்ணனே! என்று கூப்பிடா நின்றாள்! |
| வானமே நோக்கும் | (யானைக்கு உதவவந்தாப்போலே நமக்கும் உதவ வரக்கூடுமென்று) வானத்தையே நோக்குகின்றாள்; |
| மையாக்கும் | (எதிர்பார்த்தபடி வந்து தோன்றக் காணாமையினால்) மோஹமடைகின்றாள்; |
| உட்கு உடை அசுரர் | வலிமையுடையவர்களான அசுரர்களினுடைய |
| உயிர் எல்லாம் உண்ட | பிராணன்களை யெல்லாம் கவர்ந்த |
| ஒருவனே என்னும் | அத்விதியனே! என்கின்றாள்; |
| உள் உருகும் | உள்ளம் நீர்ப்பண்டமாய் உருகப் பெறுகின்றாள்; |
| கட்கு இலீ | கண்களுக்கு விஷயமாகமாட்டாதவனே! |
| காகுத்தா கண்ணனே! | ஸ்ரீ ராம க்ருஷ்ணாவதாரங்கள் செய்து எல்லார் கண்ணுக்கும் விஷயமானவனே! |
| உன்னை காணும் ஆறு அருளாய் என்னும் | உன்னை நான் கண்ணாரக் காணும் விதம் அருளவேணுமென்கின்றாள்; |
| திண் கொடிமதிள் சூழ் திரு அரங்கத்தாய் | திடமான கொடிகள் விளங்கும் மதிள்களாலே சூழப்பட்ட திருவரங்கத்தில் துயிலும் பெருமானே! |
| இவள் திறத்து என் செய்திட்டாய் | இப் பெண்பிள்ளை விஷயமாக நீ செய்தது என்னே! |

* * *—இப்பெண்பிள்ளை இப்படிப்பட்ட நிலைமையை அடைந்தவளாம்படி இவளிடத்தில் நீர் செய்திட்டது என்னேவென்கிறாள். இறையும் வட்கிலள்—'நாணமடம் அச்சம் பயிர்ப்பு' என்னுமிவை நான்கும் மாதர்க்கட்கு நிரூபகம்; இவற்றுள், நாண் (வெட்கம்) முந்துறமுன்னம் சொல்லப்பட்டதாதலால் அது மிக முக்கியமாகும்; அந்தோ! அது சிறிதுமில்லையாயிற்றே யென்கிறாள். வட்கு—வெட்கம்; லஜ்ஜை. நாணமற்றுப் போயிற்றென்பது எங்ஙனே தெரிந்ததென்ன, [மணிவண்ணவென்னும்] நாணமுடையவளாயிருந்தால் கணவனுடைய நாமத்தைச் சொல்லியழைப்பாளோ? பெற்றதாய் முன்னே வடிவழகைச் சொல்லுகின்றாளே. நான் கேட்டாலும் மறைக்கவேண்டியதைத் தானே வாய்விட்டுச் சொல்லுகின்றாளே. காமினி ஆசைப்படுவது வடிவழகையன்றோ தான் அகப்பட்ட துறையைச் சொல்லிக் கூப்பிடுகின்றாள்.

மணிவண்ணவென்று ஸாமான்யமாகவா கூப்பிடுகின்றாள்; திருநாடளவும் கேட்கும்படியாகவன்றோ கூப்பிடுகிறாள். கூப்பிட்டவாறே ஸ்ரீகஜேந்திராழ்வானுக்கு உதவ வந்தாப்போலே நமக்கும் உதவுகைக்காக ஸ்ரீ வைகுண்டத்தில் நின்றும் வரக்கூடுமென்றெண்ணி [வானமே நோக்கும்] ஆகாசத்தையே பாரா நின்றாள். பார்த்தவளவிலும் வந்து தோன்றக் காணாமையாலே [மையாக்கும்] மயங்குகின்றாள், அறிவு கெடுகின்றாளென்கை.

சிறிது மயக்கம் தெளிந்தவாறே உட்குடையசுரருயிரெல்லாமுண்ட வொருவனே! யென்கின்றாள். தேவர்களுக்காக உடம்பு நோவக் காரியஞ்செய்து அசுரர்களோடே, பொருது வெற்றிபெற்று வருமவனே! என்கிறாள். ஆண்புலிகளுக்கோ காரியஞ் செய்வது! பெண்பிறந்தார்க்குக் காரியம் செய்யலாகாதென்று திருவுள்ளமோ? ப்ரயோஜநாந்தர பரர்களுக்கேயோ காரியஞ் செய்வது? அநந்ய ப்ரயோஜநர்களுக்குக் காரியம் செய்யலாகாதென்று

திருவுள்ளமோ? பெருமிடுக்கர்களுக்கேயோ காரியஞ் செய்வது? அபலைகளுக்குக் காரியஞ் செய்யலாகாதென்று திருவுள்ளமோ? காரியமாகுமளவும் திருவடியைப்பற்றிக்கிடந்து, காரியம் தலைக்கட்டினவாறே மார்பு நெறித்த எதிரிடுமவர்களுக்கேயோ காரியஞ் செய்வது? அருளினபோதோடு அருளாதபோதோடு வாசியற உன் திருவடிகளே தஞ்சமென்றிருப்பார்க்குக் காரியஞ் செய்யலாகாதோ? என்கிற நிர்வேதங்கள் இந்த விளியிலே தோன்றும். உட்கு—மிடுக்கு.

உள் உருகும்—அத்தலையிலுள்ள திருக்குணங்களை நினைத்தும், தன்னுடைய மநோரதம் நிறைவேறப்பெறாமை பற்றியும் நீர்ப்பண்டம்போலே யுருகுகின்றாள்.

கட்கிலீ! உன்னைக் காணுமாறு அருளாய் என்னும்—ஒருநாளும் கண்ணுக்கு இலக்காகாதவனென்று சாஸ்த்ரங்களில் பேசப்பட்டிருக்குமவனே! உன்னை நான் காணும் வகை அருளவேணுமென்கிறாள். * ந ஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம் * என்றும் * ந மாம்ஸசக்ஷுரபிவீக்ஷதே தம் * என்றும் ஒருவருடைய கண்ணுக்கும் இலக்காகாதவனென்று ஓதியிருக்கையாலே கட்கிலி யென்றது. கட்கு—கண்ணுக்கு, இலி—விஷயமாகாதவன் என்றவாறு. கண்ணுக்கு இலக்காகப் பெறாதவனென்று அறிந்து வைத்து 'காணுமாறருளாய்' என்றால் இது அஸங்கதமன்றோவென்னில், * ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம் * என்று ஓதின உபநிஷத்தே * தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் * என்றும் ஓதிவைத்திருக்கையாலே அப்பெருமான் தானே பரகதஸ்வீகாரமாகக் காட்டியருள்வது உண்டாகையாலும், அவன் தானே கீதையில் * திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோகமைஶ்வரம்—திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம் * என்று திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்துக் காட்டியருளினமை ப்ரஸித்தமாகையாலும் அது பற்றாசாகக் காணுமாறருளாய் என்னக் குறையில்லை. காகுத்தனும் கண்ணனும் திருவவதரித்து அப்படி காட்டிக் கொடுத்ததில்லையோ என்பது 'காகுத்தா கண்ணனேயென்னும்' என்பதில் உறையும்.

ஆமாம்; கட்கிலியானவென்னைக் காட்டிக்கொடுப்பதற்கென்றே விபவாவதாரங்கள் செய்தேன்; அப்போது வந்து தோன்றாமல் இப்போது * காணுமாறருளாய் என்றால் எங்ஙனேயருளும்படி? என்று எம்பெருமான் திருவுள்ளமாக, திட் கோடி மதிள் சூழ் திருவரங்கத்தாய்! என்கிறாள் திருத்தாய். அவதாரகாலத்தில் இழந்தாருடையவும் இழவு தீர்க்கவன்றோ இங்கே வந்து சாய்ந்தருளிற்று. 'வருவாரெல்லாரும் வாருங்கோள்' என்று கொடிகட்டிக் கொண்டன்றோ கிடக்கிறது.

இவள் திறத்து என் செய்திட்டாய்—இவள் இங்ஙனே பிச்சேறுவதற்கு என்ன மருந்திட்டாய்? .... (௬.)

இட்டகாலிட்டகையளாயிருக்கும் எழுந்துலாமயங்கும்கைகூப்பும் *
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்கும் கடல்வண்ணாகடியைகாணென்னும் *
வட்டவாய்நேமிவலங்கையாவென்னும் வந்திடாயென்றென்றேமயங்கும் *
சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்சிந்தித்தாயே. (௭)

(இப் பெண்பிள்ளையானவள்)
இட்டகால் இட்ட கையள் ஆய் இருக்கும் } (சில சமயங்களிலே) கையும் காலும் இட்டது இட்டபடியே யிராநின்றாள்;

(மற்றும் சில சமயங்களிலே)
எழுந்து உலாம் — எழுந்து உலாவுகின்றாள்;
மயங்கும் — மயங்கா நின்றாள்;

| | |
|---|---|
| கை கூப்பும் | (அப்படி மயங்கின தசையிலும்) கைகூப்புதல் 'தவிர்கின்றிலள்; |
| காதல் கட்டமே என்று மூர்ச்சிக்கும் | (பகவத் விஷயத்திலே) காதலைத் தாங்குவது வெகு கஷ்டமென்று சொல்லி மூர்ச்சையடைகின்றாள்; |
| கடல்வண்ணா கடியை காண் என்னும் | கடல் வண்ணனே! என் விஷயத்தில் நீ "கடுமைகொண்டிருக்கிறாயே! என்கிறாள்; |
| வட்டம் வாய்நேமி வலம் கையா என்னும் | வட்டமான விளிம்பையுடைய திருவாழியை வலத்திருக்கையிலுடையவனே! என்கின்றாள்; |
| வந்திடாய் என்று என்றே மயங்கும் | வாராய் வாராய் என்று பலகாலு மழைத்தும் வரக்காணாது மயங்குகின்றாள்; |
| சிட்டனே! | பரமபவித்திரனே! |
| செழுநீர் திரு அரங்கத்தாய் | நீர்வளம் பொருந்திய கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே! |
| இவள் திறத்து என் சிந்தித்தாய் | இப்பெண்பிள்ளை விஷயமாக நீ சிந்தித்திருப்பது என்ன? |

* * *—அம்புகள் செய்யும் காரியமும் குணங்கள் செய்யும் காரியமும் ஒருபடிப்பட்டிருக்குமென்பர்கள். ஸ்ரீராமசரங்களானவை சிலரை மூர்ச்சிக்கப்பண்ணும்; சிலரைத் துடிக்கப்பண்ணும்; சிலரை ஓரிடத்தில் தரித்திருக்கமாட்டாதே அங்குமிங்கும் பதறியோடப் பண்ணும். அங்ஙனேயாயிற்று பகவத்குணங்களும் படுத்துகிறபடி. இட்ட கால் இட்ட கையளாயிருக்கு மென்றது ஸ்தம்பித்திருக்கும்படியைச் சொன்னவாறு. "கைகளாயிருக்கும்" என்கிற பாடத்திற்காட்டிலும் 'கையளாயிருக்கும்' என்கிறபாடம் நன்கு பொருந்தும்.

எழுந்து உலாம்—ஸ்தம்பித்திருக்கிற நிலைமை நீங்கினவாறே எழுந்து உலாவுகின்றாள். உலாம் என்றது 'உலாவும்' என்றபடி. "உலாய் மயங்கும்" என்று சில பிரதிகளில் பதிப்பித்திருப்பது அச்சுப்பிழையென்பர்.

மயங்கும்—உலாவி அங்குமிங்கும் பார்த்து, வந்து தோன்றக்காணாமையாலே மயங்கும்படியாயிற்று. மயங்குமளவிலும் கைகூப்புகை தவிராமையாலே 'கைகூப்பும்' என்றது. இங்கு இருபத்தினாலாயிரப்படி ஸ்ரீஸூக்திகள் வருமாறு;—"(கைகூப்பும்) உணர்த்தியின்றியேயிருக்க, பூர்வவாஸனையாலே கைகூப்பும். மோஹித்த தசையிலும் தவிருகிறிலள். மயங்காநிற்கச் செய்தே உணர்த்தியுடையாரைப் போலேயாயிற்று அஞ்ஜலி பண்ணுகிறது" என்று. ஈட்டு ஸ்ரீஸூக்தியோவென்னில்; "(கைகூப்பும்) உணர்த்தியில் தொழுமவளல்லள்; மயங்கினால் தொழாதிருக்கவல்லளல்லள்." என்றுள்ளது. தொழுதால் அதனை ஸாதனகோடியிலே கணக்கிட்டுக் கொள்வனோ! என்கிற அச்சத்தாலே தொழுகையில் கூச்சமேயாயிருக்கும் ஸத்ஸம்பிரதாய சிஷ்டர்களுக்கு.

காதல் கட்டமேயென்று மூர்ச்சிக்கும்—பகவத் விஷயத்தில் காதலைத் தாங்குவது மிகவும் கஷ்டமென்கிறாள். பசியனுக்குச் சோறு கிடையாதொழிந்தால் பசிக்கு ஆற்றமாட்டாமே பரிதபிக்குமாபோலே ஆழ்வார் தமது காதலுக்குப் பரிதபிக்கிறார்காணும். அடியேன் *மயர்வற மதிநல மருளினன்* என்று பக்தியைக் கொடுத்தருளினமைக்கு உகந்து பேசினார்; இப்போது அந்த பக்திக்குத் தக்க இரை கிடைக்காமையினாலே 'அந்தோ! கஷ்டத்தையன்றோ அவன் கொடுத்தது' என்று வெறுத்துப் பேசுகிறார். 'பகவத்விஷயத்தில் காதலே புருஷார்த்தம்' என்று பலகாலும் அறுதியிடுகின்ற ஆழ்வார், இப்போது 'காதலுக்கு மேற்பட்ட ஆபத்து இல்லை' என்று பேசுகிறபடி என்னே!.

இந்த கஷ்டத்துக்குப் பரிஹாரமில்லாமையாலே [மூர்ச்சிக்கும்] ஆத்மா உள்ளவரையில் இப்படி கஷ்டமே அநுபவிக்க வேண்டியதன்றோ நம் கதியாயிற்று! என்று சொல்லி மோஹியாகின்றாள்.

கடல்வண்ணா! கடியை காண் என்னும்—கடலானது ஸகல பதார்த்தங்களையும் தன்னுள்ளே யடக்கி ஒன்றையொன்று நலியாதபடி நோக்குமாபோலே நீயும் நோக்குமவன் என்பது பற்றிப் பிரானே! உன்னைக் கடல்வண்ண னென்கிறார்கள்; அப்படி நோக்குவாயல்லையே நீ; கண்ணற்றவனாயிருக்கின்றாயே! என்கிறாள். கடியை—கடியன் என்பதன் முன்னிலை; நிர்க்ருணனாயிருக்கின்றாய் என்றபடி.

வட்டவாய் நேமி வலங்கையாவென்னும்—கையுந் திருவாழியுமான அழகைக் காண வேணுமென்று ஆசைப்பட்டு அதைப் பூர்த்தியாகச் சொல்லமாட்டாதே நடுவேயிளைத்து அரைகுறையான சொல்லோடே முடித்து, வந்திடாயென்றென்றே மயங்குகின்றாள். ஒருகால் 'வந்திடாய்' என்று சொல்லி ஆறியிருக்கமாட்டாமையாலே, விடாய்த்தவன் தாஹம் தீருமளவும் 'தண்ணீர் தண்ணீர்' என்றே வாய் வெருவுமாபோலே 'வந்திடாய் வந்திடாய்' என்றே ஊடுருவச் சொல்லுகின்றாள்; அங்ஙனம் சொல்லிக்கொண்டே மயங்குகின்றாள்; மயங்கினாலும் வாஸனையாலே வாய்ச்சொல் அநுவர்த்தியாநிற்கும்.

சிட்டனே—சிஷ்டனென்று ஆசாரசீலனுக்குப் பெயர். இங்கு, சிஷ்ட பாவனை பண்ணியிருப்பவனே! என்று விபரீத லக்ஷணையாகப் பொருள் கொள்ளவேணும். உம்மைப் போலே நாலு சிஷ்டர்கள் இருந்தால் பெண்கள் நன்றாகக் குடிவாழலாம்! என்று பரிஹஸித்துச் சொல்லுகிறபடி. "ப்ரஹ்மஹத்யைகளைப் பண்ணிப் பூணூலை வெளுக்கவிட்டுக் கையிலே பவித்ரத்தையுமிட்டு ஒத்துச் சொல்லித் திரிவாரைப்போலே யிருந்தது! உம்முடையபடி." என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

செழுநீர்த்திருவரங்கத்தாய்!—நீர்வாய்ப்பும் நிழல்வாய்ப்புங்கண்டு அழகிதாகக் கண்ணுறங்கவோ நீர் இங்கே வந்து சாய்ந்தது? இவள் திறத்திலே நீர் செய்தருளப் பார்த்தது என்கொல்? ... .... .... .... .... (ச)

சிந்திக்கும் திசைக்கும்தேறும் கைகூப்பும் திருவரங்கத்துள்ளாயென்னும்
வந்திக்கும்* ஆங்கேமழைக்கண்ணீர்மல்க வந்திடாயென்றென்றேமயங்கும்*
அந்திப்போதவுணனுடலிடந்தானே அலைகடல்கடைந்தவாரமுதே *
சந்தித்துன்சரணம்சார்வதேவலித்த தையலைமையல்செய்தானே. (ரு)

| | |
|---|---|
| அந்தி போது | மாலைப்பொழுதிலே |
| அவுணன் உடல் இடந்தானே | (நரசிங்கமூர்த்தியாய்த்தோன்றி) இரணியனது உடலைப் பிளந்தவனே! |
| அலை கடல் கடைந்த ஆர் அமுதே | அலையெறிகின்றகடலை(த்தேவர்களுக்காக)க் கடைந்த ஆராவமுதமே! |
| சந்தித்து உன் சரணமே சார்வது வலித்த தையலை மையல் செய்தானே | உன்னோடே கலந்து உன் திருவடிகளிலேயே லயிக்கவேணுமென்கிற திடமான அத்யவஸாயங்கொண்ட இப்பெண்பிள்ளையை மதிகெடுத்தவனே! |
| (இப் பெண்பிள்ளையானவள்) | |
| சிந்திக்கும் | (எற்கெனவே விதிவசமாக நேர்ந்திருந்த கலவியைப் பற்றிச்) சிந்தனை செய்கின்றாள்; |
| திசைக்கும் | அறிவு அழியாநின்றாள்; |
| தேறும் | (திடீரென்று) தெளிவு பெறுகின்றாள்; |
| கைகூப்பும் | அஞ்ஜலி பண்ணாநின்றாள்; |
| திரு அரங்கத்து உள்ளாய்என்னும் | கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே! என்கிறாள்; |
| வந்திக்கும் | தலைவணங்காநின்றாள்; |
| ஆங்கே | அவ்வளவிலே |
| மழை கண் நீர் மல்க | கண்ணீர் தாரை தாரையாகப் பெருகநின்று |
| வந்திடாய் என்று என்றே மயங்கும் | (எம்பெருமானே!) வாராய் வாராய் என்று பலகாலுஞ் சொல்லி (வரக் காணாது) மோஹிக்கின்றாள். |

* * *—பழைய விஷயீகாரங்களை நினைக்கத் தொடங்கிவிட்டாள்; அதாவது—*மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்து ஸம்ஸாரிகளிலே ஒருவனாய்க் கைகழிந்து போய்க்கொண்டிருந்த வென்னை * பெருங்கேழலார் தம் பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழ வைத்தார் இவ்வகாலம் * என்று பேசும்படியாகத் தானாகவே மேல்விழுந்து வந்து கடாக்ஷித்துப்பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி யடிமைகொண்டு ஸகலாவயவ ஸௌந்தர்யத்தையுங்காட்டி யீடுபடுத்திக்கொண்டு போந்தவன் இப்போது உபேக்ஷித்திருப்பது என்னோவென்று சிந்திக்கிறபடி.

திசைக்கும்—பழைய பரிமாற்றங்களை நினைத்தவாறே, 'அந்தோ! அப்போதைய நிலைமை என்ன, இப்படியாயிற்றே' என்று அறிவு கலங்கா நின்றாள். தேறும்—"இன்றாக நாளையேயாக, இனிச்சிறிது நின்றாக நின்னருளென்பாலதே" என்னுமாபோலே என்றேனு மொருநாள் அருள் பலித்தே தீருமன்றோ வென்று தனக்குத் தானே தேறி நிற்கின்றாள். கைகூப்பும்—கீழ்ப்பாட்டில் "மயங்கும் கைகூப்பும்" என்றது; இப்பாட்டில் "தேறும் கை கூப்பும்" என்கிறது. மயங்கியிருக்கும் போதோடு தேறிநிற்கும் போதோடு வாசியற எப்போதும் அஞ்ஜலிபந்தம் மாறாதேயிருப்பது ஸ்வரூப மென்றதாயிற்று.

திருவரங்கத்துள்ளாய்! என்னும்—பரமபதத்தில் நின்றும் போந்து திருப்பாற்கடலில் நின்றும் போந்து, ராமக்ருஷ்ணாதி அவதாரங்கள் போலே காதாலே கேட்டிருக்கையன்றிக்கே, அந்தர்யாமியாய்க் கண்ணுக்குத் தோற்றாதிருக்கையுமன்றிக்கே * மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத் துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகமகிழுந் தொண்டர் வாழ அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளுகைக்கு ஒரு ப்ரயோஜனம் ஸித்தித்ததாக வேண்டாவோ வென்கிறாள்.

வந்திக்கும்—வந்தித்தலென்று ஸ்தோத்ரம் பண்ணுகைக்கும் தொழுகைக்கும் பெயர். திருவரங்கத்துள்ளாய்! என்று சொல்லிக்கொண்டு முகம் முறுவல் முதலானவற்றைத் துதியா நின்றாள்; (அல்லது) திருவடிகளிலே விழுந்து கிடக்கின்றாள் என்கை. ஆங்கே—அப்படிப்பட்ட நிலைமைதன்னிலே. மழைக்கண்ணீர் மல்க—குளிர்ந்த கண்ணீர் ததும்ப; வந்திடாய் என்றென்றே மயங்கும்—தன் ஆற்றாமை தோற்ற 'பிரானே! வாராய்; பெருமானே வந்தருளாய்' என்று பலகாலும் சொல்லி, வந்தருளக் காணாமையாலே அறிவு கெடாநின்றாள்.

வந்திடாய் என்றால் வருகைதான் எனக்குப் பணியோ? என்று அவனுக்குத் திருவுள்ளமாக, ஒரு சிறுக்கனுக்கு உதவத் தூணிலே வந்து தோன்றினவனல்லையோ நீ யென்று நரஸிம்ஹாவதார கதையையெடுத்துப் பாடத் தொடங்கினாளென்கிறாள். [அந்திப்போதவுணனுடலிடந்தானே!] இது தாயின் சொந்தப் பேச்சேயல்லது மகள் பேச்சின் அநுவாதமன்றெனினும், மகள் பேச்சே தாயின் உள்ளத்துள் ஊறியிருந்து சொல்லுகிறதாகையாலே இதை மகள் பேச்சின் அநுவாதமாகவுங் கொள்ளலாம். தாய் தானே சொல்லுகிறதாகக் கொண்டாலுங் குறையில்லை.

அலைகடல்கடைந்த ஆரமுதே—உன்னை அமுதமாக நினையாதே உப்புச் சாற்றை அமுதமாக நினைத்து அதற்காக உன் திருமேனியை நோவுபடுத்துமவர்களுக்கோ நீ உதவலாவது? * ஆராவமுதாயடியேனாவியகமே தித்திப்பாய்* என்றும், * அமுதினுமாற்றவினியன்* என்னும் இருப்பார்க்கு உதவலாகாதோ? சந்தித்து உன்சரணம் சார்வதே வலித்த தையலை மையல் செய்தானே!—உன்னைக்கிட்டி உன் ஸன்னிதியிலே முடியவேணுமென்று இண்ணிதானஅத்ய

வஸாயங் கொண்டிருக்கிற இவளை இப்படி அறிவு கெடுப்பதே! என்கிறாள். இங்கு ஆறாயிரப்படியருளிச்செயல்;—"உன் திருவடிகளை ஒருகால் கண்டு ஸம்ச்லேஷிக்க வேணுமென்னு மாசையாலே தன்னை தரித்துக்கொண்டிருக்கிற இப்பெண்பிள்ளையை இப்பாடு படுத்த வேணுமோ?" .... ... .... ... ... (௫)

மையல்செய்தென்னைமனம்கவர்ந்தானேயென்னும் மாமாயனேயென்னும்*
செய்யவாய்மணியேயென்னும் தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாயென்னும்*
வெய்யவாள்தண்டுசங்குசக்கரம்வில்லேந்தும் விண்ணோர்முதலென்னும்*
பைகொள்பாம்பணையாயிவள்திறத்தருளாய் பாவியேன்செயற்பாலதுவே. (௬)

(இப் பெண்பிள்ளையானவள்)

| | | | |
|---|---|---|---|
| என்னை மையல் செய்து | என்னை வியாமோஹப்படுத்தி | வெய்ய வாள் தண்டு சங்கு சக்கரம் வில் ஏந்தும் | (ஆச்ரித விரோதி விஷயத்தில்) வெப்பமே வடிவெடுத்த பஞ்சாயுதங்களைத் தரித்துக் கொண்டிருக்கிற |
| மனம் கவர்ந்தானே யென்னும் | மனதைக் கொள்ளை கொண்டவனே! என்கிறாள்; | விண்ணோர் முதல் என்னும் | நித்யஸூரி நாதனே! என்கிறாள்; |
| மா மாயனே என்னும் | மிகப் பெரிய மாயங்களை யுடையவனே! என்கிறாள்; | பை கொள் பாம்பு அணையாய் | படமெடுத்த ஆதிசேஷன் மீது சயனித்தருள்பவனே! |
| செய்யவாய் மணியே என்னும் | சிவந்த அதரசோபையை உடையையாய்க் கொண்டு நீலமணி போன்றவனே! என்கிறாள்; | இவள் திறத்து | இப் பெண்பிள்ளை விஷயமாக |
| தண் புனல் சூழ் திரு அரங்கத்துள்ளாய் என்னும் | குளிர்ந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலில் கண்வளர்ந்தருள்பவனே! என்கிறாள்; | பாவியேன் செயல் பாலது அருளாய் | பாவியேனான நான் செய்யக் கூடியது இருந்தால் அதை அருளிச்செய்யவேணும். |

* * • என் பக்கலிலே அளவுகடந்த வியாமோஹத்தைப் பண்ணி என்னை அறிவழித்து எனது மனத்தைக் கொள்ளை கொண்டவனே! என்கிறாள் என்மகள். கலக்கிற போது அபரிமிதமான மாயச்செயல்களைச் செய்யுமவனே! என்கிறாள். அப்படி ஸம்ச்லேஷிக்குமளவில் வார்த்தையருளிச் செய்யுமளவில் திருப்பவளத்திலும் திருவுடம்பிலும் பிறக்கும் அழகை நினைத்துச் செய்யவாய்மணியே! என்கிறாள்; கோயிலில் கண்வளர்ந்தருளுகிறபடியை நினைத்து இக்கிடை தனக்கு உபயுக்தமாகிறதில்லையே! என்கிற பரிதாபம் தோற்ற விளிக்கின்றாள். அடியார்களுடைய ஆபத்துக்களைப் போக்குகைக்காகக் கொடியவையான திவ்யாயுதங்களை ஏந்தியிருக்கின்ற நீ என்னுடைய ப்ரதிபந்தகங்களை நீக்கி என்னோடே ஸம்ச்லேஷிக்கிறாயல்லையே! என்று இன்னாப்புத் தோற்றச் சொல்லுகிறாள். பிரானே! அரவணையை விட்டு நீ பிரியாதிருக்கிறாப்போலே இவளையும் விட்டுப் பிரியாதிருக்க வேண்டாவோ? அப்படியில்லாமைக்கு யாது காரணமோ? இவள் இங்ஙனே கிலேசப்படாநிற்க, இந்த கிலேசத்தைப் போக்க வழிதேடாதே படுக்கை விரித்துக் கிடந்துறங்குவதே! இஃது என்னே!; இவளை இப்படி காணவைத்த பாபத்தையுடைய நான் இவள் திறத்துச் செய்யக்கூடியதை அருளிச்செய்யவேணும் என்கிறாள் தாய்.

"மையல் செய்தென்னை மனங் கவர்ந்தானே!" என்றவிடத்திற்குப் பிள்ளான் அருளிச் செய்வது பாரீர்;—"அதிக்ஷுத்ரமான காகத்தின் பக்கலிலே ப்ரஹ்மாஸ்த்ரத்தை விட்டருளின உன்னுடைய ஸர்வ வசீகரணமான ப்ரணயித்வகுணத்தாலே என்னுடைய மநஸ்ஸை அபஹரித்தவனே!" என்று. ஒரு காகம் பிராட்டி திருமேனியிலே சிறிது நலிவை உண்டுபண்ணிற்றென்று அதன்மேலே ப்ரஹ்மாஸ்த்ரத்தை விட்டருளினமை ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். அல்பமான அபராதத்திற்காக இப்படிப்பட்ட மஹத்தான செயலைச் செய்யுமள

வில் "அந்தோ! நம் மீது இப்படியும் ஒரு மையல் உண்டாவதே!; நமக்காகவன்றே இவ்வரிய பெரிய செயல் செய்தது!" என்று நெஞ்சைப் பறிகொடுக்க வேண்டும்படியாகுமென்றவாறு.

கலக்கிற ஸமயத்தில் தாழநின்று கையைக் காலைப் பிடித்த பரிமாற்றங்களை நினைத்து மாமாயனே! என்றது. .... ... .... ... (௬)

பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய் பற்றிலார்பற்ற நின்றானே*
காலசக்கரத்தாய் கடலிடங்கொண்ட கடல்வண்ணாகண்ணனேயென்னும் *
சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னும் என்தீர்த்தனேயென்னும்*
கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்கும் என்னுடைக்கோமளக்கொழுந்தே. (௭)

| | |
|---|---|
| என்னுடை கோமளம் கொழுந்து | மிக மெல்லியலாளான என் மகள் |
| பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய் என்னும் | அவ்வவ்விடங்களுக்குத் தகுதியாக இன்பங்களையும் துன்பங்களையும் படைத்தவனே! என்கிறாள்; |
| பற்று இலார் பற்ற நின்றானே என்னும் | அசரண்ய சரண்யனே! என்கிறாள்; |
| கால சக்கரத்தாய் என்னும் | காலசக்ரத்திற்கு நிர்வாஹகனானவனே! என்கிறாள்; |
| கடல் இடம் கொண்ட கடல் வண்ணா என்னும் | திருப்பாற்கடலை இடமாகக் கொண்ட கடல் வண்ணனே! என்கிறாள்; |
| கண்ணனே என்னும் | ஸ்ரீ கிருஷ்ணா என்கிறாள்; |
| சேல் கொள் தண் புனல் சூழ் திரு அரங்கத்தாய் என்னும் | மீன்கள் நிரம்பிய குளிர்ந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலில் வாழ்பவனே! என்கிறாள்; |
| என் தீர்த்தனே என்னும் | என்னைப் பவித்திரனாக ஆக்குமவனே! என்கிறாள்; |
| கோலம் மா மழை கண் பனி மல்க இருக்கும் | அழகு பொருந்திப் பெருத்துக் குளிர்ந்த கண்கள் நீர்பெருக நிற்கின்றாள். |

* * * எம்பெருமானுடைய ஸ்ருஷ்டிக்ரமத்தை நோக்குமிடத்து இன்ப துன்பங்களை அந்தந்த ஆச்ரயங்களுக்குத் தகுதியாக அமைக்கின்றபடியைக் காணாநின்றோம். அநுகூலர்கள் இன்பங்களை யநுபவிப்பதென்றும், பிரதிகூலர்கள் துன்பங்களை யநுபவிப்பதென்றும் வரம்புகட்டி வைத்திருப்பதுண்டே; அந்த வரம்புக்கு நான் புறம்பானவளோ என்கிறாளென் மகள். இரண்டாமடியின் முடிவிலுள்ள 'என்னும்' என்பது விளிதோறும் அந்வயிக்கக் கடவது.

பால—பால் என்று இடத்திற்குப் பெயர்; பால என்றது அந்தந்த இடத்திற்குத் தகுதியாக என்றபடி. அந்தந்த பதார்த்தங்கள் பொறுக்குமளவுகளிலேயன்றோ நீ ஸுக துக்கங்களைச் சுமத்துவது; 'தன் காய்பொறுத கொம்பு' என்னும்படியான ஸ்ருஷ்டி இல்லையே. அதற்கு மாறாக இப்படி என்னைப்படுத்தலாமோ? என்கிறாள்.

பற்றிலார் பற்றநின்றானே!—அசரண்ய சரண்யன் என்று விருதூதித்திரிகிறாயே!, என்னைத் துடிக்க விட்டிருக்குமுனக்கு இந்த விருது தகுமோ? கள்ளிச்செடியை மஹாவ்ருக்ஷமென்னுமாபோலே யாகுமன்றோவென்கிறாள்.

காலசக்கரத்தாய்!—இதற்கு இரண்டு படியாகப் பொருள் கூறுவர். கால சக்கரத்துக்கு நியாமகனானவனே! என்பது ஒரு பொருள். 'உமக்கு அருள் செய்கைக்கு ஒரு கால நியமமுண்டு' என்பாயாகில், பிரானே! காலமென்று அப்படியொன்றுண்டோ? நீ ஸங்கல்பிக்குமதுவே காலமன்றோ? கால சக்கரத்தைத் தன்னிஷ்டப்படி நடத்தவல்லவுனக்கு இது வொரு வார்த்தையோ? என்பதாகக் கொள்க. காலன் என்று யமனுக்குப் பேராகையாலே, விரோதிக்கு ம்ருத்யுவான திருவாழியை யுடையவனே! என்பதும் ஒருபொருள்.

கடலிடங்கொண்ட கடல்வண்ணா கண்ணனே!—*ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:, நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம் * என்கிற பிரமாணத்தை நோக்கிச் சொல்லுகிறபடி. *வெள்ளை வெள்ளத்தின் மேலொருபாம்பை மெத்தையாக விரித்து அதன்மேலே கள்ள நித்திரை கொள்கின்றபடியை விட்டு இடையனாய் வந்து பிறந்தாய்; அவ்விருப்பையும் விட்டுக் கோயிலிலே வந்து சாய்ந்தருளினாய்; இதெல்லாம் பழுதே போகா நின்றதே யென்கின்றாள் மூன்றாமடியால்.

"சேல்கொள் தண்புனல்சூழ்" என்றது ஸாபிப்ராயம். பிரானே! மீன்களின் படியை நீ ப்ரத்யக்ஷீகரிக்கவல்லையே; மீன் நீரைவிட்டுப் பிரிந்தால் துடிக்கும்படியை அறிவாயே. அப்படியேகாண் என்படியும் என்று சொல்லுமாபோலே யிருந்தது. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி; "ஜலசரஸத்வங்கள் ஜலத்தைப் பிரிந்து தரிக்கிலன்றோ இவள் உம்மைப் பிரிந்து தரிக்கவல்லளாவது; அவ்வூரிலே வர்த்திக்கிறவுமக்குப் போருமோ இவளுக்கு முகங்காட்டாதொழிகிற விடம்."

என் தீர்த்தனே என்னும்! என்னளவில் மிக்க பரிசுத்தியை யுண்டாக்கினவனே! என்கிறாள். அதாவது—நீ முகம் காட்டாதொழிந்தாலும் உன்னையொழிய வேறிடம் நெஞ்சாலும் நினைக்கமாட்டாதபடி செய்திருப்பவனே! என்றபடி. தீர்த்தமென்று இழிந்தாடுந் துறைக்குப் பேராதலால் நான் இழிந்தாடும் துறையாயிருப்பவனே! என்றதாகவுமாம். மகரனகரப் போலி.

என்னுடைக் கோமளக் கொழுந்து கோலமாமழைக்கண் பனிமல்கவிருக்கும்—கொள்கொம்பிலே சேர்ந்து தரிக்கவேண்டுங் கொடிபோலே உன்னோடே சேர்ந்தாலல்லது தரிக்கமாட்டாதவளான இப்பெண்பிள்ளை கண்ணுங்கண்ணீருமாயிருக்கிறபடி கண்டாயே; இவ்விருப்புக்கு க்ருஷிபண்ணின நீ பலித்தவளவிலே இதையநுபவிக்கவாகிலும் வரலாகாதோ? என்று கருத்து. ... ... ... ... .... (எ)

கொழுந்துவானவர்கட்கென்னும் குன்றேந்திக்கோநிரைகாத்தவனென்னும் *
அழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்கும் அஞ்சனவண்ணனேயென்னும் *
எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கும் எங்ஙனேநோக்குகேனென்னும் *
செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாய் என்செய்கேனென்திருமகட்கே. (அ)

(இப்பெண் பிள்ளையானவள்)

| | |
|---|---|
| வானவர்கட்கு கொழுந்து என்னும் | நித்ய ஸூரிகளுக்குத் தலைவனானவனே! என்கிறாள்; |
| குன்று ஏந்தி | கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்து நின்று |
| கோ நிரை காத்தவன் என்னும் | பசுக்களின் கூட்டத்தைக் காத்தருளினவனே! என்கிறாள்; |
| அழும் | கண்ணும் கண்ணீருமா யிருக்கின்றாள்; |
| தொழும் | அஞ்ஜலி பண்ணா நின்றாள்; |
| ஆவி அனல வெவ்வுயிர்க்கும் | ஆத்மவஸ்து கொளுந்தும்படி வெப்பமாகப் பெருமூச்சு விடா நின்றாள்; |
| அஞ்சனம் வண்ணனே என்னும் | அஞ்சனமேனியனே! என்கிறாள்; |

(இக் கூக்குரலைக்கேட்டு எம்பெருமான் வரக்கூடுமென நினைத்து)

| | |
|---|---|
| மேல் எழுந்து நோக்கி | மேலே தலையெடுத்துப் பார்த்து |
| இமைப்பு இலள் இருக்கும் | இமையாத கண்ணினளாய் இருக்கின்றாள்; |
| எங்ஙனே நோக்குகேன் என்னும் | எந்த ப்ரகாரத்தாலே உன்னைக் காண்பேன்? என்கின்றாள்; |
| செழு தடம் புனல் சூழ் திரு அரங்கத்தாய் | மிகச் சிறந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலிலே கண் வளர்ந்தருளுமவனே! |
| என் திரு மகட்கு | பிராட்டியோடொத்த என் பெண்மகள் விஷயத்திலே |
| என் செய்கேன் | எதைச் செய்வேன்? |

* * *—பிரானே! உன்னுடைய பரத்வத்தையும் ஸௌலப்யத்தையும் மாறி மாறி யநுஸந்தியா நின்றாளென் மகள்; வானவர்கட்குக் கொழுந்தே! என்று பரத்வத்தைப் பேசினவாறே கோநிரை காத்தவனே! என்று ஸௌலப்யத்தைப் பேசுகின்றாள்; குன்றேந்தினவனே! என்று பின்னையும் ஒரு பரத்வத்தைப் பேசுகின்றாள். பரத்வத்தைக்கண்டு இறாய்க்காமைக்காக ஸௌலப்யத்தைப் பேசுகையும், ஸௌலப்யத்தைக்கண்டு இகழாமைக்காகப் பரத்வத்தைப் பேசுவதும் மாறிமாறிச் செல்லுமே மெய்யன்பர்களுக்கு.

அழும் தொழும்—பக்தி பரவசரைப்போலே கண்ணும் கண்ணீருமாயிருக்கிறபடியும், ப்ரபந்நரைப்போலே அஞ்ஜலிபந்தம் பண்ணுகிற்கிறபடியும் சொல்லிற்றாயிற்று. ஆவியனல வெவ்வுயிர்க்கும்—கீதையிலே ஆத்மஸ்வரூபத்தைப் பேசும்போது * அச்சேத்யோயமதாஹ்யோயம் * என்று சொல்லிற்று. ஆவியானது தஹிக்கவொண்ணாதது என்றபடி. அப்படிப்பட்ட ஆவியும் தஹித்ததாம்படி வெப்பமாகப் பெருமூச்சு விடுகின்றாள்—அஞ்சனவண்ணனே! என்கின்றாள்.

அங்ஙனம் கூப்பிட்டவாறே நீ வரக்கூடுமென்று எண்ணி எழுந்து மேல் நோக்குகின்றாள்; ஒரு க்ஷணம் தோற்றி மறைந்து விடுவாயோவென்று இமையாதேயிருக்கின்றாள். [எங்ஙனே நோக்குகேனென்னும்] ஈடு;—"தான் பார்த்த திக்கில் வரக்காணாமையாலே பின் நோக்கிவந்து கட்டிக்கொள்ளுமென்று புரிந்து பாராநிற்கும்."

என் திருமகட்கு என் செய்கேன்—இவளுக்காக நான் ஏதேனும் உபாயம் அநுஷ்டிக்கவாமோ? என்னவுபாயத்தை யநுட்டிப்பேன். பிராட்டி உம்முடைய திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகிறாப்போலே இவளும் உம்மை அகலகில்லாதே உம்மோடே பொருந்தியிருக்க வேண்டியவளன்றோ? ... .... .... .... (அ)

என்திருமகள்சேர்மார்பனேயென்னும் என்னுடையாவியேயென்னும்*
நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்ட நிலமகள்கேள்வனேயென்னும்*
அன்றுருவேழும்தழுவிநீகொண்ட ஆய்மகளன்பனேயென்னும்*
தென்திருவரங்கம்கோயில்கொண்டானே தெளிகிலேன்முடிவிவள்தனக்கே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| என் திரு மகள் சேர் மார்பனே என்னும் | எனக்குப் புருஷகார பூதையான பிராட்டி சேர்ந்த திருமார்பை யுடையவனே! என்கிறாள்; | உரு ஏழும் | இடிபோன்ற குரலை யுடைய ரிஷபங்களேழையும் |
| என்னுடை ஆவியே என்னும் | எனக்கு உயிராயிருப்பவனே! என்கிறாள்; | தழுவி | மதமொழித்து |
| நின் திரு எயிற்றால் இடந்து நீ கொண்ட | உனது கோரப் பற்களாலே இடந்து எற்றுக்கொண்ட | நீ கொண்ட | மணந்துகொண்ட |
| நிலம் மகள் கேள்வனே என்னும் | பூமிப்பிராட்டிக்கு நாயகனே! என்கிறாள்; | ஆய் மகள் அன்பனே என்னும் | நப்பின்னைப் பிராட்டிக்கு ப்ரியனே! என்கிறாள்; |
| அன்று | முன் பொருகால் | தென் திரு அரங்கம் கோயில் கொண்டானே | ஸ்ரீரங்கநாதனே! |
| | | இவள் தனக்கு | இவளுக்கு |
| | | முடிவு தெளிகிலேன் | ஆர்த்தி முடியுமாறு அறிகின்றிலேன். |

* * * பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகக் கொண்டவர்களுக்குப் பலனில் விளம்பமில்லாமையாலே, அந்தோ! நான் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகக் கொண்டு பற்றியிருக்க என் கதி இங்ஙனேயாவதே! என்கிறாள். என் என்பதைத் திருமகள் சேர்மார்வனில் அந்வயித்துப் பொருள் கொள்ளவுங் கூடுமாகிலும் இங்குத் திருமகளில் அந்

வயமே விவக்ஷிதம். என்னுடைய திருமகள் என்றபடி. " அனந்தாழ்வான் தன் பெண் பிள்ளையை என்திருமகளென்று திருநாமம் சாத்தினன்" என்பது ஈடு.

"என் திருமகள் சேர்மார்பனேயென்னும்" என்று ஒரு வாக்கியமாகவும், "என்னுடையாவியே யென்னும்" என்று மற்றொரு வாக்கியமாகவும் யோஜிப்பது தவிர, முதலடி முழுவதையும் ஒரே வாக்கியமாக யோஜிப்பதுமுண்டு. இங்கே ஈட்டில் ஆச்சரியமானதோர் ஐதிஹ்யம் காண்மின்;—பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்யுமவை கேட்கைக்காக நஞ்சீயரையழைத்தருளித் தாம் அமுது செய்யா நிற்கச்செய்தே இத்திருவாய்மொழியைக் கேட்டருளா நிற்க, இப்பாட்டளவிலே வந்தவாறே *என் திருமகள் சேர்மார்பனே யென்னு மென்னுடையாவியே யென்னும்* என்று இயலைச் சேர்த்தருளிச் செய்ய, அத்தைக் கேட்டுக் கையையுதறி 'ஸ்ரீரங்கநாத!' என்று அணையிலே சாய்ந்தருளினர் பட்டர்" என்று அருளிச் செய்வர். அப்போது திருமேனியிலே பிறந்த விக்ருதியைக் கண்டு இவர்க்கு பகவத்ப்ராப்தி அணித்தாகிறதோ வென்று அஞ்சியிருந்தேனென்று ஜீயரருளிச் செய்வர்."

பட்டர் * ஸ்ரீரங்கேச புரோஹிதராகையாலே அடிக்கடி பகவத் ஸந்நிதியிலே உபந்யாஸங்கள் செய்தருள நேரும். அதற்காக முன்னடி நஞ்சீயரையழைத்து அருளிச்செயல் பாசுரங்களைச் சொல்லவிட்டுச் செவிக்கினியதாகக் கேட்பது வழக்கம். அமுது செய்து கொண்டே ஒரு நாள் கேட்டருளா நின்றார். அப்போது இயல் ஸேவிக்கின்ற நஞ்சீயர் இப்பாசுரத்தை ஸேவிக்கும்போது "என் திருமகள்சேர் மார்பனே யென்னும்" என்கிற விடத்தில் நிறுத்தாமல் ஏக ச்வாஸமாகவே முதலடியை முழுதுஞ் சொல்லி நிறுத்தினராம். என்னும் என்பதற்கு 'என்று சொல்லுகிறாள்' என்கிற அர்த்தம் தவிர, 'என்று சொல்லப்படுகிற' என்கிற அர்த்தமும் உண்டாதலால் 'என் திருமகள்சேர் மார்பனென்று சொல்லப்படுகிற என்னுடைய ஆவியே என்கிறாள்' என்று விவக்ஷித்து நஞ்சீயர் நிறுத்தினபடி. பட்டர் அந்த இன்சுவையை யறிந்து திருவுள்ளமுடை குலைப்பட்டாரென்றதாயிற்று. "இவர்க்கு ப்ராணன் ஒரு வாயு விசேஷமல்ல; ஒரு மிதுனமாயிற்று. திருமகள் சேர் மார்பனைக் கொண்டு எனக்கு தாரகனானவனே! என்னும்."

என் திருமகள்சேர் மார்பனென்று சொல்லப்படுமதான என்னாவியே! என்று பொருள் விவக்ஷிதமானபடி. ஆனதுபற்றியே "இவர்க்கு ப்ராணன் ஒரு வாயுவிசேஷமல்ல; ஒரு மிதுனமாயிற்று" என்றருளிச் செய்தது.

இரண்டாமடியில் வராஹாவதாரத்தை ப்ரஸ்தாவித்தது—நீ பூமிப்பிராட்டி பக்கல் முகம்பெற வேணுமானால் அவள் பரிகரமான எங்களை நோக்கியேயாக வேணுங்காண் என்ற கருத்தினலாம். அன்றியே, * பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள், மாசுடம்பில் நீர் வாராமானமிலாப்பன்றியாந், தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார், பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே.* (நாச்சியார் திருமொழி 11-8) என்று ஆண்டாளருளிச்செய்த கணக்கிலே, பூமிப்பிராட்டிக்கு நீ அருளிச்செய்த திருவாக்கு வெறுமனேயோ? என்று கேட்கிற கருத்தாகவுமாம்.

மூன்றாமடியில் நப்பின்னைப் பிராட்டியை மணந்துகொண்ட வரலாறு அநுஸந்திக்கப்படுகிறது. 'உரு' என்றாலும் 'உரும்' என்றாலும் இடிக்குப் பெயர். இடிபோலே பயங்கரமான குரலையுடைய ஏறு என்று சொல்லவேண்டுமிடத்து இடியென்றே சொன்னவிது அந்த ரிஷபங்களின் பயங்கரத்தன்மையைக் காட்டும். தழுவி யென்றது மங்கலவழக்கு; வதை செய்து என்பது தாற்பரியர்.

அங்ஙனம் எருதேழடர்த்த சிரமம் தீருகைக்காகத் தென் திருவரங்கம் கோயில் கொண்டானே! இவளைப்பற்றி நீர் ஸித்தாந்தம் செய்திருக்குமது இன்னதென்று அறிகின்றிலேன் என்றாளாயிற்று. ... .... .... .... (௯)

முடிவிவள்தனக்கோன்றறிகிலேனென்னும் மூவுலகாளியேயென்னும் *
கடிகமழ்கோன்றைச்சடையனேயென்னும் நான்முகக்கடவுளேயென்னும் *
வடிவுடைவானோர்தலைவனேயென்னும் வண்திருவரங்கனேயென்னும் *
அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள் முகில்வண்ணனடியே. (௧௦)

| | |
|---|---|
| இவள் | இப்பெண் பிள்ளையானவள், |
| தனக்கு முடிவு ஒன்று அறிகிலேன் என்னும் | தனது ஆர்த்திக்கு முடிவு ஒன்றும் தெரியவில்லையே! என்கிறாள்; |
| மூ உலகு ஆளியே என்னும் | மூவுலகுக்கும் கடவுளான இந்திரனுக்கு அந்தர்யாமியே என்கிறாள்; |
| கடிகமழ் கொன்றை சடையனே என்னும் | பரிமளம் மிக்க கொன்றைமாலையைச் சடையிலணிந்த சிவனுக்கு அந்தர்யாமியே என்கிறாள்; |
| நான்முகக்கடவுளே என்னும் | பிரமதேவனுக்குஅந்தர்யாமியே! என்கிறாள்; |
| வடிவு உடை வானோர் தலைவனே என்னும் | தன்னோடொத்த வடிவுடையரான நித்ய ஸூரிகளுக்கு நாதனே! என்கிறாள்; |
| வண் திரு அரங்கனே என்னும் | ஸ்ரீரங்கநாதனே! என்கிறாள்; |
| அடி அடையாதாள்போல் இவள் | திருவடிகளைக் கிட்டமாட்டாள் போலும் என்னும்படியிருந்த இவள் |
| முகில் வண்ணன் அடி | மேகவண்ணனான அவனது திருவடிகளை |
| அணுகி அடைந்தனள் | கிட்டியடையப்பெற்றாள்; |

* * * இவள்—இப்பராங்குச நாயகியானவள்; தனக்கோரு முடிவு காண்கிறிலேனென்கிறாள் என்று தாய் சொல்லுகிறபடி. தனக்கு முடிவாவது—தான் அனுபவிக்கும் கஷ்டங்களுக்கு முடிவு. நான் ஆத்மாவுள்ளதனையும் இங்ஙனே கஷ்டப்பட வேண்டியதுதானோ? இதற்கொரு நாளும் பரிஹாரமில்லையோ வென்கிறாள். தனக்கு முடியும் நாள் இல்லையோ வென்கிறாள் என்றுமாம். [மூவுலகாளியேயென்னும்] மூவுலகாளியென்று இங்கு தேவேந்திரனைச் சொன்னபடியாய், அவனுக்கு அந்தர்யாமியானவனே! என்றதாகிறது. [கடிகமழ் கோன்றைச் சடையனே!] கொன்றைமாலையை அணியுமவன் பரமசிவன்; அவனுக்கு அந்தர்யாமியானவனே! என்றவாறு. நான்முகக் கடவுளே! என்றதும் அப்படியே. [வடிவுடை வானோர் தலைவனே] எம்பெருமானை இடைவீடின்றி அநுபவிப்பதனாலுண்டான மகிழ்ச்சி வடிவிலே தோற்றும்படியிருக்கிற நித்யஸூரிகளுக்கு நாதனானவனே! என்கிறாள். [வண்திருவரங்கனே! என்னும்] நித்யஸூரிகளே அநுபவித்துப்போகையன்றிக்கே நித்ய ஸம்ஸாரிகளும் இழவாமைக்கன்றோ திருவரங்கத்திலே வந்து திருக்கண்வளர்ந்தருளுகிறது; இங்குச் சாய்ந்தருளின நின் பலன் நான் பெற வேண்டாவோ வென்கிறாள்.

ஈற்றடியின் கருத்து;—"இனிப் பெருமாள் திருவடிகளைச் சேர்ந்து முடியமாட்டாள், போய் முடிந்தாள் என்னும்படி தார்ச்சாபங்கையானவிவள் .... இந்த துக்கமெல்லாம் விஸ்ம்ருதமாம்படி தான் ஆசைப்பட்டபடியே பெரியபெருமாள் திருவடிகளையே ஸச்லேஷிக்கப் பெற்றாளென்று இவளுடைய திருத்தாயார் ப்ரீதையாகிறாள்" என்பது ஆறாயிரப்படியருளிச்செயல். .... ... ... .... ... (௧௦)

முகில்வண்ணனடியையடைந்தருள் சூடியுய்ந்தவன் மொய்புனற்பொருநல்*
துகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன் வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சடகோபன்*
முகில்வண்ணனடிமேல்சொன்னசொல்மாலை ஆயிரத்திப்பத்தும்வல்லார்*
முகில்வண்ணவானத்திமையவர்சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| முகில்வண்ணன் அடியை அடைந்து | மேகவண்ணனை எம்பெருமானுடைய திருவடிகளை யடைந்து | முகில்வண்ணன் அடி மேல் சொன்ன | மேகவண்ணனை எம்பெருமானது திருவடிகளை நோக்கி யருளிச்செய்த |
| அருள் சூடி உய்ந்தவன் | அவனுடைய திருவருளைத் தலைக்கொண்டு உஜ்ஜீவித்தவரும், | சொல் மாலை ஆயிரத்து இப்பத்தும் வல்லார் | சொல்தொடையான ஆயிரத்தினுள் இப்பதிகத்தை ஓதவல்லவர்கள் |
| மொய் புனல் பொருநல் | உத்தமதீர்த்தமான தாமிரபர்ணியினுடைய | முகில் வண்ணம் வானத்து | முகில் வண்ணனுடைய நிழலீட்டாலே முகில் வண்ணமாயிருக்கின்ற பரமபதத்திலே |
| துகில் வண்ணம் தூ நீர் சேர்ப்பன் | துகிலின் நிறம்போலே பரிசுத்தமான ஜலத்தின் கரையிலே சேர்ந்திருப்பவரும், | இமையவர் சூழ | நித்தியசூரிகள் புடைசூழ |
| வண் பொழில் சூழ் வண் குருகூர் சடகோபன் | வளம்மிக்க சோலைகள் சூழ்ந்த திருநகரிக்குத் தலைவருமான ஆழ்வார் | பேர் இன்பம் வெள்ளத்தே | ப்ரஹ்மானந்த ப்ரவாஹத்தில் |
| | | இருப்பர் | மூழ்கியிருக்கப்பெறுவர்கள். |

*** * *—பெரியபெருமாள் திருவடிகளைச் சேர்ந்து ஸர்வப்ரகார ஸம்ச்லேஷமும் பண்ணப் பெறுகையாலே உஜ்ஜீவனம் பெற்றவராய் தாம்ரபர்ணீ தீரவாஸியான ஆழ்வார் முகில் வண்ணனடிமேற் சொன்ன சொல்மாலையாயிரத்துள் இப்பத்தும் வல்லவர்கள் திருநாட்டிலே அயர்வறுமமரர்கள் சூழ ஆனந்தக்கடலிலே ஆழ்ந்திருக்கப் பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.**

முகில்வண்ணனடிமேற் சொன்ன சொல்மாலையாயிர மென்றவிதனால்—திருவாய்மொழியாயிரமும் ஸ்ரீரங்கநாதன் விஷயமாகவே அருளிச்செய்ததென்பது விளங்குமென்பர். ஆனதுபற்றியே * வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ்மறைகளாயிரமும்* என்று திருவாய்மொழித் தனியன் அவதரித்தபடி. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தியுங் காண்மின்;—"பெரியபெருமாள் திருவடிகளிலே திருவாய்மொழியாயிரமுஞ் சொல்லிற்று. * திருமோகூர்க்கு ஈத்தபத்து* *திருவேங்கடத்துக் கிவைபத்து* என்று பிரித்துக் கொடுத்த வித்தனை. பெருமாள் திருப்பலகையில் அமுதுபடியிலே மற்றைத் திருப்பதிகள் நாயன்மார்க்கும் அளந்து கொடுக்குமாபோலே என்று பிள்ளையருளிச் செய்வர்."

முகில்வண்ணவானத்து—முகில்வண்ணனை எம்பெருமானுடைய திருநாட்டிலே யென்று பொருள் கொள்ளலாமாயினும், அங்கிருக்கிறவனுடைய நிழலீட்டாலே அவன் படியாயிருக்கிற வானம் என்று பொருள் கொள்வது சிறக்கும். ஸ்ரீரங்கவிமானத்தை அநுபவியாநின்றபட்டர் *சுவி ஹணிவ திஹாவாக் ஸாஹஸ்ஸ்யாஜோ: ஸகதவாகஸரௌஸம்ஹதஉஅபெளெ:—அபி பணிபதிபாவாத் சுப்ரமந்தச் சயாலோர் மரதகஸுகுமாரை: ரங்கபர்த்தர்பயூகை:, ஸகலஜலதிபாநச்யாபஜீமூதஜைத்ரம் புலகயதி விமாநம் பாவநம் லோசநே ந:* என்றருளிச்செய்த ச்லோகம் இங்கே அநுஸந்திக்கவுரியது. ஆதிசேஷனுடைய அவதாரமான ஸ்ரீரங்கவிமானம் வெண்ணிறத்ததாயினும் உள்ளுக்கிடக்கிற பச்சைமாமலைபோல் மேனியனுடைய திருமேனிநிழலீட்டாலே சாமளமாகவே தமக்கு ஸேவைஸாதிப்பதாக அருளிச்செய்தவாறு. .... .... .... ... ... (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

திருவாய்மொழியில் ஏழாம்பத்து இரண்டாந் திருவாய்மொழி
உரை முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி-ஏழாம்பத்து-மூன்றாந் திருவாய்மொழி
# வெள்ளைச்சுரிசங்கு.

உரையவதாரிகை:—கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வாருடைய அர்தி பேச்சுக்கு நிலமல்லாமேயிருந்தது. பெரியபெருமாளுடைய திருக்குணங்களையும் வடிவழகு முதலானவற்றையும் பராங்குசநாயகியான தான் வாய்வெருவியும் திருத்தாயார் சொல்லக்கேட்டும் சிறிது தரிக்கும்படியாயிற்று. மோஹமும் தெளிந்தது. பின்பு அவனைச்சென்று கிட்டியே தீர்வேன் என்னுமாற்றாமை பிறந்து, தென்திருப்பேரையில் வீற்றிருந்த மகரநெடுங் குழைக்காதனிடம் போகவேணுமென்று புறப்பட, பழையபடியே தோழிமாரும் தாய்மாரும் சூழ்ந்துகொண்டு 'உனக்கு இத்தனை ப்ராவண்யமாகாது; நமக்கு இது பழியாய் விளையும்' என்ன, நீங்கள் தடை சொல்லுகிறவற்றால் ஒரு பயனுமுண்டாகமாட்டாது. நான் மகரநெடுங்குழைக் காதனாலே நெஞ்சு பறியுண்டேன்; ஆனபின்பு நானே போனதாகாமே நீங்கள் என்னோடு உடன்பட்டு அங்கே கொண்டுபோய்ச் சேர்க்கப்பாருங்கள் என்று, பராங்குச நாயகி தனக்குப் பிறந்த துணிவை அவர்களுக்குச் சொல்லுகிறதாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய ஆறாயிரப்படியில் அவதாரிகை பேரின்ப வெள்ளமாயிருக்கும். அந்த ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யமென்று அவையே ஈண்டு எடுத்துக் காட்டப்படுகின்றன;—"இப்பிராட்டியோடே பெரியபெருமாள் ஸம்ச்லேஷரஸத்தை யநுபவித்து அந்த ஸம்ச்லேஷரஸம் உள்ளடங்காதபடி பெருகினவாறே அது ஸாத்மிக்கைக்காகவும் ஆச்ரித ப்ரதிகூல ம்ருக ம்ருகயார்த்தமாகவும் தென்திருப்பேரையிலே யெழுந்தருளத் திருவுள்ளத்தே கோலியருளி இவளுடைய ஸம்வாதார்த்தமாக இவளிடத்திலே அதிமாத்ர ஸம்மானத்தைப் பண்ணியருளி தென் திருப்பேரையிலே வேட்டைக்குப் போய்வருகிறோமென்றருளிச் செய்ய, இப்படி பதிஸம்மாநிதையானவிவள் அவ்யுத்பந்நவிச்லேஷையாகையாலும் இவனெழுந்தருளுகை இவனைக் காணாதொழிகைக்கு ஹேதுவென்னுமிடமறியாமையாலும் எழுந்தருள ஸம்வதித்து விஜயத்தை ஆசாஸித்து திவ்யாயுதங்களைக் கொடுத்தருளி * ஆத்வாரமநுவவ்ராஜ மங்களாந்யபிதத்யுஷீ* என்னும் ப்ரக்ரியையாலே திருப்பல்லாண்டு பாடிக்கொண்டு திருவணுக்கன் திருவாசலளவும் பின்னே யெழுந்தருள, பெரியதிருவடி திருத்தோளிலே யேறியருளி ஒரு தாமரைத் தடாகம் மலர்ந்தாற் போலேயிருந்த திருக்கண்களாலே இவளைப் புரிந்து பார்த்தருளி இவளாலே அநுஜ்ஞாதனாய்த் தென்திருப்பேரையிலே யெழுந்தருள, இவள் அவனைக் காணாமையாலே அத்யந்தம் அவஸந்நையாய் அவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே யெழுந்தருள உத்யோகிக்க, இவளுடைய திருத்தாயாரும் தோழிமாரும் மற்றுமுள்ள பந்துக்களும் இவளை ப்ரதிபந்திக்க, 'நான் போகை தவிரேன், தனியே போனாளென்னும் பழி உங்களுக்கு வாராமே நீங்களே யென்னைத் தென் திருப்பேரையிலே விண்டெனக் கொண்டுபோய் விடுங்கோளென்கிறாள்." என்று.

வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக்கண்ணன் என்னெஞ்சினூடே*
புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீர் என்சொல்லிச்சொல்லுகேன் அன்னைமீர்காள் *
வெள்ளச்சுகமவன்வீற்றிருந்த வேதவொலியும்விழாவொலியும் *
பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமறாத் திருப்பேரெயில்சேர்வன்நானே. (க)

| | |
|---|---|
| அன்னைமீர்காள் | தாய்மார்களே! |
| வெள்ளை சுரி சங்கொடு ஆழி ஏந்தி | வெண்ணிறத்தையும் சுரியையுமுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஸுதர்சநத்தையும் ஏந்திக்கொண்டு |
| தாமரைக் கண்ணன் | செந்தாமரைக் கண்ணனான பெருமான் |
| என் நெஞ்சின் ஊடே | எனது நெஞ்சினுள்ளே |
| புள்ளை | கருடப்பறவையை |
| கடாகின்ற ஆற்றை | நடத்துகிறபடியை |
| காணீர் | நீங்கள் அறிகின்றீர்களில்லையே! |
| என் சொல்லி சொல்லுகேன் | இவ்வநுபவத்துக்கு என்ன பாசுரமிட்டு நான் சொல்லுவேன்; |

(இனி நான் செய்ய நினைத்ததாவது)

| | |
|---|---|
| வெள்ளம் சுகம் அவன் வீற்றிருந்த | ஆனந்த வெள்ளமே வடிவெடுத்தவனான பெருமான் வீற்றிருக்குமிடமாயும் |
| வேதம் ஒலியும் விழா ஒலியும் பிள்ளை குழாம் விளையாட்டு ஒலியும் அறா | வேதகோஷமும் உத்ஸவ கோஷமும் சிறு பிள்ளைகளின் விஹார கோலாஹலமும் இடையறாமலிருக்கப் பெற்றதாயுமுள்ள |
| திரு பேர் எயில் | திருப்பேரெயில் என்னும் திருப்பதியிலே |
| நான் சேர்வன் | நான் சென்று சேரக்கடவேன். |

* * * பராங்குசநாயகியானவள் தனது உள்ளத்தினுள்ளே ஒரு பெரியதிருவடித்திருநாள் நடந்து செல்லுகிறபடியைப் பேசி, தென்திருப்பேரையிலே போகவேணுமென்று தனக்குப் பிறந்த துணிவைத் தாய்மாரிடம் கூறுகின்றாள்.

கீழ்த் திருவாய்மொழியில் இவள் * சங்குசக்கரங்களென்று கைகூப்பும் * என்று திருவாழி திருச்சங்கிலே பாவபந்தம் காட்டினபடியாலும், * தாமரைக்கண்ணென்றே தளரும் * என்று தாமரைக் கண்களிலே யீடுபாடு காட்டினபடியாலும் அந்த திவ்யாயுதங்களை ஏந்திக்கொண்டு * வாதாவதூதொரு கமலதடாக தாண்டவேந—வாத்யா வ்யாலோலத் கமல தடாக தாண்டவேந* [ஸ்ரீரங்கராஜஸ்தவம். 2—59] என்றும் * வன்காற்றறையவொருங்கே மறிந்து கிடந்தலர்ந்த மென்கால்கமலத் தடம்போல் பொலிந்தன—எம்பிரானதடங்கண்களே* என்றும் பேசலாம்படியான திருக்கண்ணழகுடனே வந்து உள்ளே காட்சி தந்தனன்போலும்; அது முதலடியில் பேசப்படுகிறது. கீழே முகில்வண்ணனென்று ப்ரஸ்தாவித்தாள்; அந்த நிறத்துக்குப் பரபாகமான வெளுப்பையுடைத்தான சங்கையும், ஒரு விசேஷணமிட்டுச் சொல்லவேண்டாதபடியான அழகையுடைத்தான திருவாழியையுமேந்திக்கொண்டு தாமரைக்கண்கள் பிறழவந்து பெரியதிருவடி திருத்தோளிலே யேற்ச் சாரிகை வந்து என்னெஞ்சினுள்ளே யுலாவுகிறபடியைக் காணுங்கோளென்கிறாள்.

என்சொல்லிச் சொல்லுகேன்—என்ன பாசுரமிட்டு எத்தைச் சொல்வது என்கை, உங்கள் கண்ணுக்கு இலக்காகாதாப்போலே என் வாக்குக்கும் இலக்காகிறதில்லையே! என்கிறாள். "புள்ளைக் கடாகின்றவாற்றைக் காணீர்" என்று பேசியாயிற்றே; இன்னமும் பேசவேண்டியது என்ன இருக்கிறதென்னில்; அதைப்பற்றி ஒரு மஹாபாரதம் பேசவேண்டாவோ? அது மாட்டுகிறிலேனென்கிறாள்.

இனித் தான் செய்ய நினைத்த காரியத்தைப் பின்னடிகளிலே கூறுகின்றாள். வேதவொலியும் விழாவொலியும் பிள்ளைக்குழா விளையாட்டொலியும் நிரந்தரமாகச் செல்லாநிற்கிற திருப்பேரையிலே சென்று சேர்வதே என்னுடைய பணி யென்கிறாள்.

'வெள்ளச்சுகமவன்' 'வெள்ளைச் சுகமவன்' என்று இருவகையான பாடங்களையும் ஆசிரியர் திருவுள்ளம் பற்றுகிறார். முந்தின பாடத்தில் சுக வெள்ளத்தை யுடையவன்

என்று பொருள். ஆனந்தவெள்ளத்தைத் தானுடையவன், (அல்லது) அதை எனக்கு அளித்தவன் என்க. பிந்தின பாடத்தில் வெள்ளி என்றது—மறுவற்ற என்றபடி. துன்பங் கலசாத இன்பமாயிருப்பவனென்றவாறு.

பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமரு என்றது இத்திருப்பதிக்குச் சிறப்பானதொரு விசேஷணம். சிறுபிள்ளைகள் திரண்டு விளையாடுவதென்பது எங்குமுண்டு; இவ்வூரில் அப்பிள்ளைகள் விளையாடுவது கோயில் திருமுன்பேயாயிருக்கும். எம்பெருமான் தானும் அந்த விளையாட்டின் சுவையைக்காண ஆசைப்பட்டானும்; எதிரே பெரியதிருவடி ஸன்னிதியிருந்தது இடைச்சுவராயிருந்தபடியாலே அந்த விளையாட்டைக்காண மறைவாயிருக்கிறதே யென்று வருந்தி 'கருடா! அப்பால்போ' என்று பெருமாள் வெறுத்துரைதாராம்! இந்த நிலைமை நாளைக்குங் காணலாம்.

இந்த திவ்ய தேசத்தின் திருநாமத்தைப் பற்றினவொரு ஆராய்ச்சி;—இப்பதிகத்தில் பாட்டுத்தோறும் 'தென் திருப்பேரை' என்றே பல புத்தகங்களிற் பதிப்பித்திருக்கக் காண்கிறோம். இத்தலத்தின் பரிபூர்த்தியான திருநாமம் 'திருப்பேரெயில்' என்பதாம். இப்பதிகத்தின் ஒன்பதாவது பாட்டில் * ஏர்வளவொண்கழனிப்பழனத் தென் திரும்பேரெயில் மாநகரே * என்றிருப்பதும், அங்கு வியாக்கியானங்களில் "திருப்பேரெயிலாகிற மாநகரிலே" என்று வ்யக்தமாக அருளிச்செய்யப்பட்டிருப்பதும் காணத்தக்கது. அன்றியும், ஐந்து ஆறு ஏழாம் பாட்டுக்களில் 'பேரெயிற்கே' என்று மூலம் அமைந்திருக்கின்றது. இவ்விடங்களில் 'பேரையிற்கே' என்றே பலரும் பதிப்பித்துள்ளார்களாலும் அது பொருந்துமாவென்று விமர்சிக்கவேணும். 'பேரை' என்று தலத்தின் திருநாமமாய்விட்டால் அதனோடு வேற்றுமையுருபுசேர்ந்தால் "பேரைக்கு' என்றுகுமேயல்லது இன்சாரியை வந்து 'பேரையிற்கு' என்றுகாது. ஐகாரவீற்றதான சொல்லின் பக்கத்தில் இன்சாரியை வருவதில்லை. நங்கை + கு, நங்கைக்கு, நாரை + கு, நாரைக்கு, வாழை + கு, வாழைக்கு என்றிப்படி வருவதுண்டேயல்லது 'நங்கையிற்கு' 'நாரையிற்கு' 'வாழையிற்கு' என வருவதில்லையன்றோ. ஆகவே 'பேரையிற்கு' என்கிற பாடம் ஸம்பாவிதமென்று தோன்றவில்லை. 'பேரெயிற்கே' என்றே ஆழ்வார் திருவாக்கில் திருவவதரித்த பாடமென்று அறுதியிடத்தட்டில்லை. தென் திருப்பேரை என்று ஐகாரவீற்றதாக வழங்கிவருமதிலும் குற்றமில்லை. நாங்கூரை நாங்கை யென்றும், தஞ்சாவூரைத் தஞ்சை யென்றும், குடமூக்கூரைக் குடந்தையென்றும், அழுந்தூரை அழுந்தை யென்றும், நெல்வேலியை நெல்லை யென்றும் அயிந்திரபுரத்தை அயிந்தை யென்றும் இங்ஙனே ஐகாரவீற்றதாக்கி வழங்கிவரும் முறைமையுண்டாதலால் திருப்பேரெயிலூரைத் திருப்பேரையென வழங்கிவந்தது ஒக்கும். நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியிலும் ஈடு முதலிய வியாக்கியானங்களிலும் திருப்பேரை யென்று காண்பதில் குற்றமொன்றுமில்லாமையினாலே திருத்தப் வேண்டா. திருவாய்மொழி மூலத்தில் மாத்திரம் பாசுரந்தோறும் 'பேரெயில்' என்பதே சுத்தபாடம். பேரை என்றில்லை.

இங்குச் சில மஹான்கள் கூறுவதாவது—இத்தலத்தின் திருநாமம் பேரெயில் என்பதே யென்னுமிடத்தில் விவாதமில்லை. ஆனாலும் இத்திருவாய்மொழியில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, எட்டு, பத்து-ஆம் பாட்டுக்களில் 'தென்திருப்பேரையில்' என்று பாடங்கொள்வதில் விரோதமில்லாமையாலே இந்தப்பாட்டுக்களில் மாத்திரம் திருப்பேரையென்றே பாடங்கொள்ளலாமே யென்பதாம். இதை நிஷ்கர்ஷிப்பதில் பெரியார்களின் திருவுள்ளமே பிரமாணம்.

மணவாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத்திருவாய்மொழிக்கு இட்ட பாசுரத்தில் ‘தெள்ளியமால் தென்பேரை சென்றுபுக’ என்றருளிச்செய்யலாயிருக்கச் செய்தேயும் அங்ஙனம் அருளிச்செய்யாது ‘தெள்ளியமால் தென் திருப்பேர் சென்றுபுக’ என்றருளிச் செய்திருப்பதும் உற்று நோக்கத்தக்கது. சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான அப்பக்குடத்தான் ஸந்நிதிக்கே தென் திருப்பேர் என்று திருநாமம். இதுவோ பாண்டியநாட்டுத் திருப்பதி. இதையும் தென் திருப்பேரென்று மணவாளமாமுனிகளருளிச் செய்தது ‘திருப்பேரெயில்’ என்பதன் ஏகதேசக்ரஹணமாகவாயிற்று. ... (1)

நானக்கருங்குழல்தோழிமீர்காள்! அன்னையர்காள் ! அயற்சேரியீர்காள்*
நானித்தனிநெஞ்சம்காக்கமாட்டேன் என்வசமன்றிது இராப்பகல்போய்*
தேன்மொய்த்தபூம்பொழில்தண்பணைசூழ் தேன்திருப்பேரெயில்வீற்றிருந்த*
வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன் சேங்கனிவாயின்திறத்ததுவே. (உ)

| | |
|---|---|
| நானம் கரு குழல் தோழிமீர்காள் | ஸுகந்தமணிந்த கருங்குழலை யுடைய தோழிகளே! |
| அன்னையர்காள் | தாய்மார்களே! |
| அயல் சேரியீர்காள் | (செய்தி வினவ வந்த) அக்கம் பக்கத்தவர்களே! |
| இத்தனி நெஞ்சம் நான் காக்க மாட்டேன் | ஸ்வதந்திரமான இந்த நெஞ்சை நான் அடக்கியாள மாட்டுகின்றிலேன்; |
| இது என் வசம் அன்று | இந்த நெஞ்சு எனக்கு விதேயமன்று; |
| இரா பகல் | இரவும் பகலும் |
| போய் | என்னை விட்டுப்போய் |
| தேன் மொய்த்த பூ பொழில் | வண்டுகள் மொய்த்த பூஞ்சோலைகளை யுடைத்தாய் |
| தண் பணை சூழ் | குளிர்ந்த நீர் நிலங்கள் சூழ்ந்திருக்கிற |
| தென் திருப்பேரெயில் வீற்றிருந்த—; | |
| வானம் பிரான் | பரமபத நிலயனும் |
| மணி வண்ணன் | நீலமணி வண்ணனுமான |
| கண்ணன் | கண்ணபிரானுடைய |
| செம் கனி வாயின் திறத்தது | சிவந்த கனிபோன்ற அதரத்திலே படிந்திட்டது. |

* * *—தாய்மார் முகம் பார்த்துச் சொன்னாள் கீழ்ப்பாட்டில்; அவ்வளவிலே இத்தலைமகளுக்கு ஹிதஞ் சொல்லுகைக்காகத் தாய்மாரும் தோழிமாரும் அயற் சேரியுள்ளாருமாகத் திரண்டு வந்து சேர்ந்து நிற்க, உங்களுடைய ஹிதவார்த்தைகளைக் கேட்க அவகாசமில்லாதபடி மகரநெடுங்குழைக்காதன் பக்கலிலே அவகாஹித்த என்னெஞ்சை மீட்கமாட்டுகின்றிலேன் காண்மின் என்கிறாள். என்னெஞ்சைக் கடல் கொண்டது காண்மினென்கிறாள்.

நானக்கருங்குழலென்கிற அடைமொழி தோழிமார்களிடத்துப்போல அன்னையர்களிடத்தும் அயற் சேரியர்களிடத்தும் அந்வயிக்கக்கடவது. நானம்—ஸுகந்த த்ரவ்யங்களாலுண்டான பரிமளம். அது பொருந்திய கருங்குழலையுடையீர்காள்! என விளித்தது அவர்களைப் பழிக்கிறபடியாம். நான் எம்பெருமானைப்பிரிந்து தலை சருகாய் வாடி வருந்திநிற்க நீங்கள் பூ முடித்து நறுமணக்கமழவந்து நிற்கின்றீர்களே! இதுவோ தகுதி யென்று பழியிட்டுப் பேசுகிறபடி.

இவளோடொத்த இன்பதுன்பங்களையுடையவர்களாயிருக்க ப்ராப்தமாக, இவள் வாடிக்கிடக்கிற நிலைமையிலே அவர்கள் பூச்சூடி நறுமணங்கமழ்வந்து நிற்பது ஸம்பாவிதமோ வென்று இங்கே ஒரு சங்கையை நம்பிள்ளை தாமே எடுத்துக்கொண்டு இரண்டுபடியாகப் பரிஹாரமருளிச்செய்கிறார் காண்மின்;—

(ஈட்டு ஸ்ரீஸூக்தி.) “ * ஏகம் துக்கம் ஸுகஞ்ச நௌ * என்று இவளுடைய ஸுக துக்கங்களே தங்களுக்கும் ஸுகது:க்கமாம்படியிருக்கையிறே தோழிமாராகையாவது;

இவள் மயிர்முடி பேணாதே பரிமளம் காணில் முடியும்படியாயிருக்க, இவர்கள் குழல் பேணிப் பரிமளங்கொண்டு காரியங் கொள்ளப்போகுமோவென்னில்; கலவியில் இவளோடு அவன் நெருங்க நெருங்க சாத்திக்கழித்தபடியே ஸர்வஸ்வதானம் பண்ணுவது இவர்களுக்கே; அப்போது அவன் பண்ணின ப்ரஸாதாதிசயத்தாலே, அது சருகானாலும் அவர்கள் மாறாதே வைத்துக்கொண்டிருப்பர்களே, அது இவளுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி. அன்றிக்கே இவர்கள் தாம் பரிமளங்கொண்டு காரியம் கொள்ளவும் வல்லவர்கள்: அதாவது தாங்கள் தளர்ந்து காட்டில் இவள் மிகவும் தளருமென்று ஒப்பித்துக்கொண்டிருப்பர்கள். தந்தாமுடைய பொருமையும் பாரார்களாயிற்று இவளை உஜ்ஜீவிப்பிக்கைக்காக. ..........பெருமாளிலும் க்லேசம் விஞ்சியிருக்கச்செய்தே பெருமாளுடைய ரக்ஷணத்துக்காக இளையபெருமாள் தம்மைப் பேணிக்கொண்டு தரித்திருந்தாப்போலே.'' இத்யாதி.

நான் இத்தனி நெஞ்சம் காக்கமாட்டேன்—உங்களுடைய ஹித வசனத்தை நான் கேட்கமாட்டேனென்பது இதனாலே காண்மின்; என்சொற் கேளாதே என்னைவிட்டகன்று திரிகிற எனது நெஞ்சை நான் மீட்கமுடிந்தாலன்றோ உங்கள் ஹிதவசனங்கேட்கலாவது. 'உனக்கும் நமக்கும் இனி உறவில்லை' என்று ஸம்ப்லஸித்து நெஞ்சு போகாநிற்க, என்ன பரிகரங்கொண்டு நான் உங்கள் ஹிதவசனங் கேட்பது? என்கிறாள். இவ்விடத்தில் ஈட்டு ஸ்ரீஸூக்தி; —''ஸம்ஸாரிகள் சப்தாதி விஷயங்களில் நின்றும் மீளமாட்டாதாப்போலேயிறே இவர் பகவத் விஷயத்தில் நின்றும் மீளமாட்டாதபடி.'

நெஞ்சம் காக்கமாட்டேனென்று சொல்லிவிடுவது ஒரு வார்த்தையோ? விதேயமான நெஞ்சை வசப்படுத்திக்கொள்ள முயலவேண்டாவோ வென்ன, என்வசமன்று இது என்கிறாள். நெஞ்சுக்கு நான் வசப்பட்டிருக்கவேண்டியதாயிற்றேயல்லது எனக்கு நெஞ்சு வசப்பட்டிருப்பதென்பதில்லை யென்றபடி.

நெஞ்சு வசமல்லாதபடி செய்கிற காரியம் ஏதென்னச் சொல்லுகிறது மேல் இராப் பகல் போய் என்று தொடங்கி. வண்டுகள் படிந்த பூர்பொழிலையும் குளிர்ந்த நீர்நிலங்களையுமுடைய தென் திருப்பேரையில் வீற்றிருந்த எம்பெருமானது திருப்பவளத்தழகிலேயே இரவும் பகலும் ஈடுபட்டதன்றோ என்னெஞ்சு. இதை நான் மீட்டு ஹிதஞ்சொல்லி வசப்படுத்திக்கொள்ளலாமளவு இல்லையே யென்கிறாள். தென் திருப்பேரை யெம்பெருமான் திறத்திலேயே யீடுபட்டிருக்கின்ற நான் உங்களால் திருத்தமுடியாதவள் காண்மின் என்றவாறு. ... ... ... ... ... (உ)

செங்கனிவாயின்திறத்ததாயும் செஞ்சுடர்நீண்முடித்தாழ்ந்ததாயும் *
சங்கொடுசக்கரம்கண்டுகந்தும் தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும்*
திங்களும்நாளும்விழாவறாத தென்திருப்பேரெயில்வீற்றிருந்த*
நங்கள்பிரானுக்கென்னெஞ்சம்தோழி! நாணும் நிறையுமிழந்ததுவே. (௩)

| | | | |
|---|---|---|---|
| தோழீ | வாராய் தோழியே!, | தாமரை கண்களுக்கு அற்று தீர்ந்தும் | தாமரை போன்ற திருக்கண்களுக்கு அநந்யார்ஹமாகியும் |
| என் நெஞ்சம் | எனது நெஞ்சானது | திங்களும் நாளும் விழா அறாத | மாஸோத்ஸவங்களும் நித்யோத்ஸவங்களும் இடையறாத |
| செம் கனி வாயின் திறத்தது ஆயும் | செவ்விய கனி போன்ற திருப்பவளத்திலே அபிநிவேசம் கொண்டதாயும் | தென் திருப்பேரெயில் வீற்றிருந்த | தென் திருப்பேரைப் பதியிலே யெழுந்தருளியிருக்கின்ற |
| செம் சுடர் நீள் முடி தாழ்ந்தது ஆயும் | செவ்விய சுடரையுடைய நீண்ட கிரீடத்திலே ஈடுபட்டதாயும் | நங்கள் பிரானுக்கு | எம்பெருமான் விஷயத்திலே |
| சங்கொடு சக்கரம் கண்டு உகந்தும் | திருவாழி திருச்சங்குகளைக் கண்டு உவந்ததாயும் | நாணும் நிறையும் இழந்தது | வெட்கமும் அடக்கமும் தொலைப் பெற்றது. |

* * * நங்காய்! இப்படியும் நாணமற்றுச் சொல்லுவது தகுதியோவென்று தோழி கேட்க; தோழி! நான் என்செய்வேன்? எனது நெஞ்சானது தென் திருப்பேரை யெம்பெருமானுடைய திருப்பவளத்தழகிலே போய்ப்படிந்தும் திருவபிஷேகத்தினழகிலே தாழ்ந்தும், திருவாழி திருச்சங்குகளை யேந்தியிருக்குமழகுகண்டு உகந்தும், மற்றோரழகுக்கு உரித்தல்லாதபடி தாமரைக்கண்களுக்கு அற்றுத்தீர்ந்தும் நங்கள் பிரானுக்கு நாணும் நிறைவு மிழந்தது; இனி யெனக்கு நாணும் நிறைவுமுண்டாவதற்கு வழி யேது? என்கிருள் தலைவி.

கீழ்ப்பாட்டில் "தோழிமீர்காள் அன்னையர்காள் அயற் சேரியீர்காள்" என்று எல்லாரையும் விளித்துக்கூறியவள் இப்பாட்டில் தோழியைமாத்திரம் விளித்துக் கூறுகை யாலே, மற்ற பேர்களெல்லாரும் இவளைத் திருத்த நம்மாலாகாதென்று கைவாங்கி அப்பால் போய்விட்டார்களென்பது தெரிகின்றது. தோழி அங்ஙனே போகமாட்டாதவளாகை யாலே உடனிருந்து ஹிதஞ் சொல்லவே, அவளுக்கு மறுமாற்ற முரைக்கிறபடி.

செங்கனிவாய், திருமுடி, சங்கு சக்கரம், திருக்கண் ஆகிற நான்கிலே நெஞ்சு அகப் பட்டமை முன்னடிகளிற் கூறப்படுகின்றது. செங்கனிவாய் முதலான நான்கையும் ஒரு சேரச்சொல்லி இவற்றிலே யென்னெஞ்சு ஈடுபட்டது என்னுதே * செங்கனி வாயின் திறத்த தாயும் * என்று ஒரு வாக்கியமாகவும் * செஞ்சுடர் நீண்முடித்தாழ்ந்ததாயும் * என்று மற் ரொரு வாக்கியமாகவும் இங்ஙனே பல வாக்கியங்களாகச்சொன்னது என்னென்னில்; "தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற்கமலமன்ன தாள்கண்டார் தாளே கண் டார் தடக்கை கண்டாருமஃதே" என்றாற்போல ஆழ்வார் திருவுள்ளமானது தனித்தனி வடிவுகொண்டு ஒவ்வொரு அவயவந்தன்னிலும் தனித்தனியே சுழியாறுபட்டதென்னுமிடம் இதனால் விளங்கும். இங்கே நம்பிள்ளையீடு;—"ஸௌபரியென்பானொருத்தன் ஒரு ஸூக் ருதமடியாக ஐம்பது வடிவுகொண்டானிறே; அவ்வளவல்லவிறே இவள் கலந்த விஷயம் பண்ண வல்லது. அவன் வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலேயாயிற்று இது வும் அவயவங்கள் தோறும் தனித்தனி அகப்பட வல்லபடி."

ஸௌபரி விருத்தாந்தம்:—ஸௌபரி என்கிற ஒரு மாமுனிவன் நீர்நிலையிலிருந்து கொண்டு தவம்புரியா நின்றவளவில் அங்கு மீன்களெல்லாம் கூடிக்களித்து விளையாடா நின்றமையைக் கண்ணுற்று 'நாமும் இப்படி குடும்ப வாழ்க்கையிற் கூடிநின்று சிற்றின்பம் நுகர்ந்து களிக்கவேணும்' என்று ஆவல் கொண்டு மாந்தாதா என்னும் அரசனுக்குப் பல பெண்கள் இருப்பதாக உணர்ந்து அவனிடம்சென்று தனக்குக் கன்னிகாதானஞ் செய்யு மாறு வேண்ட, அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையுங் கண்டு இசையகில் லாமல் 'பெண் கொடுக்க முடியாதென்று நம் வாயாற் சொன்னால் முனிவர் முனிந்து சபித்து விடக்கூடும்; பெண்களிருக்கு மிடத்திற்கு இவரை அனுப்புவோம்; இவரைக் கண்டு பெண் காமுற்றார்களாகில் விவாஹம் செய்து கொள்ளட்டும்; இல்லையாகில் அவர்களே மறுத்து விடட்டும்; நம் தலையில் பழி வேண்டா' என்றெண்ணி முனிவரைப் பெண்களிருக்குமிட மனுப்ப முனிவர் அங்குச் செல்லும்போதே தமது தவ வலிமையால் திவ்ய ஸுந்தரமான ரூபத்தை ஏன்றுகொண்டு போய் அவர்கள் முன்னே நின்றவளவில் அங்கிருந்த ஐம்பது பெண்களும் 'நானே இவரை மணந்துகொள்வேன், நானே இவரை மணந்துகொள்வேன்' என்று போட்டி போட்டுக்கொண்டு மேல்விழுந்தவாறே, முனிவர் அத்தனை பெண்களையும் மணந்து கொள்ள விரும்பித் தமது தவவலிமையால் ஐம்பது வடிவமெடுத்து அப்பெண்க ளனைவரையும் விவாஹம் செய்துகொண்டு மகிழ்ந்திருந்தாரென்று புராணங்களில் இதிஹாஸம்.

ஆழ்வார் திருவுள்ளம் முதலிலே செங்கனி வாயில் ஈடுபட்டதாம்; 'நங்காய்! நான் உன்னோடு கூடியிருந்தாலென்ன? பிரிந்திருந்தாலென்ன? நான் உன் சரக்கன்றோ' என்று சொல்லத்தொடங்கி தழுதழுத்து வருகிற திருவாயிலே மூர்துற முன்னம் அகப்பட்டதாயிற்று. அனந்தரம், பிரிவை ப்ரஸங்கித்துப் பேசநின்றபோது ஆதிராஜ்யஸூசகமாய் உபய விபூதிநாதனென்று தோற்றும்படியிருக்கிற திருவபிஷேகத்தைக்கண்டு தரைப்பட்டதாயிற்று. பின்னை * இன்னாரென்றறியேன் அன்னேயாழியொடும் பொன்னார்சார்ங்கமுடைய வடிகளை யின்னாரென்றறியேன் * என்று மதிமயக்கவல்ல திருவாழி திருச்சங்குகளினழகிலே மூண்டது. * பெருங்கேழலார் தம் பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழ வைத்தார்.* (திருவித்தம்) என்னும்படி தம்மை இவ்வளவும் ஈடுபடுத்திக்கொண்டது திருக்கண்களேயென்றறிந்து அந்தத் தாமரைக்கண்களுக்கு அநர்ஹமாயிற்று.

திங்களும் நாளும் விழாவருாத—நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவங்களென்று திவ்யதேசங்களிலே நடைபெறும் உத்ஸவங்களுக்கு எல்லையில்லையே; அப்படிப்பட்ட உத்ஸவங்கள் அங்கே குறையற்றுச் செல்லாநிற்க அங்கே வாழ்வதைவிட்டு இங்கே துயருற்றிருக்குமோ என்னெஞ்சு என்கிறாள்.

"வீற்றிருந்த நங்கள் பிரானுக்கு" என்கிற சொற் சேர்த்தியழகைத் திருவுள்ளம்பற்றி நம்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்;—"இவ்விருப்பு நமக்காகக்கொண்டிருக்கிற உபகாரகனுக்கு. பரத்வம் நித்யமுக்தர்க்கு; வ்யூஹம் முக்தப்ராயர்க்கு. விபவம் புண்ணியம் பண்ணினார்க்கு. இவ்விருப்பு பாபம் பண்ணின ஸம்ஸாரிகளுக்காகவிறே."

என்னெஞ்சம் நாணும் நிறையுமிழந்தது—நான் தன்னை யிழந்தேன்; தாய்மார் தோழிமார்கள் என்னை யிழந்தார்கள்; நெஞ்சு நாணுநிறையுமிழந்தது. இப்படியெல்லாம் இழவேயாயிருக்கிறது. ... ... .... ... .... (௩)

இழந்தவெம்மாமைதிறத்துப்போன என்னெஞ்சினாருமங்கேயொழிந்தார்*
உழந்தினியாரைக்கொண்டென்னுசாகோ? ஓதக்கடலொலிபோல * எங்கும்
எழுந்தநல்வேதத்தொலிநின்றோங்கு தென்திருப்பேரெயில்வீற்றிருந்த*
முழங்குசங்கக்கையன்மாயத்தாழ்ந்தேன் அன்னையர்காள்! என்னை யென்முனிந்தே? (௪)

| | |
|---|---|
| அன்னையர்காள் | தாய்மார்களே!, |
| இழந்த எம் மாமை திறத்து போன | ஏற்கெனவேயிழந்த எனதுமேனி நிறத்தைத் திருப்பிக் கொணர்வதாகப் புறப்பட்டுச் சென்ற |
| என் நெஞ்சினாரும் | எனது நெஞ்சென்கிற பெரியாரும் |
| அங்கே ஒழிந்தார் | அத்தலைக்கே அற்றுத் தீர்ந்தார்; |
| இனி | அந்தரங்கமான நெஞ்சையுமிழக்கப் பெற்ற பின்பு |
| உழந்து | வருந்தி |
| ஆரை கொண்டு | யாரைத் துணையாகக் கொண்டு |
| என் உசாகோ | எந்த வார்த்தையைச் சொல்லித் தரிப்பேன்!; |
| ஓதம் கடல் ஒலி போல | அலையெறியும் கடலின் ஒலி போல |
| எங்கும் எழுந்த | எல்லாவிடத்திலுங் கிளர்ந்த |
| நல் வேதத்து ஒலி | ஸாமவேத கோஷமானது |
| நின்று ஓங்கு | நிரந்தரமாகக் கிளர்ந்து வருமிடமான |
| தென் திருப்பேரெயில் வீற்றிருந்த—; | |
| முழங்கு சங்கம் கையன் மாயத்து | முழங்குகின்ற சங்கத்தைத் திருக்கையிலேயுடையனான பெருமானது மாயச்செயல்களிலே |
| ஆழ்ந்தேன் | அவகாஹித்தேன்; |
| என்னை முனிந்து என் | (இனி) என்னைச் சீறுவதனால் என்ன பலனுண்டாம்? |

* * * தனது நெஞ்சு அங்கே போனதற்கு ஒரு காரணஞ் சொல்லுகிறாள் முதலடியில். * கொங்கலர் தண்ணந்துழாய் முடியானுக்கு என் மங்கையிழந்தது மாமை நிறமே* என்று ஏற்கெனவே என் தாய் வருந்திக்கிடந்தாளன்றோ. இழந்த அந்த மாமை

சானதுதானும் அங்கே கையொழிந்து நின்றது. 'எம்பெருமானிடத்திலுள்ளதை நாம் கொள்ளைகொள்ளவேணுமேயல்லது நம்மிடத்திலுள்ளதொன்றை அவன்கொள்ளைகொள்ளுகையாவதென்? இதோ நான் போய் அதைக் கவர்ந்து வருகிறேன் காண்மின்' என்று வீரவாதஞ் செய்துபோன என்னெஞ்சு என்ன காரணமோ! அங்கே தகர்ப்புண்டது என்கிறாள்.

நெஞ்சு என்ன வேண்டுமிடத்து நெஞ்சினார் என்று உயர்வாகக் கூறியது பகவத் விஷயத்திலே ஈடுபட்ட அதிசயத்தைப் பற்ற. * அன்னஞ் செல்வீரும்.........கண்ணன் வைகுந்தனோடு என்னெஞ்சினாரைக் கண்டாலென்னைச்சொல்லி அவரிடை நீரின்னஞ் செல்வீரோ இதுவோ தகவென்றிசையின்களே * என்ற திருவிருத்தப் பாசுரம் இங்கே நினைக்கத் தகும்.

இழந்த மாமை நிறத்தை மீட்டுக்கொண்டு வருவதாகச் சொல்லி நெஞ்சு போயிற்று என்கிறவிதற்கு ஒரு கருத்துச் சொல்லவேணுமே; என் சொல்லலாமென்னில்; மாமை நிறத்தை அப்பெருமான் கவர்ந்ததுபோலவே என்னெஞ்சத்தையும் கவர்ந்தான்காணும் என்பதுவே இங்குக் கருத்து.

உழந்தினியாரைக்கொண்டு என் உசாகோ?—நெஞ்சு நம்மோடே யிருந்தாலன்றோ யாரோடாவது எதையாவது பேசிப் போதுபோக்கலாம். நெஞ்சு பறியுண்டார்க்குக் காலக்ஷேபம் பண்ண விரகுண்டோ வென்கிறாள். உழந்து என்றது வருந்தியென்றபடி. சிரமப்பட்டாகிலும் ஏவரோடேயாவது வார்த்தை சொல்லிப் போது போக்கலாமென்று நான் நினைப்பதுண்டு; நெஞ்சை யிழந்த பின்பு இனி துக்கப்பட்டு ஆரோடேகூட எத்தைச் சொல்லி நான் காலம் போக்குவதென்கிறாள். அசோகவனத்திலே பிராட்டிக்கு த்ரிஜடை ஸரமை என்றாகிலும் சிலர் உசாத் துணையாயினர்; எனக்காவார் இந்நிலத்தில் ஒருத்தருமில்லையே யென்கிறாள். "ஆரைக்கொண்டு என்னுசாகோ" என்றவிடத்து நம்பிள்ளையீடு காண்மின்;–"தேஹாத்மாபிமாநிகளான ஸம்ஸாரிகளைக் கொண்டு போது போக்கவோ? ஈச்வரோஹமென்றிருக்கிற ப்ரஹ்மேசாநாதிகளைக்கொண்டு போது போக்கவோ? பகவதநுபவத்திலே அந்யபரராயிருக்கிற நித்யஸூரிகளைக்கொண்டு போது போக்கவோ? இத்தலையை * உரிசூறைகொண்டு போனவனைக் கொண்டு போது போக்கவோ? ஆரைக்கொண்டு எத்தையுசாவுவது?" [உரிசூறைகொண்டு—அரைத்துணியையுமகப்படக் கொள்ளைகொண்டு.]

தன்னுடைய காலக்ஷேபமிருக்கும்படியைச் சொல்லுகிறாள் ஓதக்கடலொலி யென்று தொடங்கி. ஒத்ங்கிளர்ந்த கடல்போலே இருந்துள்ள வேதகோஷமானது எங்கும் பரம்பாநின்ற தென்திருப்பேரையில் வீற்றிருந்த முழங்கு சங்கக் கையனான எம்பெருமானுடைய ஸ்மித வீக்ஷணாதிகளிலே மீள வொண்ணாதபடி அகப்பட்டேன்; இவை இருக்கும்படியென்! என்று எப்போதும் நினைத்துருகியிருப்பதே என்னுடைய காலக்ஷேபம் என்றாளாயிற்று.

அன்னையர்காள் என்னைமுனிந்து என்?=ஸ்வாதீனரை முனிந்தாலன்றோ ப்ரயோஜனமுள்ளது; அவனுடைய மாயத்திலே ஆழ்ந்தவென்னை முனிந்து ப்ரயோஜனமில்லையே. நீங்கள் கடிந்து சொல்லுஞ்சொல் என் செவியில் புகுமளவிலே நான் நிற்கவில்லையே யென்கை.

நல்வேத மென்றது ஸாமவேதத்தை; *वेदानां सामवेदोऽस्मि—வேதாநாம் ஸாமவேதோஸ்மி * என்று கீதையில் அப்பெருமான் தானே யருளிச்செய்தது காண்க. (ச)

முனிந்துசகடமுதைத்து மாயப்பேய்முலையுண்டுமருதிடைபோய் *
கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்த கண்ணபிரானுக்கென்பெண்மைதோற்றேன் *
முனிந்தினியென்செய்தீர்? அன்னைமீர்காள்! முன்னியவன்வந்துவீற்றிருந்த *
கனிந்தபொழில்திருப்பேரெயிற்கே காலம்பெறவென்னைக்காட்டுமினே. (ரு)

| | |
|---|---|
| அன்னைமீர்காள் | தாய்மார்களே! |
| முனிந்து சகடம் உதைத்து | கோபத்தினால் சகடாசுரனை யுதைத் தொழித்தவனும் |
| மாயம் பேய் முலை உண்டு | வஞ்சகப் பேய்வடிவாக வந்த பூதனையின் முலையை யுண்டு அவளை முடித்தவனும் |
| மருதிடை போய் | இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்து சென்றவனும் |
| கனிந்த விளவுக்கு கன்று எறிந்த | விளங்கனியின் மீது வத்ஸாஸுரனை வீசி யெறிந்தவனுமான |
| கண்ணபிரானுக்கு | கண்ணபிரான் விஷயத்திலே |
| என் பெண்மை தோற்றேன் | எனது பெண்மைக்குரிய அடக்கம் முதலானவற்றை இழக்கப் பெற்றேன்; |
| இனி | இப்படியான பின்பு |
| முனிந்து என் செய்தீர் | என்னைச் சீறுவதனால் என்ன லாபம் பெறப் பார்க்கிறீர்கள்; |
| அவன் முன்னி வந்து வீற்றிருந்த | அப்பெருமான் முற்கோலி வந்து எழுந்தருளியிருக்குமிடமான |
| கனிந்த பொழில் திரு பேரெயிற்கே | பரிபக்குவமான சோலைகளையுடைய திருப்பேரெயில் தலத்திற்கே |
| என்னை | என்னை |
| காலம்பெற காட்டுமின் | காலதாமதமில்லாமல் கொண்டு போய்க் காணச் செய்மின். |

* * *—தென்திருப்பேரெயிலிலே என்னைக் கடுகக் கொண்டுசென்று சேர்ப்பதே தாய்மாரான வுங்களுக்கு உற்றது என்கிறாள். எம்பெருமானுடைய சில சேஷ்டிதங்களிலே தான் ஈடுபட்டமையை யுரைக்கின்றாள் முன்னடிகளில். அஸுரனால் ஆவேசிக்கப்பட்ட சகடத்தைத் தாளை நிமிர்த்துச் சாடியதென்ன, நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லவந்த பூதனையை முடித்ததென்ன, இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்து சென்று செய்த சேஷ்டையென்ன, வத்ஸாஸுரனைக்கொண்டு கபித்தாசுரனை முடித்ததென்ன ஆக இந்த அபதானங்களிலே நெஞ்சைச் செலுத்திப் பெண்மையை யிழந்த நான் உங்கள் முனிவுக்கு இலக்காகிப் பயனென்கொல்? என்கிறாள். எம்பெருமான் அந்த சேஷ்டிதங்களைச் செய்தது தன்னை யீடுபடுத்திக் கொள்வதற்காகவே யென்றிருக்கிறாள்.

என் பெண்மை தோற்றேன் என்றது—பெண்கள் நிற்கவேண்டிய நிலையிலே நிற்கமுடியாத படியாய்விட்டேன் என்றவாறு. நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்னுமிவை நான்கும் பெண்டிர்க்கு உரிய இலக்கணமாதலால் இவை தவிரப் பெற்றேனென்கை. ப்பு தவிரப் பயிர் போகாதாகிலும் மற்ற மூன்றும் தவிர்ந்தமைக்குக் குறையில்லை.

அன்னைமீர்காள்! இனி முனிந்து என்செய்தீர்—இனியேல் என்னை மீட்கலாமென்றோ நீங்கள் நினைக்கின்றது? சகடமுதைத்தது முதலான அவனது திவ்ய சேஷ்டிதங்களிலே நான் ஈடுபடுவதற்கு முன்னம் முனிந்தீர்களாகிலும் பயனுண்டாம்; இனி முனிந்து பயனென்? நாங்கள் செய்யவேண்டுவது என்னென்ன; அதற்குச் சொல்லுகிறாள் முன்னியவன் வந்து வீற்றிருந்த வென்று தொடங்கி. தண்ணீர் பெருகிச்சென்ற பின் அணைகட்டப் பாராதே முற்றமுன்னம் என்னை அத்தலத்திலே கொண்டு சேர்க்கப் பாருங்கோளென்கிறாள். "அவன் முன்னிவந்து வீற்றிருந்த" என்றும், "என்னை முன்னிக் காட்டுமினே" என்றும் அந்வயிக்கலாம். 'என்னைப் பெறுகைக்கு அவஸரப்ரதீக்ஷனாய்க் கொண்டு அவன் முன்னாடி வந்திருக்குமிடமான' என்பது முந்தின யோஜனையில் பொருள். நான் முடிவதற்கு முன்னமே என்னைக்கொண்டு சேருங்கோளென்பது பிந்தின யோஜனையின் பொருள். .... (ரு)

காலம்பெறவென்னைக்காட்டுமின்கள் காதல்கடலின்மிகப்பெரிதால் *
நீலமுகில்வண்ணத்தெம்பெருமான் நிற்கும்முன்னேவந்தென்கைக்குமெய்தான் *
ஞாலத்தவன்வந்துவீற்றிருந்த நான்மறையாளரும்வேள்வியோவா *
கோலச்செந்நெற்கள்கவரிவீசும் கூடுபுனல்திருப்பேரெயிற்கே. (சு)

| | |
|---|---|
| (அன்னைமீர்காள்) | தாய்மார்களே!; |
| நீலம் முகில் வண்ணத்து எம் பெருமான் | நீலமேக நிறத்தனான எம்பெருமான் |
| முன்னே வந்து நிற்கும் | என் கண்முன்னே வந்து நிற்பதாகக் காண்கின்றான்; (ஆனால்) |
| என் கைக்கும் எய்தான் | என் கைக்கு எட்டாதபடி தூரஸ்தனாகவே யிராநின்றான்; |

| | |
|---|---|
| காதல் கடலின் மிக பெரிது | எனது காதலோவென்னில் கடலிற் காட்டிலும் மிகவும் பெரிதாக வுள்ளது; |
| ஆல் | அந்தோ!; |
| அவன் | அப்பெருமான் |
| ஞாலத்து வந்து வீற்றிருந்த | இந்நிலவுலகத்தில் வந்து எழுந்தருளி யிருக்குமிடமாய் |
| நால் மறையாளரும் வேள்வி ஓவா | நான்கு வேதங்களையும் கரை கண்டவர்கள் வைதிகாநுஷ்டானங்களை நிரந்தரமாக நிகழ்த்துமிடமாய் |

| | |
|---|---|
| கோலம் செந்நெற்கள் கவரி வீசும் | அழகிய செந்நெற்பயிர்கள் கவரி போலே அசையப் பெற்றதாய் |
| கூடு புனல் | தீர்த்த ஸம்ருத்தியையுடையதான |
| திருப்பேரெயிற்கே | திருப்பேரெயில்தலத்திற்கே |
| காலம்பெற என்னை காட்டுமின்கள் | சீக்கிரமாக என்னைக் கொண்டு போய்க் காட்டுங்கள். |

* * * கீழ்ப்பாட்டில் 'காலம்பெற வென்னைக் காட்டுமினே' என்றாள். அது கேட்டவர்கள் 'நங்காய்! அவர் இப்போதே யன்றோ வேட்டைக் கெழுந்தருளினது; இப்போது நீ பதறிப் பயனென்?' என்று சொல்ல, ஐயோ! எனக்கோ அபிநிவேசம் மீதூர்ந்து செல்லாநின்றது; எனக்கு இங்குத் தரிப்பு அரிது; வீணைக எதையுஞ் சொல்லிப் போது போக்காதே இப்போதே யென்னைத் தென் திருப்பேரையிலே கொண்டுபுக்கு மகர நெடுங்குழைக் காதனைக் காட்டி ஸமாதானப்படுத்துங்கோளென்கிறாள். "[காலம்பெற வென்னைக்காட்டுமின்கள்] குடிக்குப் பரிஹாரமன்றாகிலும் எனக்குப் பரிஹாரம் இதல்லதில்லை" என்பது நம்பிள்ளையீடு. அப்பெருமானை நான் காலதாமதமின்றிக் காணும்படி செய்யுங்கோளென்றபடி. அதற்குக் காரணம் கூறுகின்றது "காதல் கடலின் மிகப் பெரிதால்" என்று. கீழே ஐந்தாம்பத்தில் *காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி* என்று தனது காதலைக் கடலோடொத்ததாகச் சொன்னாள்; இங்குக் கடலினும் விஞ்சியதாகச் சொல்லுகின்றாள்;·மேலே எட்டாம்பாட்டில் * என்காதல்—மண்டிணி ஞாலமுமேழ் கடலும் நீள் விசும்புங் கழியப் பெரிதால்*·என்கிறாள்; முடிவில் *சூழ்ந்ததனிற் பெரிய என்னவா* என்று தத்வத்ரயத்தையும் விளாக்குலைகொண்ட ·காதலென்கிறது. இப்படி கனத்தகாதலையுடைய நான் எங்ஙனே பதறாது ஆறி யிருக்கும்படி யென்கிறாள் போலும்.

நங்காய்! கடலின் மிகப்பெரிதாக வளர்கின்ற காதலை ஒருவாறு அடக்கி அளவு படுத்த வேண்டாவோ? நாங்கள் சொல்லுகிற வார்த்தையைக் கேட்டு எங்களோடே ஒழுக வேண்டாவோ? என்று தாய்மாரும் தோழிமாரும் சொல்ல, 'நீலமுகில் வண்ணத் தெம்பெருமான் முன்னே வந்து நிற்கும்' ·என்கிறாள். அழகிய வடிவைக்கொண்டு அவன்முன்னே வந்து நிற்க, காதல் வளருகைக்கு வழியுண்டாயிருந்ததேயல்லது அளவு படுகைக்கு வழியுண்டோ? அவன் முன்னேவந்து நின்றிலனாகில் நான் காதலையடக்கி உங்கள் வார்த்தையைக் கேட்க மாட்டேனோ? என்கிறாள்.

நங்காய்! நீலமுகில் வண்ணத்தெம்பெருமான் உன் முன்னே வந்து நின்றானாகில் அவனது கையைப் பிடித்துக்கொண்டு அவன் பின்னே நீ போகலாமே, 'காலம் பெற வென்னைக் காட்டுமின்கள்' என்று சொல்லுவதென்? என்று தாய் தோழியர் கேட்க, 'என் கைக்கும் எய்தான்' என்கிறாள். உருவெளிப்பாடேயல்லது வேறொன்றில்லையே; வார்த்தை சொல்லுதல் அணைத்தல் செய்யாமையேயன்று, என் கைக்கும் எட்டுகிறிலன்; ஆகையாலே சொல்லுகிறேனென்றாள். எங்கே கொண்டுபோய்க் காட்டச் சொல்லுகிறாயென்ன, அதற்குப் பின்னடிகளாலே விடை கூறுகின்றாள். வெறும் உருவெளிப்பாடன்றியே கண்ணாலே கண்டநுபவிக்கலாம் திருப்பதியிலே போகப் பார்த்தேனென்கிறாள்.

அவன் ஞாலத்து வந்து வீற்றிருந்த—நெடுந்தூரஞ் சென்று காணவேண்டாதே பரமபதத்துச் செல்வமெல்லாம் இங்கே தோற்றும்படி வந்து வீற்றிருக்குமிடமன்றோ தென் திருப்பேரை. அவ்வளவேயோ? நான்மறையாளரும் வேள்வி ஓவா—வேத வித்துக்களான

பரமபாகவதர்களின் ஸமாராதனமும் நிரந்தரமாகச் செல்லுமிடமன்றே. இவையொன்று மில்லையாகிலும் திவ்யதேசத்தின் நிலவளமும் நீர்வளமுமே கண்ணாரக்கண்டு கொண்டிருக்கப் போதுமேயென்கிறாள் ஈற்றடியால். ... .... .... ... (௫)

பேரெயில்சூழ்கடல்தென்னிலங்கை செற்றபிரான்வந்துவீற்றிருந்த *
பேரெயிற்கேபுக்கென்னெஞ்சம்நாடிப் போர்த்துவரவெங்கும்காணமாட்டேன் *
ஆரையினியிங்குடையம் தோழீ என்னெஞ்சம்கூவவல்லாருமில்லை *
ஆரையினிக்கொண்டென்சாதிக்கின்றது? என்னெஞ்சம்கண்டதுவேகண்டேனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| பேர் எயில் சூழ் கடல் | பெரிய மதில்களாலே சூழப்பட்டு கடலிடத்தே யுள்ளதான | இனி இங்கு யாரை உடையம் | இனி இந்நிலைமையில் யாரைத் துணையாக வுடையோம்? |
| தென் இலங்கை | தென்னிலங்காபுரியை | என்னெஞ்சம் கூவ வல்லாரும் இல்லை | (என்னை விட்டுப்போன) எனது நெஞ்சை அழைத்துத் தரவல் லாருமில்லை; |
| செற்ற | நீறாக்கி யொழித்த | இனி | நெஞ்சம் உதவாதே நீயும் தளர்ந்தபின்பு |
| பிரான் | எம்பெருமான் | ஆரை கொண்டு என் சாதிக்கின்றது | யாரைத்துணைகொண்டு என்ன பிரயோஜனம் ஸாதிக்கத்தக்க தாயிருக்கின்றது? (ஒன்று மில்லையே) |
| வந்து வீற்றிருந்த | வந்து எழுந்தருளியிருக்குமிட மான | | (ஆகையாலே.) |
| பேர் எயிற்கே | திருப்பேரெயில் தலத்திற்கே | என் நெஞ்சம் கண்டதுவே கண்டேன் | எனது நெஞ்சு கண்ட விஷயத் தையே நானும் கடைப்பிடித் தேன். |
| என் நெஞ்சம் | எனது நெஞ்சானது | | |
| புக்கு | புகுந்து | | |
| நாடி | அவனைத்தேடி | | |
| போர்த்து எங்கும் வர காணமாட்டேன் | மீண்டும் ஒரிடத்திற்கும் வரக் காணேன்; | | |
| தோழீ | வாராய் தோழீ!. | | |

* * * நங்காய்! உனக்கு அவன் பக்கலுள்ள ஆசாபாசம் அளவுகடந்திருந்தாலும் அவனே யெழுந்தருளுமளவும் இங்கேயிருக்க ப்ராப்தமேயல்லது அங்குச் செல்லுகை யுக்த மன்றென்று தோழி சொல்ல, அதற்கு விடையிறுக்கிறது இப்பாசுரம். இராவணனைக் கொன்ற விஜயலக்ஷ்மியோடே தென்திருப்பேரையிலே யெழுந்தருளியிருக்கிற இருப்பைக் கண்ட நெஞ்சு இன்னமும் மீண்டு வாராது; எனக்கு இங்கொரு துணையுமில்லை. துணையான எனது நெஞ்சை அழைக்கவல்லாருமில்லை; இங்கு ஆரைக்கொண்டு என்ன புருஷார்த்தம் ஸாதிப்பது! இனி என்னெஞ்சு போய்ச் சேர்ந்த தேசத்திலேயே நானும் போய்ச் சேருவதே தகுதியென்கிறாளாயிற்று.

ஈட்டு ஸ்ரீ ஸூக்தி காண்மின்;—"அஹம் தாவந் மஹிஷ்யாபி ஜக்ஞேந ஸதாம் மதிர் என்ற பெருமாளைப் போலே இப்பிராட்டியும் என்னெஞ்சு தரிக்கைக்கு விரகு பார்த்துத் திருப்பேரையிலே புக்காப்போலே நானும் அங்கே புகுமத்தனை யென்கிறாள்" என்று. இராமபிரான் பதினோராயிரமாண்டு இவ்விபூதியிலே யெழுந்தருளியிருந்து பிறகு நித்யவிபூதி யேறச் செல்ல நினைத்து முன்னம் இளையபெருமாளைப் பிரிந்து பின்னை தம்பி போனவழியே நானும் போகிறேனென்று உடனெழுந்தருளினதாக உத்தர ஸ்ரீராமாயணத்திலுள்ள கதை இங்கே அநுஸந்தேயம்.

தென்னிலங்கை செற்றபிரான் வந்து வீற்றிருந்த என்றது—பெருமாள் விரோதிநிரஸநம் பண்ணின விடாய்தீர இங்கேவந்தார்; அவருடைய விடாய்கெட * ஹதஶத்ரும் வஸிஷ்வஜே* என்றுப்போலே அணைத்து உபசாரங்கள் செய்ய என்னெஞ்சு ஏற்கெனவே போயிற்றென்ற படியாம். இரண்டாமடிக்கு நம்பிள்ளையருளிச் செய்யுமது பாரீர்;—"மீள வொண்ணாத லங்கையிலே புக்க திருவடியும் மீண்டுவந்தான்; அணித்தான இவ்வூரிலே புக்க நெஞ்சு மீண்டு வரக் காண்கிறிலேன். நெஞ்சுங்கூட வாராத பின்பு அவன் வாராமை சொல்ல வேண்டா விறே." நிறத்தை நான் மீட்டுக்கொணர்கிறேன் காண்மின் என்று சொல்லிப்போன நெஞ்

னது மீண்டு வரவில்லை யென்றது தம் திருவுள்ளத்தின் ப்ராவண்யாதிசயம் சொன்னபடி.

எம்பெருமானுக்குத் தூதுவிட வேண்டியதுபோக, தமது நெஞ்சுக்கே தூதுவிடவேண்டும்படியான நிலைமையுண்டு ஆழ்வார்க்கு; திருவிருத்தத்தில் * அன்னஞ் செல்வீருமன்கிறபாட்டிலே * என்னெஞ்சினாரைக் கண்டாலென்னைச்சொல்லி......இதுவோ தகவன்றிசைமின்களே * என்று நெஞ்சைக் குறித்துத் தூதுவிட்ட படியுமுண்டே; அங்ஙனே ஒப்போதும் தூதுவிடப்பார்த்து * ஆரையினியிங்குடையம் தோழீ * இத்யாதி பணித்தபடி.

தூது செல்வார் கிடைத்து நெஞ்சு இங்கு மீண்டுவந்தாலும், அப்பெருமானும் இங்கு வந்து சேர்ந்தாலும், இங்கே ஸாதிக்கக்கூடிய பயன் என்கொல்? நானுண்டாகவேணுமே: இங்கு வெறுந்தரையாயன்றோ கிடக்கிறது என்கிறாள் ஈற்றடியின் முற்பகுதியினால். ஆகவே நெஞ்சு போனவழியே நானும் போகப் பார்க்கிறேனென்று தலைக்கட்டினாளாயிற்று. (எ)

கண்டதுவேகொண்டெல்லாரும்கூடிக் கார்க்கடல்வண்ணனோடென்திறத்துக்
கொண்டு * அலர்தூற்றிற்றதுமுதலாக் கொண்டவென்காதலுரைக்கில்தோழீ! *
மண்டிணிஞாலமுமேழ்கடலும் நீள்விசும்பும்கழியப்பெரிதால் *
தெண்டிரைசூழ்ந்தவன்வீற்றிருந்த தென்திருப்பேரெயில்சேர்வன்சென்றே. (அ)

| | |
|---|---|
| கண்டதுவே கொண்டு | வெளியில் காணக்கூடிய எனது மேனி நிறம் மாறுதல் முதலிய வற்றையே கொண்டு |
| எல்லாரும் | தாய்மார் ஊரார் ஆகிய எல்லாரும் |
| கூடி | ஒன்றுசேர்ந்து |
| கார் கடல்வண்ணனோடு என் திறத்து கொண்டு | கருங்கடல் வண்ணனான எம்பெருமானுக்கும் எனக்கும் சேர்க்கை யுண்டானதாகக் கொண்டு |
| அலர் தூற்றிற்றது முதல் ஆ கொண்ட | பழி தூற்றினதுவே முதலாக இடங்கொண்ட |
| என் காதல் உரைக்கில் | எனது காதலைப் பாசுரமிட்டுச் சொல்லப்பார்க்கில் |
| தோழீ | தோழியே!; |
| | (என்காதல் எப்படிப்பட்ட தென்னில்) |
| மண் திணி ஞாலமும் | மண் செறிந்த பூமியும் |
| ஏழ் கடலும் | (அதைச் சூழ்ந்த) ஸப்த ஸாகரங்களும் |
| நீள் விசும்பும் | இதெல்லாவற்றுக்கும் இடங்கொடுக்கும் மஹாவகாசமான ஆகாசமும் ஆகிய இத்தனைக்கும் |
| கழிய பெரிது ஆல் | அவ்வருகுபட்டதாய் பெருத்திராநின்றது; (ஆனபின்பு) |
| தெண் திரை சூழ்ந்து | தெளிந்த அலைகளாலே சூழப்பட்டு |
| அவன் வீற்றிருந்த | அப்பெருமான் வீற்றிருக்குமிடமான |
| தென் திரு பேர் எயில் | தென் திருப்பேரைப் பதியை |
| சென்று சேர்வன் | (எனது தாபம் தீரும்படி) சென்று சேரக்கடவேன். |

* * *—ஊரார் பழி சொல்வதே யெருவாக எனக்கு வளர்ந்துசெல்லுகின்ற காதலானது ஸகலலோகங்களையும் கபளீகரித்துச் செல்லாநின்றது; ஆனபின்பு அவனிருக்கிற திருப்பேரையிலே சென்றல்லது நிற்க மாட்டேனென்கிறாள்.

கண்டதுவே கொண்டு என்பதற்கு அப்பெருமானை நான் கண்ணாலே கண்ட மாத்திரத்தையே கொண்டு' என்று பொருள் தோன்றக்கூடுமானாலும் அதுவன்று பொருள்; வெளியில் காணும் என்செயல்களையே கொண்டு என்று பொருள். அதாவது என்னெஞ்சினுள்ளே ஓடுகின்ற ஆசைப்பெருக்கை ஒருவருங்காணமுடியாதே; நான் வாயாற் சொல்லுகிற சில வார்த்தைகளையும் தொழுவது அழுவதான சிலபடிகளையுமன்றோ இவ்வுலகர் காண்பது; என் மேனி மெலிந்திருப்பதையும் இவர்கள் காணக்கூடும். ஆக இவர்கள் காணுமிவ்வளவையே கொண்டு என்றவாறு. இந்த ப்ரத்யக்ஷ பரிகலித நிமித்தங்களாலே எம்பெருமானுக்கும்

எனக்கும் சேர்த்தியுண்டானதாகக் கூறி உலகர் பழிதூற்றுகின்றார்களே, இப்பழி தூற்று தலே வினைநீராக என்காதல் வளரத் தொடங்கிற்று; அங்ஙனம் வளர்ந்த காதலானது ஞாலமும் கடலும் விசும்பும் ஆகிய இவையெல்லாம் ஏகதேசமென்னும்படி வளர்ந்திட்டது; இப்படிப்பட்ட பசியைக் கொண்டு நான் எங்ஙனே ஆறியிருக்கும்படி; தென்திருப்பேரையில் சென்று சேர்ந்தே காதல் தீர அநுபவித்துக் களிப்பேனென்றதாயிற்று.

கீழே (5-3-4) * ஊரவர் கவ்வையெருவிட்டு என்ற பாசுரத்தின் உரையையும் இங்கே நோக்கிக் கொள்வது. .... .... ... (அ)

சேர்வன்சென்றேன்னுடைத்தோழிமீர்காள்! அன்னையர்காளென்னைத்தேற்றவேண்டா *
நீர்களுரைக்கின்றதேன்னிதற்கு? நெஞ்சும்நிறைவுமெனக்கிங்கில்லை *
கார்வண்ணன்கார்க்கடல்ஞாலமுண்ட கண்ணபிரான்வந்துவீற்றிருந்த. *
ஏர்வளவொண்கழனிப்பழனத் தேன்திருப்பேரெயின்மாநகரே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| என்னுடை தோழி மீர்காள் | எனக்கு ஹிதஞ் சொல்லுகின்ற தோழிமார்களே! | கார் கடல் ஞாலம் உண்ட | கருங்கடல் சூழ்ந்த ஜகத்தை (ப்ரளயங்கொள்ளாதபடி) அமுது செய்தவனுமான |
| அன்னையர்காள் | அப்படிப்பட்ட தாய்மார்களே! | கண்ணபிரான் | ஸ்ரீக்ருஷ்ணபகவான் |
| என்னை தேற்ற வேண்டா | (எல்லை கடந்த) என்னைத் தேற்றுவதில் நீங்கள் முயல வேண்டா; | வந்து வீற்றிருந்த | நித்ய ஸந்நிதி பண்ணியிருக்குமிடமாய் |
| இதற்கு | எனது இந்த நிலைமைக்கு | ஏர் வளம் | எரினுடைய மிகுதியை யுடைத்தாய் |
| நீர்கள் உரைக்கின்றது என் | நீங்கள் சொல்லக்கூடியவார்த்தை என்ன இருக்கிறது? | ஒண் கழனி பழனம் | அழகிய கழனிகளையும் நீர்நிலங்களையுமுடைத்தான |
| எனக்கு நெஞ்சம் நிறைவும் இங்கு இல்லை | எனது நெஞ்சும் அடக்கம் முதலிய குணங்களும் இங்கில்லையன்றோ; (ஆதலால்) | தென் திரு பேர் எயில் மா நகர் | தென்திருப்பேரெயிலென்கிற திருப்பதியை |
| கார் வண்ணன் | நீலவண்ணனும் | சென்று சேர்வேன் | சென்று சேரக்கடவேன். |

* * *—கீழே தென்திருப்பேரெயில் சென்று சேர்வனென்று கூறின தலைவியை நோக்கித் தோழிமாரும் தாய்மாரும் 'இங்ஙனே பதறவேணுமோ? அப்பெருமானே சடக்கென இங்கு எழுந்தருள்வன் காண்; நீ புறப்பட்டுச் செல்லுகை தானும் யுக்தமன்று' என்று சொல்ல, அதற்கு 'நீங்கள் என்னை யொன்றும் தேற்றவேண்டா; போகைக்கு நீங்கள் சொல்லுகிற விரோதமென்? போனால் என்ன விரோதம் விளையும்?' என்று இவள் சொல்ல, 'உன்னுடைய தைர்ய சாதுர்யாதிகளுக்குப் போராது' என்று அவர்கள் சொல்ல, அவனுடைய ஸௌந்தர்ய ஸௌசீல்ய காருண்யாதி குணங்களாலே என்னுடைய தைர்ய சாதுர்யாதிகள் அபஹரிக்கப்பட்டுப் போயினவாதலால் உங்கள் வார்த்தை கேட்கும் நிலைமையில் நானில்லை; என்னோடு கலக்கைக்காக அவன் வந்தெழுந்தருளியிருக்கிற தென்திருப்பேரையே சென்று சேர்வேன் காண்மின் என்கிறாள்.

கீழே 'சேர்வன் சென்று' என்றதையே இங்கு மீண்டும் அநுபாஷித்திருக்கையாலே தோழிமாரும் தாய்மாரும் அதை ஆக்ஷேபித்துக் கூறினமை புலப்படும். என்னுடைத் தோழிமீர்காள் அன்னையர்காள் என்றது-க்ஷேபித்துச் சொல்லுகிறபடி. நீங்கள் எனக்குத் தோழிமாராகவும் தாய்மாராகவும் வாய்த்தது அழகிதாயிருந்தது!, இதுவோ நீங்கள் எனக்கு ப்ரியமும் ஹிதமும் பார்ப்பது! என்று க்ஷேபிக்கிறபடி. என்னைத் தேற்றவேண்டா என்கையாலே அவர்கள் இவளைத் தேற்றினது தெரிகின்றது; 'அம்மா! நீ இங்ஙனம் பதறலாகாது, வருந்தலாகாது, அவன்தானே சடக்கென வருவான்காண்; வந்தபோது ஸேவிக்கப்ராப்தமென்றிருப்பதன்றோ தகுதி' என்றிங்ஙனே பல சொல்லித் தேற்றினார்கள் போலும்; இங்ஙனே

தேற்றுதல் வேண்டா வென்கிறாளாயிற்று. நானோ திண்ணிய அத்யவஸாயமுடையவள்; என் திறத்தில் அறிவிலிகளான உங்களது பேச்சு பயன்படாதென்றவாறு.

இதற்கு நீர்களுரைக்கின்றதேன்? என்னுடைய நிலைமை உங்கட்குத் தெரியாமையில்லையே; எப்படிப்பட்ட நிலைமைக்கு எப்படிப்பட்டவார்த்தை சொல்லவேணுமென்பதுங்கூட அறியாத நீங்கள் அந்தோ! என் சொல்லுகிறீர்கள்? என்கிறாள். நீங்கள் சொல்லுமதைக் கேட்பதற்கு நெஞ்சு வேணுமே; மநஸ்ஸஹகாரமில்லாதவர்க்கு நீங்கள் பேசி என்ன பயன்? என்னெஞ்சு எங்கே புக்கதோ அங்கே போய்ச் சொல்லுங்கோளென்கிறாள்.

அம்மா! நெஞ்சு இங்கில்லையென்கிறாயே, நெஞ்சில்லையாகில் இந்த வார்த்தை தானும் நீ சொல்லமுடியாதன்றோ; எங்களைக் கண்டித்து நீ இங்ஙனே பலவார்த்தைகள் சொல்லும்போதைக்கு நெஞ்சு உடனிருந்ததானே யாகவேண்டும் என்று அவர்கள் சொல்ல. நிறைவு எனக்கில்லை என்கிறாள். அடக்கம் குடிபோயிற்றென்கை. உங்களோடு பேசுவதற்குரிய நெஞ்சு வேறு; உங்கள் பேச்சைக் கேட்பதற்குரிய நெஞ்சு வேறு. பேசுகைக்குரிய செஞ்சு இருந்தாலும் உங்கள் பேச்சுக் கேட்கைக்குரிய நெஞ்சு இல்லை காண்மினென்கிறாள் என்றுங் கொள்க.

நெஞ்சும் நிறையும் போனவிடம் சொல்லுகிறது பின்னடிகளில். கார்வண்ணன் என்பதற்கு நம்பிள்ளையிடு; "தாய்மார் தோழிமாரானவர்கள் வார்த்தை கேளாதபடியாம் வடிவு படைத்தவன்" என்று. அப்பெருமானது திருமேனி நிறத்தில் நான் ஈடுபட்டவளாதலால் உங்கள் பேச்சு கேட்கமாட்டேனென்றவாறு. வெறும் வடிவழகு மாத்திரமேயல்ல; ஆபத்து வந்தால் ரக்ஷித்து விடுமவன் என்கிறது கார்க்கடல் ஞாலமுண்ட என்பதனால்.

இப்படிப்பட்ட எம்பெருமான் தன் பெருமையெல்லாம் தோற்றவந்து எழுந்தருளியிருக்குமிடமான நீர் நிலவளம் மிக்க திருப்பேரெயிலாகிற மாநகரிலே சென்று சேர்வேனத்தனை; உங்கள் தடைக்கு மீளமாட்டேன், அவ்வழியிலும் நிற்கமாட்டேன் என்றாளாயிற்று.(௮)

நகரமும்நாடும்பிறவும்தேர்வேன் நாணெனக்கில்லையென்தோழிமீர்காள்! *
சிகரமணிநெடுமாடநீடு தென்திருப்பேரெயில்வீற்றிருந்த *
மகரநெடுங்குழைக்காதன்மாயன் நூற்றுவரையன்றுமங்கநூற்ற *
நிகரில்முகில்வண்ணன்நேமியான் என்னெஞ்சம்கவர்ந்தெனையூழியானே. (௯)

| | |
|---|---|
| என் தோழிமீர்காள் | எனது தோழிகளே! |
| சிகரம் மணி நெடு மாடம் | சிகரங்களையுடைத்தாய் மணி மயமாய் ஓங்கின மாடங்களை யுடைத்தாய் |
| நீடு | நெடுங்காலம் விளங்குமதான |
| தென் திருப்பேரெயில்வீற்றிருந்த | தென் திருப்பேரைப்பதியிலே எழுந்தருளியிருக்கின்ற |
| மாயன் | ஆச்சர்யகுண சேஷ்டிதங்களை யுடையனாய் |
| அன்று | பாரதயுத்தம் நடந்தவக்காலத்தில் |
| நூற்றுவரை | துரியோதனன் முதலிய நூறுபேர்களை |
| மங்க நூற்ற | தொலையும்படி ஸங்கல்பித்தவனும் |
| நிகர் இல் முகில் வண்ணன் | ஒப்பற்ற காளமேக வண்ணனும் |
| நேமியான் | திருவாழியை யுடையனுமான |
| மகரநெடுங்குழைக் காதன் | மகரபூஷணப் பெருமான் |
| என் நெஞ்சம் கவர்ந்து | எனது நெஞ்சை அபஹரித்துக் கொண்டு |
| எனை ஊழியான் | எத்தனைகாலத்தான்! (அவன் என்னெஞ்சைக் கவர்ந்தது இன்று நேற்றோ?) (ஆனபின்பு) |
| நகரமும் நாடும் பிறவும் தேர்வேன் | நகரங்களிலும் நாடுகளிலும் மற்றுமுள்ள விடங்களிலும் (நானே சென்று) ஆராய்க்கடவேன்; |
| எனக்கு நாண் இல்லை | அதுபற்றி எனக்கு லஜ்ஜையில்லை. |

* * *—சென்று சேர்வேன், சென்று சேர்வேனென்று பலகாலுஞ் சொன்ன பராங்குச நாயகியை நோக்கி 'அம்மா நீயே சென்று சேர்கையாகில் ஊரும் நாடும் மற்று மெல்லாரும் உன்னைப் பழி சொல்லாரோ' என்று தோழிமார் சொல்ல, 'அப்படி பழி சொல்லுவாரையன்றோ நான் தேடுகிறது' என்று இவள் சொல்ல, 'பழி சொன்னால் உனக்கு லஜ்ஜையாகாதோ?' என்று பின்னையும் தோழிமார் கேட்க, அவனுடைய அழகினாலும் ஆச்சர்ய திவ்ய சேஷ்டிதங்களாலும் என்னுடைய நெஞ்சும் லஜ்ஜையும் அபஹரிக்கப்பட்டு எத்தனையோ காலமாயிற்றே!, ஆதலால் இனித் தென்திருப்பேரையிலே நானே போகத்தடையென்? என்கிறாள்.

நகரமும் நாடும் பிறவும் தேர்வேன்—என்பதற்கு நகரம் முதலான இடங்களிலே சென்று எம்பெருமானைத்தேடுவேன் என்று பொருள்படவுங் கூடும்; அதுவன்று பொருள். "படைவீட்டிலும் நாட்டிலும் பத்தாதிகளிலும் பழி சொல்லுவாரைத் தேடுவேன்" என்பது பூருவர்களின் வியாக்கியானம். எம்பெருமானை நான் தேடுகிறேனல்லேன், பழி சொல்லுவாரையே தேடுகிறேனென்கிறாள். அதாவதென்னென்னில்; பழிசொல்லுகிறவர்கள் அவனையும் இவளையும் சேர்த்தன்றோ பழி சொல்லுவது; அதுதானே இவளுக்குப் பரமோத்தேச்யமென்று காட்டினபடி. அவனோடு எனக்குச் சேர்த்தியில்லையேயாகிலும் பழிசொல்லுவாருடைய கருத்தாலேயாகிலும் சேர்த்தி நேர்கின்றதே, அதுவேயெனக்கு உவப்பு என்கிறாள் போலும்.

பழிக்கு அஞ்சவேண்டியிருக்க, பழி சொல்லுவாரைத் தேடுகிறேனென்கிறவிது ஸ்த்ரீத்வகுணத்திற்குப் பொருந்துமோ வென்ன, நாணெனக்கில்லை யென்கிறாள்.

அப்படியா? இந்த நிலைமை எப்போது முதற்கொண்டு? என்றார்கள்; அதற்கு விடையளிக்கிறாள் மேல் மூன்றடிகளால். மகரநெடுங் குழைக்காதனென்று இத்தலத்தெம்பெருமான் திருநாமம். மகராயத கர்ணபாஶ: என்று வடமொழி வழக்கு. இங்கே ஒரு சிறிய ஆராய்ச்சி; மகரநெடுங்குழைக்காதன் என்று ஆழ்வாருளிச் செய்ததனால் அத்திருநாமம் வழங்கலாயிற்றா? அல்லது, ஏற்கெனவே வழக்கத்திலிருந்த திருநாமத்தை ஆழ்வார் எடுத்துரைத்தாரா? என்று சிலர் கேட்பதுண்டு. இரண்டுபடியும் ஸம்பாவிதமேயென்பர் பெரியோர். இந்த விசாரம் இத்தலத்தெம்பெருமான் திறத்தில் மாத்திரம் செய்வதன்று. மற்றும் பலதலத் தெம்பெருமான்களின் திருநாமங்களும் அருளிச் செயலிலுள்ளபடியே வழங்கி வருகின்றன. எம்பெருமான் திருநாமங்கள் மாத்திரமன்று; திருமோகூரில் தடாகத்தைத் தாளதாமரையென்றும், வானமாமலையில்தடாகத்தைச் சேற்றுத் தாமரையென்றும், அவ்விடத்துச் சோலையொன்றைப் தேனமாம் பொழிலென்றும், திருக்குடந்தையில் புஷ்கரிணியைப் பொற்றாமரை யென்றும், திருக்குறுங்குடியில் புஷ்கரிணியைக் கரண்டமாடு பொய்கையென்றும்..........இங்ஙனேயுள்ள பல வழக்குக்களிலும் இந்த ஆராய்ச்சி ஒக்கும். ஆழ்வார் திருவாக்குகளை மூலமாகக்கொண்டே இவ்வழக்குக்கள் தோன்றின வென்னலாம்.

"நாற்றுவரையன்று மங்க நூற்ற" என்ற சொற்சேர்த்தியை நோக்கி இங்கு நம்பிள்ளையருளிச் செய்வது பாரீர்—"தூர்யோதநாதிகளை வெல்ல எண்ணினாற்போலே என்னெஞ்சை அபஹரிக்கைக்கு எத்தனை காலமெண்ணினானோ?" ... ... (கo)

ஊழிதோறூழியுருவும்பேரும் செய்கையும்வேறவன்வையம்காக்கும் *
ஆழிநீர்வண்ணனையச்சுதனை அணிகுருகூர்ச்சடகோபன் சொன்ன *
கேழிலந்தாதியோராயிரத்துள்ளிவை திருப்பேரெயில்மேயபத்தும் *
ஆழியங்கையனையேத்தவல்லாரவர் அடிமைத்திறத்தாழியாரே. (கக

| | |
|---|---|
| ஊழி ஊழி தோறு | கல்பங்கள் தோறும் |
| பேரும் உருவும் செய்கையும் | நாமம் ரூபம் வியாபாரம் ஆகிய இவற்றை |
| வேறவன் | வேறாகவுடையனைக்கொண்டு |
| வையம் காக்கும் | உலகங்களைக் காத்தருள்பவனை |
| ஆழி நீர் வண்ணனை | கடல்வண்ணனை |
| அச்சுதனை | அடியார்களை ஒருகாலும் நழுவ விடாதவனான பெருமானைக் குறித்து |
| அணி குருகூர் சடகோபன் சொன்ன | நம்மாழ்வார் அருளிச் செய்த |
| கேழ் இல் | ஒப்பில்லாத |
| அந்தாதி ஓர் ஆயிரத்துள் | அந்தாதித் தொடையான ஆயிரத்தினுள்ளும் |
| திருப்பேரெயில் மேய இவை பத்தும் | தென் திருப்பேரைப்பதி விஷயமான இப்பதிகத்தைக்கொண்டு |
| ஆழி அம் கையனை ஏத்த வல்லார் அவர் | கையுந் திருவாழியுமான எம்பெருமானைத் துதிக்கவல்லவர்கள் |
| அடிமை திறத்து ஆழியார் | நித்ய கைங்கர்யத்திலே ஆழ்ந்தவராவர். |

* * *—இத்திருவாய்மொழி கற்பார்க்கு பகவத் கைங்கர்யத்திலே அவகாஹனம் பலிக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். எம்பெருமானுக்கு ஸ்வத: நாமம் ரூபம் ஒன்றுமில்லையாயினும் ஆச்ரிதர்க்காக அவற்றைப் பரிக்ரஹிப்பதுண்டே; அங்ஙனம் பரிக்ரஹிப்பதுதான் ஒவ்வொரு யுகத்திலே ஒவ்வொரு வகையாயிருக்கும். யுகந்தோறும் ஆச்ரித ரக்ஷணத்துக் கீடான ரூபநாம சேஷ்டைகளை வெவ்வேறாயுடையனைக் கொண்டு ஜகத்தை ரக்ஷிக்குமவனான ஆழிநீர்வண்ணனை யச்சுதனைப் பற்றி ஆழ்வாருளிச் செய்த ஒப்பிலாத ஆயிரத்தினுள் இவை பத்தையுங் கொண்டு ஸர்வேச்வரனைத் துதிக்க வல்லவர்கள் நித்ய கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தில் அபிஷிக்தராவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டிற்றாயிற்று.

வியாக்கியானங்க ளெல்லாவற்றையும் ஊன்றி நோக்குமிடத்து மூன்றாமடியில் “மேய பத்தால்” என்கிற பாடம் சிறக்குமென்று தோன்றுகிறது. “அடிமைத் திறத்து ஆழியாரே” என்பதற்கு இரண்டு வகையான பொருள் கூறுவர்; ஆழியார்—ஆழ்ந்தவர்கள். (அல்லது) திருவாழியாழ்வானைப் போன்றவர்கள். * கருதுமிடம் பொருது—கைவந்த சக்கரத்தன் * என்கிறபடியே திருவாழியாழ்வான் எம்பெருமான் திருவுள்ளம் பற்றுமிடமெங்குஞ் சென்று பணிசெய்து வருமா போலே விடுத்த திசைக்கருமந்திருத்துமவர்கள்என்றபடி. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.
வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

## ஏழாம்பத்து—நான்காந் திருவாய்மொழி ஆழியெழ.

---

உரையவதாரிகை: கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வாருடைய பதற்றம் அளவுகடந்திருந்தது. * மண்திணி ஞாலமுமேழ்கடலும் நீள் விசும்புங் கழியப் பெரிதாகத் தாங்கொண்டகாதலை வெளியிட்டு, இப்படி கரைபுரண்ட காதலையுடைய நான் இங்கேயிருக்ககில்லேன், தென் திருப்பேரையில் சென்று சேர்வேனத்தனையென்று சொல்ல, தோழிமார் தாய்மார் முதலானார் இது ஸ்வரூபஹானியென்று சொல்லித் தடுத்தவளவிலும் கேட்கமாட்டாதவராய்ப் பதறியே நின்றாராழ்வார்.

* தென் திருப்பேரெயில் சேர்வன் நானே * என்றும் * சேர்வன் சென்றே * என்றும் திண்ணமாகக் கூறின ஆழ்வார் புறப்பட்டுச் செல்லப்பார்த்தார். * காலாழும் நெஞ்சழியுங் கண்சுழலும் * என்னும்படியான நிலைமையிலே நின்றிருந்தாராகையாலே புறப்பட்டுச்செல்ல வலிமையற்றிருந்தார். வாய்கொண்டு பேசவும் முடியாதபடி பலமழிந்து கிடந்தவிவர்க்கு ஒரு வழியாலே பலமுண்டாக்க வேணுமென்று பார்த்தானெம்பெருமான். தன்னுடைய விஜயாபதான பரம்பரைகளைக் காட்டிக் கொடுத்தால் அவற்றைக்கண்டு பலம் மிக்குத் தரித்திருப்பர் என்று கருதி, உலகளந்தது, கடல் கடைந்தது, நிலமிடந்தது, பிரளயத்திலே உலகமுண்டது முதலான அபதானங்களைக் காட்டிக் கொடுத்து, ஆழ்வீர்! இவற்றை யநுஸந்தித்துத் தரித்து வாழும்' என்ன, ஆழ்வாரும் அவ்வபதானங்களை ஸமகாலத்திற் போலே கண்டு பாசுரந்தோறும் ஒவ்வொரு அபதானமாகப் பேசித்தரிக்கிறார் இத்திருவாய்மொழியில்.

ஆறாயிரப்படியில் பிள்ளானருளிச் செய்யும் அவதாரிகை பேரின்பமே வடிவெடுத்தது; அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் வருமாறு;—

"இப்படி தென் திருப்பேரையிலே தாமே போக அத்யவஸித்திருந்த சமயத்தில் * [illegible] * என்னும் ப்ரக்ரியையாலே தென் திருப்பேரையிலே ம்ருகயார்த்தமாக வெழுந்தருளின பெரியபெருமாள் விஜயலக்ஷ்மீ பரிவ்ருதராய்க்கொண்டெழுந்தருளின படியைக் கண்டு நிரதிசயப்ரீதியுக்தராய் ஸம்ப்ராந்த மானஸராய்க்கொண்டு, * [illegible] * என்னும் ந்யாயத்தாலே ப்ரதிகூல நிரஸன ஜநிதச்ரமத்துக்கு சிசிரோபசாரமாகப் பெரியபெருமாளோடே ஸம்ச்லேஷித்து, ததீய திவ்யசேஷ்டிதங்களைச் சொல்லி; என்னப்பன் செய்தருளினபடியென்? பிரான் செய்தருளினபடி யென்? என்றநுபவிக்கிறார்".

ஆழியெழச் சங்கும்வில்லுமெழ * திசை
வாழியெழத் தண்டும்வாளுமெழ * அண்டம்
மோழையெழ முடிபாதமெழ * அப்பன்
ஊழியெழ உலகம்கோண்டவாறே. (க)

| | | | |
|---|---|---|---|
| ஆழி எழ | திருவாழியாழ்வான் முன்னே உயர்ந்து தோன்றவும் | முடி பாதம் எழ | (வளர்ந்த விரைவிலே) திருமுடியும் திருவடியும் ஒக்கக்கிளம்பும்படியாகவும் |
| சங்கும் வில்லும் எழ | பாஞ்சஜந்யமும் சார்ங்கமும் தோன்றவும் | | |
| தண்டும் வாளும் எழ | கதையும் நாந்தகமும் தோன்றவும் | ஊழி எழ | (மாவலியால் துன்பப் பட்ட காலம்போய்) நல்ல காலம் வந்து தோன்றும்படியாகவும் |
| திசை வாழி எழ | திசைகள் தோறும் மங்களா சாஸனகோஷம் கிளம்பவும் (உயர வளர்ந்தபடியாலே) | அப்பன் | ஸர்வேச்வரன் |
| அண்டம் மோழை எழ | அண்டகபாலம் பிளந்து ஆவரண ஜலம் குமிழி கிளம்பும் படியாகவும் | உலகம் கொண்ட ஆறு எ | (திரிவிக்ரமனாய்) உலகங்களை யளந்து கொண்டபடி என்னே!. |

* * *—முதன் முதலாக உலகளந்த விஜயாபதானத்தை அநுஸந்தித்து உகக்கிறார். உலகில், தலைவனான அரசனுக்கு ஒரு காரியம் ஆகவேண்டியிருந்தால் பரிகரங்கள் முன்னின்று காரியஞ் செய்து தலைவனுக்கு வெற்றியை யுண்டாக்கப் பார்ப்பதென்கிற ஒரு முறை

புண்டே; அந்த ரீதியிலே, ஆயுதங்களில் தலைவனான திருவாழியாழ்வான் முந்துற முன்னம் வியாபரித்தபடியைப் பேசுகிறார் ஆழியெழ வென்று. பெருமாள் காட்டுக்கெழுந்தருளப் புறப்படுவதற்கு முன்னே இளைய பெருமாள் தாம் முற்பட்டதுபோல, எம்பெருமானுடைய திருவடி உலகளக்க நிமிர்வதற்கு முன்னே திருவாழியாழ்வான் தான் முன்னே உயர்ந்து தோற்றினானாயிற்று.

* கருதுமிடம் பொருது - கைந்நின்ற சக்கரத்தன் * என்கிறபடியே எம்பெருமான் நினைப்பிட்டவிடத்திலே சடக்கெனச் சென்று காரியம் தலைக்கட்டித் திரும்புமாற்றல் படைத்தவனான திருவாழியாழ்வான் 'இந்த மாவலியின் செருக்கை யடக்க தேவரீர் வேணுமோ? அடியேனுக்கு நியமித்தருளினால் ஒரு நொடிப் பொழுதில் நிறைவேற வேண்டிய காரியமன்றோ இது' என்று அவலீலையாகப் பேசுவான்போலே தான் முன்னே யெழுந்தானாயிற்று. எம்பெருமான் எந்த அவதார மெடுத்தாலும் திருவாழியாழ்வான் தான் முன்னிருந்து காரியஞ் செய்பவன். இதை ஸுதர்சநசதகத்தில் * ஶக்திஸ்ஸௌஷ்ட்ரவாட்யா நவவரஸுபகா வர்த்திநீ தர்ஶிதாஸ்ய * என்கிற ஸ்ரீஸூக்தியாலே நன்குணரலாம். ராமாவதாரம் வராஹாவதாரம் நரஸிம்ஹாவதாரம் பரசுராமாவதாரம் முதலியவற்றில் திருவாழியாழ்வானுடைய ப்ரஸ்தாவம் இல்லையானாலும், ராமாவதாரத்தில் அம்பிலே ஆவேசித்தும், வராஹாவதாரத்தில் கோரப்பல்லிலே ஆவேசித்தும், நரஸிம்ஹாவதாரத்தில் திருவுகிரிலே ஆவேசித்தும், பரசுராமாவதாரத்திலே மழுவிலே ஆவேசித்தும் இப்படி ஒரோரவதாரந்தன்னிலே ஒரொருவஸ்துவாக இருந்து காரியஞ் செய்தவன் திருவாழியாழ்வானே யென்கிறது மேற்குறித்த ஸுதர்சநசதக ச்லோகம். * ஹரிர்வளராணிகீ யம்ப்ருயபதி ஸஹிதம் வ்ருக்ஷணம் கெடிஸாஸ: என்கிற அதற்கு முந்திய பாதமானது எம்பெருமானுடைய ஸங்கல்பமே தான் திருவாழியாழ்வானென்கிறது.

த்ரிவிக்ரமாவதாரத்திற்கு முந்தியதான வாமநாவதாரம் முதற்கொண்டே திருவாழியாழ்வான் காரியஞ் செய்து வருகிறானென்பதும் இங்கு அறியத்தக்கது. அது என்னென்னில்; வாமன மூர்த்தியின் வடிவழகாலும் மழலைச் சொல்லாலும் மனமகிழ்ந்த மஹாபலி மூவடி மண்ணைக்கொடுக்க யத்தனித்தவளவிலே, அவனுடைய ஆசாரியனான சுக்கிரன் எம்பெருமானது வடிவையும் வந்த வகையையும் பேச்சையும் ஊன்றிப்பார்த்து 'இவன் ஸர்வேச்வரன், தேவகார்யம் செய்யும் பொருட்டு உன் செல்வத்தை யெல்லாம் பறித்துப்போக வந்தான்; ஆகையால் நீ இவனுக்கு ஒன்றும் தரத்தகாது' என்று தானத்தைத்தடுக்க, அவன் அதை ஆதரியாமல் தாரைவார்த்து தத்தம் செய்யப்புக, ஜல பாத்திரத்தின் (திருக்காவிரியின்) த்வாரத்திலே அந்த சுக்ரன் புகுந்து கொண்டு நீர்த்தம் விழவொட்டாமல் தடுக்க, ஸ்ரீ விஷ்ணு த்வாரம் சோதிப்பவன் போல, தன்னுடைய திருக்கையிலணிந்த தர்ப்ப பவித்ரத்தின் நுனியால் அவனது கண்ணைக் குத்திக் கலக்க, அவனும் கண் கெட்டு அங்கு நின்றும் வெளிப்பட, பின்பு மாவலியினிடத்தில் நீரேற்றுப் பெற்றனனென்பது வரலாறு. இக்கதையை யருளிச் செய்யாநின்ற பெரியாழ்வார் * மிக்க பெரும் புகழ் மாவலி வேள்வியில் தக்கதிதன்றென்று தானம் விலக்கிய சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய சக்கரக்கையன் * என்றருளிச் செய்திருத்தலால் [அதாவது, துரும்பாற் கிளறிய சக்கரம் என்ற சொல்லாற்றலால்] * கருதுமிடம் பொருது-கைந்நின்ற சக்கரத்தன் * என்றபடியே திருமால் விரும்பிய இடங்களில் விரும்பின வடிவங் கொண்டு செல்லுந் தன்மையுடைய திருச்சக்கரமே பவித்ரத்தின் வடிவத்துடன் நின்று சுக்கிரன் கண்ணைக் கலக்கியதாக ஆசிரியர் நிர்வஹிப்பதுண்டு. அஃது இங்கு அறியத்தக்கது.

ஈட்டு ஸ்ரீ ஸூக்தி;—"(ஆழியெழ.) இவன் வளர்ந்தருளுகைக்குக் கணிசித்தப்படியைக் கண்டு, தனியாக வொண்ணாதென்று பயப்பட்டுத் திருவாழியாழ்வான் ஒரு கையிலேயேறினார்."

சங்கும் வில்லுமெழ=தங்களுக்குள்ளே தலைவனானவொருவன் எழுந்து காரியஞ் செய்தால் மற்ற அநுசரர்கள் வாளாவிருக்க வொண்ணுமோ? அவர்களுமெழுந்து காரியஞ் செய்ய நேருமன்றோ; ஆகவே திருவாழியெழுந்தது கண்டு சங்கும் வில்லுமெழுந்தன. இங்கே, * இடங்கை வலம்புரி நின்றார்ப்ப, எரிகான்றடங்காரொடுங்கு வித்ததாழி, விடங்காலுந் தீவாயரவணைமேல் தோன்றல் திசையளப்பான், பூவாரடி நிமிர்த்த போது, * என்ற பூதத்தாழ்வார் பாசுரமும் அநுஸந்தேயம். சுக்கிரன் கண்ணைத் துரும்பாற் கிளரியும் மன்னுநமுசியை வானிற் சுழற்றியும் இப்படி எம்பெருமான் வெற்றி பெற்று உலகங்களை யளக்கப்பெற்ற ஸந்தோஷமிகுதியினால் திருச்சங்காழ்வான் இடத்திருக்கையிலிருந்துகொண்டு பகைவர் அஞ்சி நடுங்கும்படி பெருமுழக்கஞ் செய்தான். திருவாழியாழ்வான் வலத்திருக்கையிலிருந்து கொண்டு சத்துருக்கள் மண்ணுண்ணும்படி பெருஞ்சுடர் விட்டு ஜ்வலித்தான்—என்று தாற்பரியம்.

திசைவாழியெழ—திசைகள் தோறும் அநுகூலருடைய 'வாழி வாழி' யென்கிற மங்களாசாஸநத்வநி கிளர்ந்ததாயிற்று. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"அவனுக்கு என் வருகிறதோ வென்றாயிற்று திவ்யாயுதங்கள் கிளருகிறது; அவை தனக்கு என் வருகிறதோ வென்று * வடிவார் சோதிவலத்துறையுஞ் சுடராழியும் பல்லாண்டு, படைபோர்புக்கு முழங்குமப் பாஞ்சசன்னியமும் பல்லாண்டு * என்னு நிற்பர்களிறே. * நின்கையில் வேல் போற்றி * என்று வேல் தனக்கும் பரிய வேண்டியிருக்குமிறே." என்று.

தண்டும் வாளுமெழ—பஞ்சாயுதங்களினுடையவும் எழுச்சியைச் சொல்ல நினைத்த ஆழ்வார் முன்னம் 'ஆழியெழச் சங்கும் வில்லுமெழ' என்று மூன்று ஆயுதங்களின் எழுச்சியைச் சொல்லி இப்போது மற்றை யிரண்டாயுதங்களின் எழுச்சியைச் சொல்லுகிறார். இடையில் "திசைவாழி யெழ" என்றதனால் அந்த திவ்யாயுதங்களுக்கும் மங்களாசாஸனம் பண்ணுவாருளரென்று சொன்னதாயிற்று.

அண்டம் மோழை யெழ—தாழ்வின்றி வளர்ந்தபடியாலே அண்டகபாலம் பிளந்து ஆவரண ஜலம் குமிழி கிளம்பும்படியாக என்றபடி. தன்னுடைய வளர்ச்சிக்கு அண்டாந்தராளம் இடம் போராமையாலே விம்மி அண்டபித்தி பிளந்து ஆவரண ஜலம் உள்ளே வந்து புகும்படியாக வென்கை.

முடி பாதமெழ—திருமுடியும் திருவடிகளும் ஒரு சேர எழ என்று இதனால் வளர்ந்தருளின சடக்கு சொன்னபடி. ஊழியெழ—ஆஸுரப்ரக்ருதியான மஹாபலி அஹங்கரித்திருந்த கொடிய காலம் தொலைந்து நல்லடிக்காலம் தோன்ற என்றபடி. ஊழி என்பது பொதுவாகக் காலத்தைச் சொல்லுமதானாலும் இங்கு ப்ரகரணம் நோக்கி விலக்ஷணகாலமென்று பொருள்படும். ஆகவிங்ஙனேயாக, அப்பன் உலகங் கொண்டவாறே—மஹோபகாரகனான ஸர்வேச்வரன் உலகத்தை அளந்து கொண்டபடி யென்னே! என்று ஈடுபடுகிறார். ... (க)

ஆறுமலைக்கு எதிர்ந்தோடுமொலி * அர
வூறுசுலாய் மலைதேய்க்குமொலி * கடல்
மாறுசுழன்று அழைக்கின்றவொலி * அப்பன்
சாறுபட அமுதம்கொண்டநான்றே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | ஸர்வேச்வரன் | அரவு ஊறு சுலாய் | வாஸுகி யென்கிற பாம்பினுடம்பைச் சுற்றி |
| சாறு பட | (தேவர்களுக்கு) மஹோத்ஸவமுண்டாம்படியாக | மலை தேய்க்கும் ஒலி | மந்தர மலையிலே தேய்க்கிற ஒலியும் |
| அமுதம் கொண்ட நான்று | (கடல் கடைந்து) அமுதங் கொண்ட காலத்திலே, | கடல் மாறு சுழன்று | கடலானது இடம் வலமாக மாறிச் சுழன்று |
| ஆறு | (கடலிலே சென்று சேர்வதற்காக வந்து கொண்டிருந்த) ஆறுகளானவை | அழைக்கின்ற ஒலி | கோஷிக்கிற கோஷமும் உண்டாயின. |
| மலைக்கு எதிர்ந்து ஓடும் ஒலி | தங்கள் பிறப்பிடமான மலைகளையே நோக்கித் திரும்பி யோடுகிற ஒலியும், | | |

* * *—கடல் கடைந்தபடியை யநுஸந்தித்து ஈடுபடுகிறார். துர்வாஸமுனிவனுடைய சாபத்தினால் தேவர்களினுடைய செல்வம் யாவும் ஒழிய, அசுரர் வந்து பொருது அமரரை வெல்ல, பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையும் துணைகொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி வாசுகி யென்னும் மகாநாகத்தைக் கடைக்கயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடைந்ததாகப் புராண வரலாறு அறிக.

மஹா நதிகளெல்லாம் மலைகளினின்று பெருகிக் கடலிலே வந்து சேருமே; அப்படி சேருவதற்காக ஆறுகள் புறப்பட்டு வந்துகொண்டிருந்தனவாம். கடைகிறபோது மலைகளிற் காட்டில் கடல் உயருகையாலே ஆறுகள் எதிர்வெள்ளங் கோத்து மலைகளை நோக்கியே திரும்பியோடுகிற வோசை விலக்ஷணமாயிருந்ததென்று முதலடியாற் சொல்லுகிறது. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி;—'கடலிலே மந்தரத்தை நட்டவாறே கடல் கொந்தளித்து ஸஹ்யம் போய்த் தாழ்ந்து கொடுத்தது; நீரானது தாழ்ந்த விடத்தே ஓடக்கடவதிறே. ஆறுகளானவை மலையைக் குறித்து எதிரிட்டோடுகிற போதை த்வநியானது இவர்க்குச் செவிப்படுகிறபடி. இவர்க்குக் காலத்ரயத்திலுமுள்ள தெல்லாம் தெரியும்படியிறே அவன் வெளிச் சிறப்பித்தது."

அரவூறு சுலாய் மலை தேய்க்கு மொலி—'ஊறு' என்று பாம்பினுடம்புக்குப் பெயர்; வடமொழியில் (ஹோம) என்பது போல. வாஸுகியினுடைய உடலைச் சுற்றிக் கடைகிற போதுண்டான சரசரவென்கிற த்வனியும். கடல்மாறு சுழன்றழைக்கின்ற வொலி—மந்தர மலை திரிந்து வருகிறபோது கடல் இடமும் வலமுமாக எதிராகச் சுழன்று தன்னிலே யெதிர்த்து கோஷிக்கிற கோஷமும். இவை யெப்போது உண்டாயின வென்னில்;

சாறுபட அப்பன் அமுதங் கொண்ட நான்று—தேவர்களுக்கு மஹோத்ஸவமுண்டாம்படியாக என்னப்பன் கடலைக் கடைந்து அமுதங் கொண்ட காலத்திலே. சாறு—உத்ஸவமும் ஸாரமும். சாறுபட—நீர்கோதாம்படியென்று ஆறாயிரம். .... .... (௨)

நான்றிலவேழ்மண்ணும் தானத்தவே * பின்னும்
நான்றிலவேழ்மலை தானத்தவே * பின்னும்
நான்றிலவேழ்கடல் தானத்தவே * அப்பன்
ஊன்றியிடந்து எயிற்றில்கொண்டநாளே. (௩)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | ஸர்வேச்வரன் | ஏழ் மலை | ஸப்த குலாசலங்களும் |
| ஊன்றி இடந்து எயிற்றில் கொண்ட நாள் | (ப்ரளயக்கதையான பூமியைக்) குத்தியிடந்தெடுத்து எயிற்றின் மேலே கொண்டகாலத்தில் | நான்றில | சலியாதவையாகி |
| | | தானத்த | தங்கள் ஸ்தானத்திலேயே யிருந்தன; |
| ஏழ் மண்ணும் | ஏழு தீவுகளான பூமி பேதங்களானவை | பின்னும் | மேலும்; |
| | | ஏழ் கடல் | ஸப்த ஸாகரங்களும் |
| நான்றில | நழுவாதவையாய் | நான்றில | உடைந்தொழுகாதவையாய் |
| தானத்த | தங்கள் ஸ்தானத்திலேயே யிருந்தன; | தானத்த | தங்கள் ஸ்தானத்திலேயே யிருந்தன; |
| பின்னும் | மேலும் | ஏ | ஆச்சரியம்! |

* * *—மஹாவராஹ மூர்த்தியாகி நிலத்தை யிடந்தெடுத்த வரலாற்றை யநுஸந்திக்கிறார் இப்பாட்டில், ரஸாதலத்தில் கிடந்த பூமியை என்னப்பன் திருவெயிற்றாலே இடந்தெடுத்தருளின போது ஸப்தத்வீபங்களும் ஸப்த குலபர்வதங்களும் ஸப்த ஸாகரங்களும் தம் தம் ஸ்தானங்களிலே நிச்சலமாயிருக்கும்படி யெடுத்தருளினன், இதென்ன ஆச்சரியம்! என்கிறார். ஒரு வ்யாபாரத்தாலே செய்ததாயிராமல் ஸ்வஸங்கல்பத்தாலே ஆச்சரியமாகச் செய்த வித்தனையென்று ஈடுபடுகிறபடி. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"இவன் பெரிய வானைத் தொழிலைச் செய்யா நிற்கச் செய்தேயும் முன்பு போலே ஒரு குறையற உண்பாருடுப்பாராய்ச் செல்லுகிறபடி. ஆதாரமானவன் கூட நிற்கையாலே இவற்றுக்கு ஒரு குறை வாராதே."

முன் ஒரு காலத்தில் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக் கொண்டு கடலில் மூழ்கிப்போன ஹிரண்யாக்ஷனென்னுமசுரனைத் திருமால் மஹாவராஹமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்திக் கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்பது வராஹாவதார வரலாறு. அந்தக் கோலாஹலத்தில், ஸப்த த்வீபரூபமான பூமி பேதங்களும் குலாசலங்களும் ஏழ்கடல்களும் ஒரு மாறுபாடடையாதே நிச்சலமாகி ஸ்வஸ்வ ஸ்தானங்களிலே யிருந்தன வென்பது இங்கு ஆச்சரியம். .... ... (௩)

நாளுமெழ நிலநீருமெழ * விண்ணும்
கோளுமெழ எரிகாலுமெழ * மலை
தாளுமெழச் சுடர்தானுமெழ * அப்பன்
ஊளியெழ உலகமுண்டவூணே. (௪)

| | | | |
|---|---|---|---|
| நாள் எழவும் | காலவ்யவஸ்தை பேரும்படியாகவும் | மலை தாள் எழவும் | மலைகள் அடிபெயர்ந்து போகவும் |
| நிலம் நீர் எழவும் | நிலமும் நீரும் நிலைகுலைந்து போகவும் | சுடர்தானும் எழ | நக்ஷத்திரம் முதலிய சுடர்ப் பொருள்கள் நிலைகுலையவும் |
| விண்ணும் கோளும் எழ | ஆகாசமும் க்ரஹங்களும் நிலை குலைந்து போகவும் | அப்பன் | ஸர்வேச்வரன் |
| எரி காலும் எழ | நெருப்பும் காற்றும் நிலைகுலைந்து [போகவும் | ஊளி எழ உலகம் உண்ட ஊண் | ஆரவாரமுண்டாம்படி உலகங்களை உண்டருளின உணவு |
| | | ஏ | என்ன ஆச்சரியம்! |

* * *—மஹாப்ரளயத்தில் ரக்ஷித்தபடியை இப்பாட்டில் அருளிச் செய்கிறார். கலையென்றும் காஷ்டையென்றும் முஹூர்த்தமென்றும் நாழிகையென்றும் யாமமென்றும் இரவென்றும் பகலென்றும் சொல்லுகிற காலப்பகுப்புகள் ஒன்றுமின்றியே காலவ்யவஸ்தை நிலைகுலைந்து போகப்பட்டதாம் ப்ரளயத்தில்; அது சொல்லுகிறது நாளுமெழ என்று. கால நிபந்தனைக்குக் காரணம் ஆதித்யனுடைய கதியேயாதலால் ப்ரளயத்தில் அவ்வாதித்யன் இலனாகவே காலவ்யவச்சேதங்களும் இல்லையாயினவென்க. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி

காண்மின்;—"ஆண்டென்றும் மாஸமென்றும் நாளென்றும் கலையென்றும் காஷ்டையென்றும் சொல்லுகிறவையெல்லாம் ஆதித்யனுடைய ஸஞ்சாரகதியாலே வருகிறவையிறே; வ்யவஸ்தாபகனான ஆதித்யன் உள்ளே புக்கால் வ்யவஸ்தாப்யமான இவையும் போமித்தனையிறே.'

நிலம் நீரும் விண்ணும் கோளும் எரிகாலும் மலைசுடர் தானுமெழ ப்ருதிவி முதலான பஞ்ச பூதங்களும் ஸகலகுலாசலங்களும் நக்ஷத்ர ஜ்யோதிஸ்ஸுக்களும் ஆகிய இவையெல்லாம் உள்ளேபுக உண்டருளினனென்கிறது.

மலைதாளுமெழ என்ற விடத்து 'மலையும் தாளும்' என்று பொருளன்று; மலைகளானவை தாளோடே (அடியோடே) பறிந்து உள்ளே புக என்றபடி. வேர்க்குருத்தோடே பறிய வென்க.

ஊளியெழ—ஊளி யென்று ஓசைக்குப்பெயர்; கீழ்ச்சொன்னவற்றையெல்லாம் உறிஞ்சியுண்கிறபோது ஓசையுண்டாகுமே; அது சொன்னபடி. இனி, ஊளி யென்று பசிக்கும் பேருண்டு; அப்பொருளை முக்யமாகக் கொண்டார் பன்னீராயிரவுரைகாரர்; "பசித்துண்டானென்று தோன்றும்படியாக" என்பது உரை. .... ... (௪)

ஊணுடைமல்லர் ததர்ந்தவொலி * மன்னர்
ஆணுடைச்சேனை நடுங்குமொலி * விண்ணுள்
ஏணுடைத்தேவர் வெளிப்பட்டவொலி * அப்பன்
காணுடைப்பாரதம் கையறைபோழ்தே. (௫)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | ஆச்ரித பக்ஷபாதியான கண்ணபிரான் | ஆண் உடை சேனை | வீரபுருஷர்களை யுடைத்தான சேனைகளானவை |
| காணுடை பாரதம் கைஅறைபோழ்து | ஆச்சரியமான பாரதயுத்தத்தை அணிவகுத்தபோது; | நடுங்கும் ஒலி | நடுங்குகிற சத்தமும் |
| ஊண் உடைமல்லர் ததர்ந்த ஒலி | வலியை யூட்டும் உணவுகளைக் கொண்ட பெருமிடுக்கரான மல்லர்கள் (த்வந்த்வயுத்தம் பண்ணி) நெரிந்துவிழுகிற ஓசையும் | விண்ணுள் | விண்ணுலகத்திலே |
| | | ஏண் உடை தேவர் | மதிப்பாக எண்ணப்பட்ட தேவர்கள் |
| மன்னர் | அரசர்களினுடைய * | வெளிப்பட்ட ஒலி | (யுத்த விநோதம் காண்கைக்காக) வெளிப்பட்ட ஓசையும் ஆயின |

*—கண்ணபிரான் பாரதப்போர் நிர்வஹித்தருளின சதிரைப்பேசுகிறுரிப்பாட்டில். மல்லர்கள் ஒருவரோடொருவர் பொருது நெரிந்து விழுந்த வோசை அப்போது வலிதாயிருந்தது. வீரபுருஷர்கள் நிறைந்த ராஜஸேனைகளானவை "க்ருஷ்ணன் ஸாரதியாய் நிற்கிறுன்" என்று கேட்டவாறே குடல் குழம்பிக் கூப்பிட்ட வொலி மிகுந்திருந்தது. விண்ணவர்கள் இந்த யுத்தத்தின் அதிசயங் காண்கைக்காக வெளிப்பட்டு நின்று ஸ்தோத்ரம் பண்ணுகிற முழக்கம் விஞ்சியிருந்தது. ஆக இத்தகைய கோஷங்கள் நிரம்பப்பெற்று நடந்தது பாரதப்போர் என்றதாயிற்று.

மல்லர்—ஆயுதமொன்றும் கையிலின்றியே உடலோடு உடல் நெரியப்பொருபவர் மல்லர் எனப்படுவர். யுத்தத்திற்கென்றே அவர்கட்கு அதிகப்படியான உணவுகளையிட்டு வளர்ப்பர்களாதலால் 'ஊணுடை' என்று சிறப்படைமொழி கொடுக்கப்பட்டது.

ஆணுடைச்சேனை=பீஷ்மர் த்ரோணர் என்னும்படியான மஹாபுருஷர்களைத் தலைவராகக் கொண்ட சேனையாதலால் ஆணுடைச்சேனையென்றது. கண்ணபிரான் யுத்தத்தில்

ஒரு காரியமும் செய்யாமற்போனாலும் அவன் பாண்டவ பக்ஷபாதியாயிருக்கின்றானென்று கேட்டவாறே அந்த சேனையடங்கலும் நடுங்கும்படியாயிற்று. ஏனுடைத்தேவர் என்றது * ஸஹஸ்ராஸ:ஸிவஹோ: * என்பது முதலான பல தேவ வாக்கியங்களிலே ஒரு கோவையாக எண்ணப்பட்ட தேவர்கள் என்றபடி. காணுடைப்பாரதம்—விரும்பிக்காணவேண்டும்படியான ஆசையை விளைக்கவல்ல பாரதப்போர் என்பது கருத்து. கையறை போழ்து—தொடங்கின காலத்தில் என்பது தேர்ந்த பொருள். "கையுமணியும் வகுத்து அங்கோடிங்கோடுலாவிப் படைபொருத்தி நீங்களின்னபடி செய்யக்கடவீகோள் நாங்களின்னபடி செய்யக்கடவோமென்று கை தட்டிவிட்டபோது" என்பது ஈடு. .... .... (௫)

போழ்துமேலிந்த புன்செக்கரில் * வான்திசை
சூழுமெழுந்து உதிரப்புனலா * மலை
கீழ்துபிளந்த சிங்கமொத்ததால் * அப்பன்
ஆழ்துயர்செய்து அசுரைக்கொல்லுமாறே. (௬)

| | | | |
|---|---|---|---|
| போழ்து மெலிந்த | போதுபோனவாறே | அசுரை கொல்லும் ஆறு | இரணியாசுரனைக் கொன்ற விதமானது |
| புன் செக்கரில் | செக்கர் வானமிடுகிறவளவிலே | | |
| வான் திசை | ஆகாசமும் திக்குக்களும் | | |
| சூழும் எழுந்து | சூழக்கிளம்பி | மலைகீழ்து பிளந்த சிங்க ஒத்ததும் | ஒரு மலையைக் கீழேயிட்டு அதன் மேலேயிருந்து அம்மலையைக் கீண்ட சிங்கம் போன்றிருந்தது, |
| உதிரம் புனல் ஆ | ரத்தவெள்ளமாம்படி | | |
| அப்பன் | ஆச்ரித பக்ஷபாதியான நரஸிம்ம மூர்த்தியாய் | | |
| ஆழ் துயர் செய்து | அளவிறந்த துன்பத்தை விளைத்து | ஆல் | ஆச்சரியம் |

* * *—ப்ரஹ்லாதாழ்வானுக்காக இரணியனை வதைக்கும் போதுண்டான அதிசயத்தைக் கூறுவதிப்பாட்டு. தேவர் மனிதர் முதலிய எவ்வுயிர்களாலும் பகலிலும் இரவிலும் வானத்திலும் பூமியிலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமுண்டாகாதபடி வரம்பெற்றவன் இரணியன். இவன் தேவர் முதலிய யாவர்க்கும் பல பல கொடுமைகளைப் பண்ணி அனைவரும் தன்னையே கடவுளாக வணங்கும்படி செய்து வருகையில், அவன் மகனான ப்ரஹ்லாதாழ்வான் இளமை தொடங்கி மஹா விஷ்ணு பக்தனாய்த் தந்தையின் கட்டளைப்படி முதலில் அவன் பெயரைச் சொல்லிக் கல்வி கற்காமல் நாராயணநாமம் சொல்லிவரவே கடுங்கோபம் கொண்ட இரணியன் ப்ரஹ்லாதனைத் தன் வழிப்படுத்துவதற்குப் பலவாறு முயன்றும் அங்ஙனம் வழிபடாதவனைக் கொல்வதற்கு என்ன வுபாயஞ் செய்தும் அவன் பகவானுடைய அநுக்ரஹ பலத்தினால் ஒரு கேடுமின்றியிருக்க, ஒரு நாள் சாயங்காலத்திலே அந்த ஹிரண்யன் தன் புத்திரனை நோக்கி 'நீ சொல்லும் நாராணனென்பான் எங்கேயுளன்? காட்டு என்ன; 'தூணிலுமுளன், துரும்பிலுமுளன், எங்குமுளன்' என்று அக்குமாரன் உறுதியாய்ச் சொல்ல, உடனே இரணியன் இங்கு உளனோவென்று சொல்லி எதிரில் நின்ற தூணைப் புடைக்க உடனே அதிலிருந்து திருமால் மநுஷ்யரூபமும் சிங்கவடிவுங் கலந்த நரசிங்க மூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாசற்படியில் தன் மடிமீது வைத்துக்கொண்டு தன் திருக்கையில் நகங்களால் அவன் மார்பைப் பிளந்து அழித்திட்டு ப்ரஹ்லாதனுக்கு அருள் செய்தானென்ற வரலாறு அறிக.

பொழுதுபோய்ச் செக்கர் வானமிடுகிறவளவிலே [இரணியனது வரத்தில் அகப்படாத ஸந்த்யாகாலத்திலே] பள்ளங்கண்டவிடமெங்கும் வெள்ளம் பரக்குமாபோலே ஆகாசமும் திசைகளும் நிரம்ப ரக்த வெள்ளம் கொழித்துப் பரம்பும்படி, ஒரு மலையைக் கீழேயிட்டுக்

கொண்டு மேலேயிருந்து அத்தை ஒரு மலை பிளக்கின்றதோ வென்னலாம்படி வியாபரித்தபடி யென்னே! என்று வியக்கிறார்.

கீழ்து—கிழித்து என்றுமாம். ஈற்றடியில் 'அசுரரை' என்பது பாடமன்று; அசுரை என்றே பாடம். தொகுத்தல் விகாரம். அசுரனை யென்றபடி. .... .... (சு)

மாறுநிரைத்து இரைக்கும்சரங்கள் * இன
நூறுபிணம் மலைபோல்புரள * கடல்
ஆறுமடுத்து உதிரப்புனலா * அப்பன்
நீறுபட இலங்கைசெற்றநேரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | ஸ்வாமியான ஸ்ரீராமபிரான் | இனம் நூறு பிணம் | இனமினமாய் நூறு நூறான ராக்ஷஸப்பிணங்களானவை |
| இலங்கை நீறு பட செற்ற நேர் | லங்காபுரி பஸ்மமாம்படி த்வம்ஸம் பண்ணின நேர்த்தி (எங்ஙனே யிருந்ததென்றால்) | மலைபோல் புரள | மலை மலையாகப் புரண்டுவிழவும் |
| மாறு நிரைத்து இரைக்கும் சரங்கள் | எதிரெதிராக நிறைக்கப்பட்டு சப்திக்கிற சரங்களாலே | கடல் | கடலானது |
| | | உதிரம் புனல் ஆ ஆறு மடுத்து | ரத்த வெள்ளத்தாலே நிரம்பி ஆறுகளிலே எதிர்த்தோடும் படியாகவுமிருந்தது. |

* * *—இலங்கையைப் பாழ்படுத்தின விதம் வியந்து கூறப்படுகிறது இதில். ஓயாதே அம்புகளைப் பொழிகையாலே அம்புகளானவை ஒன்றோடொன்று தாக்கி அதனாலெழுந்த வொலி விசைத்திருந்தது. அரக்கர் பிணங்களானவை நூறு நூறு இனமினமாக மலைபோலே புரண்டு விழ்ந்தன. கடல் ரத்தவெள்ளத்தாலே நிரம்பி ஆறுகளிலே வரவெதிர்க்க நின்றது.

பிராட்டி *ஜநிஜேஷௌவ லங்கேயம் ஶ்மஶாநஸத்ருஶீ பவெத்* என்று சொன்னபடியே சுடுகாடாயிற்றென்கிறார் இலங்கை நீறுபட வென்று. ... .... (எ)

நேர்சரிந்தான் கொடிக்கோழிகொண்டான் * பின்னும்
நேர்சரிந்தான் எரியுமனலோன் * பின்னும்
நேர்சரிந்தான் முக்கண்மூர்த்திகண்டீர் * அப்பன்
நேர்சரிவாணன் திண்டோள்கொண்டவன்றே. (அ)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | ஸ்வாமியான கண்ணபிரான் | பின்னும் | அதற்குமேலே |
| நேர் சரி வாணன் | முதுகுகாட்டியோடின பாணாஸுரனுடைய | எரியும் அனலோன் | ஜ்வலித்துக்கொண்டிருந்த அக்நியும் |
| திண்தோள் கொண்ட அன்று | திண்ணிய தோள்களைத் துணித்து வெற்றிகொண்ட அக்காலத்திலே | நேர் சரிந்தான் | எதிர்நில்லாமல் சரிந்தான்; |
| கோழி கொடி கொண்டான் | மயிலைக் கொடியாகக் கொண்ட ஸுப்ரமணியன் | பின்னும் | அதற்குமேலும் |
| நேர் சரிந்தான் | எதிர் நில்லாமல் சாய்ந்துபோனான்; | முக்கண் மூர்த்தி | முக்கண்ணனான சிவபிரானும் |
| | | நேர் சரிந்தான் கண்டீர். | அப்படியே முதுகிட்டுப் போனான் கிடீர். |

* * *—பாணாஸுரயுத்த விஜயவ்ருத்தாந்தம் கூறுவதிப்பாட்டு. பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாசுரனுடைய பெண்ணாகிய உஷை யென்பவள் ஒரு நாள் ஒரு புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனக்கண்டு அவனிடத்தில் மிகுந்த ஆசை பற்றியவளாய்

தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு 'அவனைப்பெறுதற்கு உபாயம் செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்த:புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்தப்பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினால் பொருது நாகாஸ்திரத்தினால் கட்டிப்போட்டிருக்க, துவாரகையிலே அநிருத்தனைக்காணாமல் யாதவர்களெல்லாரும் கலங்கியிருந்த போது, நாரத முனிவனால் நடந்த வரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீ கிருஷ்ண பகவான் பெரிய திருவடியை நினைத்தருளி, உடனே வந்துநின்ற அக்கருடாழ்வானது தோள்மேலேறிக்கொண்டு பலராமன் முதலானவரோடுகூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்திற்கெழுந்தருளும்போதே அப்பட்டணத்தின் சமீபத்தில் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமத கணங்கள் எதிர்த்துவர, அவர்களை யெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை யுண்டாக்கி அதன் சக்தியினாலே அதனைத் தூரத்திவிட்டபின்பு, சிவபிரானது அநுசரர்களாய்ப் பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நி தேவர் ஐவரும் தன்னோடெதிர்த்துவர, அவர்களையும் நாசஞ் செய்து பாணாஸுரனோடு போர்செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாக சிவபெருமானும் ஸுப்ரம்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவன் ஒன்றும் செய்யாது கொட்டாவி விட்டுக் கொண்டு சோர்வடைந்தபோகும்படி செய்து ஸுப்ரம்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் அநேகமாயிரம் ஸூர்யர்க்கு ஸமானமான தனது சக்கராயுதத்தை யெடுத்துப்பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாக விருக்கையில் பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளிப் பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க அதன்பின் மீண்டுவந்தனன் என்பது பாணாஸுரபங்க விருத்தாந்தம்.

கொடிக்கோழிகோண்டான்— கோழியென்று மயிலுக்கும் பெயர். மயூரத்வஜனை ஸுப்ரஹ்மண்யன் முந்துற முன்னம் பங்கப்பட்டானென்கிறார். [பின்னும் எரியுமனலோன் நோ்சரிந்தான்] ஈடு—"அவ்வளவிலே நாற்பத்தொன்பது அக்நிகளும் பெரிய கிளர்த்தியோடே யெரிந்து தோற்றிற்று; அவையுமெல்லாம் பின்னிட்டன."

பரிவாரங்களெல்லாம் பங்கப்பட்டொழிந்த பின்பு தலைவனும் தொலைந்தானென்கிறது மூன்றுமடி. .... ... ... ... (அ)

அன்றுமண்ணீரெரிகால் விண்மலைமுதல் *
அன்றுசுடர் இரண்டுபிறவும் * பின்னும்
அன்று மழையுயிர்தேவும்மற்றும் * அப்பன்
அன்றுமுதல் உலகம்செய்ததுமே. (௯)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | ஸ்வாமியான ஸர்வேச்வரன் | உலகம் செய்ததும் | உலகங்களைப் படைத்ததும், |
| முதல் | முந்துறமுன்னம் | அன்று | அந்தவொரு க்ஷணத்திலேயாம்; |

| | | | |
|---|---|---|---|
| மண் நீர் எரி கால் விண் | பஞ்ச பூதங்களையும் | பின்னும் | அதுக்குமேலே |
| மலை முதல் | மலைகள் முதலானவற்றையும் | மழை | மேகங்களையும் |
| செய்ததும் | படைத்ததும் | உயிர் | மழையினால் பிழைக்கும் உயிர் [களையும் |
| அன்று | அந்த க்ஷணத்திலேயாம்; | தேவும் | மழைக்குக் கடவர்களான தேவர் [களையும் |
| சுடர் இரண்டு | சந்திரன் ஸூர்யன் ஆகிற இரண்டு சுடர்ப்பொருள்களையும் | மற்றும் | மற்றுமுள்ள திர்யக் ஸ்தாவரங் [களையும் |
| பிறவும் | மற்றுமுள்ள நக்ஷத்ராதி தேஜஸ் பதார்த்தங்களையும் | செய்ததும் | உண்டாக்கினதும் |
| செய்ததும் | உண்டாக்கினதும் | அன்று | அந்த க்ஷணத்திலே, |
| அன்று | அந்த க்ஷணத்திலேயாம்; | | |

* * *— இப்பாட்டின் கருத்தை இரண்டு வகையாக நிர்வஹிப்பர்கள் பூருவாசாரியர்கள். ஆதிஸ்ருஷ்டியைச் சொல்லுகிறதாக ஒரு நிர்வாஹம். கீழே பாணாஸுரனை வென்றி கொண்ட விருத்தாந்தம் சொல்லியிருப்பதாலும் மேற்பாட்டிலும் க்ருஷ்ணாவதார சரிதமொன்று சொல்லியிருப்பதாலும் இப்பாட்டையும் கீழ்ப்பாட்டோடே சேஷமாக்கி பாணாஸுரனுடைய செருக்கையடக்கினவன்று தான் ஜகத்து உண்டாயிற்றென்று ஆழ்வாரருளிச் செய்கிறார் என்பதாக மற்றொரு நிர்வாஹம். இந்த நிர்வாஹத்தின்படி 'அன்று' என்று இப்பாட்டில் அடிதோறும் வருவது வாணனை வென்ற வக்காலத்திலே என்ற பொருளிலாம். ஆத்ய ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறதாக நிர்வஹிக்கிற பக்ஷத்தில் அன்றே என்றது 'எல்லா ஸ்ருஷ்டிகளும் ஏக க்ஷணத்திலேயே' என்றபடி. "க்ரமஸ்ருஷ்டியன்று; யுகபத் ஸ்ருஷ்டியென்று கருத்து" என்பது பன்னீராயிரவுரை. ... ... (கூ)

மேய்நிரைகீழ்புக மாபுரள * சுனை
வாய்நிறைநீர் பிளிறிச்சொரிய * இன
ஆநிரைபாடி அங்கேயொடுங்க * அப்பன்
தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே. (௰)

| | | | |
|---|---|---|---|
| மேய் நிரை | மேய்கிற பசுக்களானவை | இனம் ஆ நிரை பாடி அங்கே ஒடுங்க | மிகவும் ஸம்ருத்தமான திருவாய்ப்பாடியானது அங்கே அடங்கும்படியாகவும் |
| கீழ் புக | கீழே யொதுங்கும்படியாகவும் | அப்பன் | கண்ணபிரான் |
| மா புரள | (கீழது மேலதாக மலையைப் பிடிக்கையாலே மலையிலுள்ள) மிருகங்கள் புரண்டுவிழும்படியாகவும் | தீ மழை காத்து | விநாச ஹேதுவான மழையைத் [தடுக்க |
| சுனை வாய் நிறை நீர் | சுனைகளினுடைய வாயளவும் நிறைந்த நீரானது | | |
| பிளிறி சொரிய | பெரிய ஆரவாரத்தோடு சொரியும்படியாகவும். | குன்றம் எடுத்தான் | கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கினான். |

* * *—திருவாய்ப்பாடியில் ஆயர்கள் வழக்கப்படி இந்திரபூஜைக்கென்று சமைத்த சோறு முதலியவற்றையடங்கலும் கண்ணபிரான் அவ்விந்திரனுக்கு இடவொட்டாமல் கோவர்த்தன மலைக்கு இடுவித்துப் பின்பு தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்துவிட, பிறகு இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங்களை ஏவி ஏழுநாள் விடாமழை பெய்விக்க, கண்ணபிரான் அக் கோவர்த்தனகிரியைக் குடையாகத் தூக்கிக் கோக்களையும் கோவலரையும் காத்தருளினனென்றவரலாறு ப்ரஸித்தம். அப்போதைய நிலைமையை இப்பாட்டில் அநுபவிக்கிறார்.

மேய்கிற பசுக்களானவை புல்லும் உமிழாதே அசையிட்டுக்கொண்டு கீழே புகவும், மலைமேலுள்ள மிருகங்களெல்லாம் மலைகுடையாகக் கவிழ்ந்தபடியாலே கீழேபுரண்டு

விழவும், சுனைகள் வாயளவும் நிறைந்த நீரைப் பெரிய கோஷத்தோடு சொரியவும், திருவாய்ப்பாடி யடங்கலும் அங்கே யொடுங்கவும் அப்பன் தீமழை காத்துக் குன்றமெடுத்தானென்றதாயிற்று. ... .... .... ... (கo)

குன்றமெடுத்தபிரான் அடியாரோடும் *
ஒன்றிநின்ற சடகோபனுரைசெயல் *
நன்றிபுனைந்த ஓராயிரத்துள்ளிவை *
வென்றிதரும்பத்தும் மேவிக்கற்பார்க்கே. (கக)

| | | | |
|---|---|---|---|
| குன்றம் எடுத்த பிரான் | கோவர்த்தன மலையை யெடுத்த கண்ணபிரானுடைய | ஓர் ஆயிரத்துள் நன்றி புனைந்த | ஆயிரத்தினுள்ளே நலம் மிக்கதான |
| அடியாரொடும் | அடியார்களோடு கூட | இவை பத்தும் | இத்திருவாய்மொழி |
| ஒன்றி நின்ற | ஒருமைப்பட்டிராநின்ற | மேவி கற்பார்க்கு | தன்னை விரும்பிக் கற்குமவர்களுக்கு |
| சடகோபன் | நம்மாழ்வாருடைய | வென்றி தரும் | பலவகையான விஜயத்தையும் கொடுக்கும், |
| உரை செயல் | அருளிச்செயலாய் | | |

* * *—எம்பெருமானுடைய விஜய பரம்பரைகளைத் தொடுத்த இத்திருவாய்மொழியை ஓதவல்லவர்கள் எல்லா வகையான விஜயமும் பெறுவார்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது.

“குன்ற மெடுத்த பிரானடியாரொடும் ஒன்றிநின்ற சடகோபன்” என்ற சொல்லமைப்பை நோக்கித் திருக்குருகைப் பிரான் பிள்ளான் ஆருயிரப்படியில் அருளிச் செய்கிறார் “ஆழ்வார்தாமும் கோவர்த்தனத்தின் கீழே ஆயரோடே கூடி நின்று......” என்று. குன்றமெடுத்த பிரானுடைய அடியார்கள் குன்றமெடுத்த காலத்திலுமுண்டு, பிற்காலத்திலுமுண்டு. குன்றமெடுத்த காலத்தில் அக்குன்றத்தின் கீழே யொதுங்கி நின்றவர்களே அடியாராவர்; அவர்களோடு ஒன்றிநின்ற சடகோபன் என்றால், கீழே பிள்ளானுரைத்ததாக எடுத்துக்காட்டினதே பொருளாம். பிற்காலத்திலுள்ள அடியார்களைக் கொண்டு அர்த்தமருளிச் செய்கிறார் பெரியவாச்சான் பிள்ளை; “கோவர்த்தநோத்தாரணம் பண்ணின உபகாரகனான க்ருஷ்ணன் திருவடிகளையே தஞ்சமாக நினைத்திருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களிலே தம்மையும் அந்யதமராக நினைத்திருந்த ஆழ்வார் அருளிச் செய்தவிது. மலையை யெடுத்தவன்று மலைக்கீழே யொதுங்கினவர்களைப் போலே ஸம்ஸாரத்துக்கு அஞ்சி க்ருஷ்ணன் திருவடிகளிலே யொதுங்குமவர்கள் வைஷ்ணவர்கள்; அச்செயலுக்குத் தோற்று அடிமை புக்கவராயிற்று இவர்” என்பது இருபத்திநாலாயிரம். கீழே காட்டிய இரண்டு நிர்வாஹங்களுக்கும் பொதுவாகவுள்ளது ஈடு;—“கோவர்த்தநோத்தாரணம் பண்ணின நீர்மையிலும் அப்போதை யழகிலும் ஈடுபட்டிருக்குமவர்களோடே கூடிநின்று தாமும் ப்ரீதராய் ப்ரீதிக்குப் போக்குவீடாகச் சொன்ன பாசுரமாயிற்று” என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

“வென்றிதரும் பத்தும் மேவிக் கற்பார்க்கே” என்று ஆழ்வாரருளிய பலச்ருதிக்கேற்ப இற்றைக்கும் இத்திருவாய்மொழியை ஜபித்து விஜயஸித்தி பெறுவது அநுபவஸித்தம். (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி-ஏழாம்பத்து-ஐந்தாந் திருவாய்மொழி-கற்பாரிராமபிரானை

---

அவதாரிகை:—கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய சில விஜய சேஷ்டிதங்களைக் காணப்பெற்று அநுபவித்தவாழ்வார் அப்படிப்பட்ட மற்றுஞ் சில சரிதைகளையும் வாயாரப்பேசி, அந்தோ! இப்படிப்பட்ட பகவத் குணங்களை யநுபவிக்க இட்டுப் பிறந்தும் ஸம்ஸாரிகள் அந்யபராயிருப்பது என்னோ வென்று வியந்தும் திருவுள்ளம் நொந்தும் பேசுகிறதாய்த்து இத்திருவாய்மொழி. ... .... .... (*)

கற்பாரிராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ?*
புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே*
நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும்*
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்பெற்றநாட்டுளே. (க)

| | | | |
|---|---|---|---|
| புல் பா முதல் ஆ | புல்லாகிற பதார்த்தம் முதலாகவும் | நான்முகனார் பெற்ற நாட்டுளே | பிரமன் படைத்த இவ்வுலகுக்குள்ளே |
| புல் எறும்பு ஆதி | மிக அற்பமான எறும்பு முதலாகவும் | | |
| நல் பால் அயோத்தியில் வாழும் | (ராமகுணங்கள் நடையாடுகிற) நல்ல தேசமான அயோத்யா புரியில் வாழ்கிற | நல் பாலுக்கு உய்த்தனன் | நல்ல ஸ்வபாவத்தையுடைத்தாம்படி பண்ணினான்; |
| | | | (ஆதலால்) |
| சராசரம் முற்றவும் | ஸ்தாவர ஜங்கமங்களானவையெல்லாவற்றையும் | கற்பார் | (உலகில்) கற்க விரும்புமவர்கள் |
| ஒன்று இன்றியே | ஒருவிதமான ஸாதநாநுஷ்டானமுமில்லாமலிருக்கச் செய்தேயும் | இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ | (குணக்கடலாகிய) ஸ்ரீராமனைத் தவிர மற்றொரு வ்யக்தியைக் கற்க நினைப்பர்களோ? |

* * *—இராமபிரானுடைய ஒரு விலக்ஷணமான தன்மையை யருளிச் செய்கிறார்கள். தசரத சக்ரவர்த்தியின் கட்டளையின்படி இராமபிரானைத் தேரிலேற்றிக்கொண்டு போய்க் கங்கைக்கரையில் விட்டுத் திரும்பி வந்த ஸுமந்த்ரன் சக்ரவர்த்தியிடம் சொல்லுகிறான்—*[illegible] விஷயே தே மஹாராஜ! ராமவ்யஸநகர்சிதா:; அபி வ்ருக்ஷா: பரிம்லாநாஸ் ஸபுஷ்பாங்குர கோரகா:, உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச, பரிசுஷ்கபலாசாநி வநாந்யுபவநாநி ச. * என்றான். மஹாராஜரே! உம்முடைய திருக்குமாரன் நாட்டைவிட்டுக் காட்டுக்குப் புறப்பட்டுச் செல்லுகிறானேயென்கிற துயரத்தினால் மரங்களெல்லாம் வாடியுலர்ந்து போயின; நதிகள், குளங்கள், குட்டைகளெல்லாப் கரையருகிலும் அடிவைக்கவொண்ணாதபடி கொதிப்படைந்தன; சிறிய தோட்டங்கள் பெரிய தோட்டங்களென்கிற வாசியின்றிக்கே பொழில்களெல்லாம் இலையுலர்ந்து அழகழியப்பெற்றன என்றான். இப்படி அசேதநவஸ்துக்களையுங் கூட விகாரப்படுத்திக் கொண்டே காட்டுக்கெழுந்தருளினவன் பதினாலாண்டு கடந்த பிறகு மீண்டும் திருவயோத்திக்கு எழுந்தருளுகையில் * [illegible]—அகால பலிநோ வ்ருக்ஷா: * என்னும்படியாயிற்று. ஆகவிப்படி தன்னுடைய

விச்லேஷத்தில் வாடியுலர்ந்தும் ஸம்ச்லேஷத்தில் செழிப்புற்றோங்கியும் நின்றன அசேதனங்களென்றால் அவன்றன்னுடைய குணப்பெருமையை என்னென்று சொல்லுவது!

கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் * வம்ஶம் ரகோரநுஜிக்ருக்ஷுரிஹாவதீர்ணோ ஜாதிஷ்வஶேஷவஸதிஷ்வபி தஸ்ய தஸ்ய ஸௌஹ்ருத்யத: ஸ்வபதவேதநஸம்ப்ரயோகம் — வம்சம் ரகோர நுஜிக்ருக்ஷுரிஹாவதீர்ண: திவ்யைர் வவர்ஷித ததாத்ர பவத்குணௌகை:, த்வத்ஸந்நிதி ப்ரபவசைத்யஜுஷோ யதாஹி வ்ருக்ஷாச்ச தாந்நிம்லபந்த பவத்வியோகே * என்ற ச்லோகத்தினால் இக்குணத்திற்கு உருகினார். ஆசார்ய ஹ்ருதயத்தில் “கோஸல கோகுலசராசரம் செய்யுங்குண மொன்றின்றியே அற்புதமென்னக் கண்டோம்” என்ற சூர்ணையும் அதன் வியாக்கியானமும் ஸேவிக்க. இப்பாசுரத்தில் ‘புற்பாமுதலா’ என்று தொடங்கி மூன்றடிகளாலும் கீழே விவரித்த மஹாகுணமே அருளிச் செய்யப்படுகிறதாகப் பிள்ளான் முதலான ஸகல ஆசாரியர்களும் ஒருமிடறாக அருளிச்செய்தார்கள். ஸ்ரீவேதாந்ததேசிகர் ஒருவர் தாம் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் இத்திருவாய்மொழிக்கான ச்லோகத்தில் இப்பாசுரத்தின் பொருளாக “ஸாகேதே ஜந்துநாகம்—ஸாகேதே முக்திதாநாத்” என்றருளிச் செய்தார்; * அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றிய கதையை இப்பாசுரத்திற்கு அர்த்தமாகக் கருதினார். அருமிரப்படி ஸ்ரீஸூக்தி காண்மின்;—“ப்ராக்ருத ஜந்துக்களே தாரக போஷக போக்யமாயிருக்கக்கடவ இப்ரக்ருதி மண்டலத்திலே வைத்துக்கொண்டு திருவயோத்யையிலே வர்த்திக்கிற திர்யகாதி நிகில ஜந்துக்களையும் கர்மயோகாத்யுபாயம் பண்ணுதிருக்கச் செய்தேயும் திருநாட்டிலுள்ளாரைப் போலே தன் திருவடிகளே தாரக போஷக போக்யமாக்கியருளின இம்மஹா குணத்தை யுடையனாயிருந்த இராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ வென்று அவனுடைய குணங்களை யநுபவிக்கிறார்.” என்று; இப்படியிருக்கவும் தேசிகன் வேறு வகையாகப் பொருள் கூறியது வாதிகேஸரியழகிய மணவாளச்சீயருடைய பன்னீராயிரவுரையில் ப்ரதிபத்தியின் கனத்தாலே யென்று தெரிகிறது. அவ்வுரையில் அங்ஙனே பொருளுரைக்கப்பட்டது.

“மற்றுங் கற்பரோ” என்ற விடத்து மற்றும் என்றது தேவதாந்தரங்களைக் கருதியன்று; ஸ்ரீராமாவதாரந்தவிர மற்றுள்ள விபவாவதாரங்களையும் பரத்வாதி நிலைகளையும். * ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித: । பக்திஶ்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி * என்று திருவடி சொன்னதும், * என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே * என்று திருப்பாணாழ்வார் அருளிச் செய்ததும் இங்கே நினைக்கத்தக்கன.

புற்பாமுதலா—பா என்று வஸ்துவைச் சொல்லுகிறது; புல்லாகிற வஸ்து முதற்கொண்டு என்றபடி. அன்றியே, பா—பரம்பின, புல் முதலா என்றும் யோஜிப்பதுண்டு. ஒன்றின்றியே—நிர்ஹேதுகமாகவென்றபடி.

நான்முகனார் பெற்ற நாட்டுளே நற்பாலுக்கு உய்த்தனன்—நற்பாலென்றது நல்ல பான்மையென்றபடி. விலக்ஷணமான ஸ்வபாவம்; அதாவது இராமபிரானுடைய குணங்களையே தாரகபோஷக போக்யமாகக் கொண்டிருக்கையாகிற வைலக்ஷண்யம். இப்படிப்பட்ட தன்மைக்கு ஆளாம்படி செய்தனன் என்கை. இங்கே ‘நான்முகனார் பெற்ற நாட்டுளே’ என்றதற்கு ப்ரயோஜனமென்? என்னில்; பிரமனை நியாமகனாக்கி அவனுக்கு வசப்பட்டதாம்படி செய்திருக்கிற இந்த நாட்டிலே புல்லெறும்பு முதலானவற்றுக்கு வேறே உணவுகள் நிய

தங்களாயிருக்கவும் அந்த நியதியை (நாட்டின் தன்மையை)த் தவிர்த்தருளினபடி சொல்லுகிறது. .... .... ... ... (க)

நாட்டில்பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ *
நாட்டில்பிறந்து படாதனபட்டுமனிசர்க்கா *
நாட்டைநலியுமரக்கரை நாடித்தடிந்திட்டு *
நாட்டையளித்துய்யச்செய்து நடந்தமைகேட்டுமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| நாட்டில் பிறந்து | (தன்வாசியறியாத) இக்கொடிய உலகத்திலே வந்து பிறந்து | உய்ய செய்து | உஜ்ஜீவனப்படுத்தி |
| படாதன பட்டு | ஸம்ஸாரிகளும் அநுபவியாத கிலேசங்களை அநுபவித்து | நடந்தமை கேட்டும் | பின்பு திருநாட்டுக்கு நடந்தபடியைக் கேட்டிருந்தும் |
| மனிசர்க்கு ஆ | செய்ததன்றியறியாத மனிசர்களுக்காக | நாட்டில் பிறந்தவர் | (அப்பெருமானுடைய திருக்குணங்கள் நடையாடுகிற) நாட்டிலே பிறந்தவர்கள் |
| நாட்டை நலியும் அரக்கரை நாடி தடிந்திட்டு | உலகத்தை ஹிம்ஸிக்கின்ற ராவணாதி ராக்ஷஸர்களை ஆராய்ந்து சென்று கொன்று | நாரணற்கு ஆள் அன்றி ஆவரோ | நாராயணனான அந்த ஸ்ரீராமனுக்கல்லது மற்றொருவர்க்கு ஆட்படுவர்களோ? |
| நாட்டை அளித்து | (இப்படியாக) நாட்டை ரக்ஷித்து | | |

* * *—"அவதாரகார்யம் சமைந்தவளவிலே எழுந்தருளுகையன்றியே பதினோராயிரமாண்டு எழுந்தருளியிருந்து ரக்ஷித்த சீலாதிக்யத்தையருளிச்செய்கிறார்" என்பது பன்னீராயிரப்படியின் அவதாரிகை. "தன்னை யொழியச் செல்லாமையைப் பிறப்பித்து இங்குள்ளவர்களை யிட்டுவைத்து, தானே யெழுந்தருளுகையன்றிக்கே கூடக் கொண்டுபோனானென்று, கீழ்ச்சொன்னவதிற் காட்டில அதிக குணத்தை யருளிச்செய்கிறார்" என்பது பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தி.

நாட்டில் பிறந்தவர் நாரணற்கன்றி ஆளாவரோ? ஸ்ரீராமகுணங்கள் நடையாடுகிற தேசத்திலே பிறந்த பாக்யசாலிகள் அந்த ஸ்ரீராமபிரானுக்கன்றி யாளாவரோ? என்றபடி. ராவண வதமானபிறகு நான்முகக்கடவுள் வந்து * ஸவாந் நாராயணோ தேவ:—பவாந் நாராயணோ தேவ: * என்றனனாதலால் இங்கு இராமபிரானை நாராயண சப்தத்தினலருளிச்செய்கிறபடி. நாட்டில் பிறப்பது நாராயணனுக்கு [இராமபிரானுக்கு] ஆளாவதற்காகவே யென்பது முதலடியின் கருத்து. மேல் மூன்றடிகளாலே அவன் செய்த மஹோபகாரத்தைச் சொல்லுகிறது. கருமங்களுக்கு வசப்பட்ட ஸம்ஸாரிகளுங்கூட அருவருக்குப்படியான நாட்டிலே வந்து பிறந்தானே! என்று இதை நினைத்து உருகவேண்டாவோ? நாமெல்லாரும் பத்துமாஸம் கர்ப்பவாஸம் பண்ணினல் அவன் * தத்ஶ ஆஸீத் ஸமா:—ததச் ச த்வாதசே மாஸே* என்னும்படி பன்னிரண்டு மாஸம் கர்ப்பவாஸம் பண்ணினனே! என்று இதையும் நினைத்து உருக வேண்டாவோ? இப்படி பிறந்தது மாத்திரமேயோ? ஸம்ஸாரிகள் படாத பாடுகளையும் பட்டானே!, ஒருவன் பிறந்தால் இருக்கும் நாள் தானும் தன் மனைவியுமாகச் சேரவிருந்து ஜீவிக்கப்போவதுண்டே, அப்படியன்றிக்கே பிராட்டி ஓரிடத்திலும் தான் மற்றோரிடத்திலுமாக வர்த்திக்கவேண்டினது முதலாகப் பட்ட பாடுகளையும் நினைத்து உருகவேண்டாவோ? இப்படி படாத பாடுகள் பட்டது யாருக்காக? [மனிசர்க்கா] தங்களுக்காக அநுக்ரஹத்தாலே படுகிற இந்த மஹா குணத்தை குண ஹாநியாகச் சொல்லி நிந்திக்கும் நன்றிகெட்ட நம்போல்வார்க்காகவன்றோ இத்தனை பாடு பட்டது என்று, இதை நினைத்தும் உருகவேண்டாவோ? இன்னமும் விரோதி நிரஸனங்கள் பண்ணின படிகளையும் நினைக்க வேண்டாவோ?

ஈற்றடிக்கு ஆறாயிரப்படி காண்மின்;—"இப்படி லோகத்தை ரக்ஷித்தருளி *தத் இதம் ந: க்ருதம் கார்யம்—பூஹ்ஷோ திவம் * என்று ப்ரஹ்மா விண்ணப்பஞ் செய்தபோதே

யெழுந்தருளாதே ஸ்வவிச்லேஷத்தாலே விசஷ்டப்ராயமான திருநகரியில் சராசரஜந்து ஜாதத்தையெல்லாம் மீண்டெழுந்தருளியுய்யச் செய்து பின்னைத் திருநாட்டிலே யெழுந்தருளின இம்மஹாகுணத்தைக் கேட்டும் சேதனராயிருப்பார் *ஸவாஸுராயணோ தேவ:* என்று சொல்லப்படுகிற தசரதாத்மஜனை நாராயணனுக்கு அடிமையாகாதிருக்கும்படி யெங்ஙனே யென்கிறார்."

ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்,—"நிரபராதமான நாட்டை நலிகிற ராவணாதி கண்டகரை.........அவர்களிருந்த விடங்களிலே தேடிச் சென்று கொன்று லங்காத்வாரத்திலே விஜய ஸ்ரீபரிவ்ருதராய்க் கொண்டெழுந்தருளி நிற்க, அவ்வளவிலே ப்ரஹ்மாதி தேவர்கள் வந்து * ஸர்வம் ஸமாப்தம் கார்யம் ... ஸ்ம * என்று நாங்கள் அர்த்தித்தவையடைய எங்களளவு பாராதே தேவரீர் செய்தருளிற்று; இனி தன்னுடைச்சோதியேற எழுந்தருளவமையும் என்ன; அவ்வளவிலே ருத்ரன் 'நாடடைய தேவரீருடைய விச்லேஷத்தாலே விசஷ்ட ப்ராயமாய்க் கிடக்கிறது; திருத்தாய்மாரையும் திருத்தம்பிமாரையும் திருப்படை வீட்டிலுள்ள ஜனங்களையும், மீண்டுபுக்குச் சில நாளெழுந்தருளியிருந்து ரக்ஷையாலே தடவி ரக்ஷித்தெழுந்தருள வேணும்' என்ன, * கடல் ஞாலத்துள் மிக்கானென்னுப்படியே பதினோராயிரமாண்டு எழுந்தருளியிருந்து ரக்ஷித்தபடியைச் சொல்லுகிறது—நாட்டை யளித்தென்று."

உய்யச்செய்து நடந்தமை யென்றது—நெடுநாள் இருந்து, தன்னலல்லது செல்லாதபடி பண்ணி அவர்களை யெல்லாம் விட்டுப்போகாதே கூடவே கொண்டுபோனபடியைச் சொன்னவாறு. ... .... ... (௨)

கேட்பார்கள்கேசவன்கீர்த்தியல்லால் மற்றும்கேட்பரோ *
கேட்பார்செவிசுடு கீழ்மைவசவுகளேவையும் *
சேட்பால்பழம்பகைவன் சிசுபாலன் * திருவடி
தாட்பாலடைந்த தன்மையறிவாரையறிந்துமே. (௩)

| | | | |
|---|---|---|---|
| கேட்பார் | எம்பெருமானுடைய நிந்தைகளையே காதாரக்கேட்கவேணுமென்கிற விருப்பமுடையவர்களுக்குங் கூட | திரு அடி | ஸ்வாமியான கண்ணபிரானுடைய |
| செவி சுடு | கர்ணகடோரமான | தாள் பால் அடைந்த தன்மை அறிவாரை அறிந்தும் | திருவடிகளிலே ஸாயுஜ்யம்பெற்றபடியை யறிவாரை அறிந்து வைத்தும்; |
| கீழ்மை வசவுகளே வையும் | மிகத் தண்ணிய தூஷணைகளையிட்டு தூஷிக்குமவனாய் | கேட்பார்கள் | நல்லது கேட்க வேணுமென்றிருக்குமவர்கள் |
| சேண் பால் பழம் பகைவன் சிசுபாலன் | நெடுங்காலத்துப் பகைவனான சிசுபாலனுங்கூட | கேசவன் கீர்த்தி அல்லால் மற்றும் கேட்பரோ | எம்பெருமானுடைய கீர்த்திகளையொழிய வேறொன்று கேட்பாரோ? |

* * *—நிச்சலும் நிந்திப்பது தவிர வேறொன்றுமறியாத சிசுபாலனையுமுட்படத் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொண்ட மஹாகுணத்தையறிந்தவர்கள் அப்படிப்பட்ட குணவானுடைய திருக்குணங்களையன்றோ காதாரக் கேட்கவேணுமென்கிறார்.

கேட்பார்கள் என்றது—செவிடராயிருக்கை யன்றிக்கே செவிப்புலனையுடையவர்கள் என்றபடி. கேசவன் கீர்த்தியைக் கேட்பதே காதுக்கு ப்ரயோஜனமென்றதாயிற்று. * தொண்டர்க்கு இனியானைக் கேளாச் செவிகள் செவியல்ல கேட்டாமே* என்றார் திருமங்கையாழ்வாரும். காது குளிரக் கேட்கவேண்டிய கேசவன் கீர்த்திகளில் ஒரு கீர்த்தியை யெடுத்துரைக்கின்றார் மேல் மூன்றடிகளில்.

எம்பெருமானை நிந்திப்பவர்கள் பலருளர் என்றாலும் சிசுபாலனைப்போல் நிந்திப்பவர்கள் இலர். அவன் நிந்திப்பது எங்ஙனேயிருக்குமென்னில்; [கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்] இங்கே 'கேட்பார்' என்றதற்கு ஆசாரியர்கள் அருளிச்செய்யும் பொருள் ஆச்சரியமானது. ஈடு;—"பகவந்நிந்தைக்கு ஜீவனம் வைத்துக்கேட்கும் தண்ணியர்களுங் கூடப் பொறுக்கமாட்டாமை செவி புதைத்து 'இத்தனை அதிரச் சொன்னாய், இப்படி சொல்லப்பெறாய் காண்' என்று சொல்லும்படியான வசவுகளே வைகை" என்பதாம். அதாவது பகவத் ஸந்நிதிகளிலே வேதபாராயணம் செய்தல் அருளிச் செயலோதுதல் மற்றும் ஸ்ரீராமாயண பகவத்கீதாதி பாராயணஞ் செய்தல் முதலானவற்றுக்காக மஹாதார்மிகர்கள் நிதியேற்படுத்தி உபகரிப்பது போலே 'பகவானை இரவும் பகலும் நிந்திப்பவர்களுக்கு நாங்கள் நிதி வைத்திருக்கிறோம்' என்று சொல்லி மிகுந்த ஆதரத்தோடு பகவந் நிந்தனைகளைக் கேட்பாரும் சிலர் இருக்கக் கூடுமே; அப்படிப்பட்டவர்களுங் கூட சிசுபாலன் செய்யும் பகவந் நிந்தைகளைக் கேட்குமளவில் 'அப்பப்ப! இவ்வளவு கடோரமாக நிந்திக்கை தகுதியன்று; இது எங்களாலும் கேட்கப்போகவில்லை' என்று சொல்லிக் காதை மூடிக்கொள்ளும்படியிருக்குமாம். அப்படிப்பட்ட கொடிய நிந்தகனாம் சிசுபாலன். அவன் இப்பிறவியில் மாத்திரமன்று பகைவனானது; மற்றும் பல ஜன்மங்களிலே இப்படிப் பகைவனாயிருந்தானென்கிறது சேட்பால்பழம்பகைவன் என்று. ஆதிமவஶவராஹ:—ப்ரதிபவமபராத்து:* என்றார் ஆளவந்தாரும். அவனுக்குங் கூட தன் திருவடிவாரத்தில் அத்தாணிச் சேவகத்தை யளித்திட்டானன்றோ அருட்கடலான எம்பெருமான். திருமழிசைப்பிரானும் திருச்சந்த விருத்தத்தில்* "வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும் மாறில் போர் செய்து நின்ன செற்றத்தீயில் வெந்தவர்க்கும் வந்து உன்னையெய்தலாகுமென்பர்" என்றருளிச்செய்தார். சிசுபாலனிடத்தில் என்ன நன்மை கண்டு எம்பெருமான் இங்ஙனே அருள் செய்தானென்னில்; வைகிறவனுக்கும் பேர் சொல்லி வையவேணுமே; ஆகவே நாமஸங்கீர்த்தன ஸுக்ருதம் பெரிதுங்கண்டானாயிற்று எம்பெருமான்.

திருவடிதாட்பாலடைந்த—திருவடியென்றது ஸ்வாமி வாசகம். * பூதத்திருவடி தாள்கள்* என்ற இராமாநுச நூற்றந்தாதியுங் காண்க.

"தாட்பாலடைந்த தன்மையறிந்துமே" என்றாலே போதுமாயிருக்க, "தன்மையறிவாரையறிந்துமே' என்றது எதுக்காகவென்னில்; முதலடியிலே "கேட்பார்கள் மற்றுங் கேட்பரோ" என்று சொல்லியிருக்கையாலே, கேட்குமவர்கள் குணஜ்ஞர்களிடத்திலன்றோ கேட்கவேணும்; இப்படிப்பட்ட மஹாகுணஜ்ஞர்கள் இல்லாமற் போகவில்லையே. அன்னவர்கள் இருக்கிறார்களென்பதை யறிந்து வைத்தும் அவர்கள் பக்கலிலே சென்று இத்தகைய மஹாகுணங்களைக் கேளாதே மற்றுங் கேட்பரோ என்றபடி. .... ... (௩)

தன்மையறிபவர் தாமவற்காளன்றியாவரோ*
பன்மைப்படர்பொருளாதுமில் பாழ்நெடுங்காலத்து*
நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி* தன்னுள்ளே
தோன்மைமயக்கிய தோற்றியசூழல்கள்சிந்தித்தே. (௪)

| | | | |
|---|---|---|---|
| பன்மை படர் பொருள் ஆதும் இல் பாழ் நெடுங் காலத்து | பலவகைப்பட்ட விரிவான பதார்த்தங்கள் ஒன்றுமில்லாதபடி வெகுகாலம் சூந்யமாயிருந்த போது | நன்மை புனல் பண்ணி | நன்மைமிகுந்த காரண ஜலத்தை முந்துற முன்னம் ஸ்ருஷ்டித்து |

(பிறகு)

| | | | |
|---|---|---|---|
| நான்முகனை பண்ணி | பிரமனைப்படைத்து | சூழல்கள் சிந்தித்து | இப்படிப்பட்ட மஹாகுணங்களை சிந்தனை செய்து |
| தன் உள்ளே | தன்னுடைய ஸ்வரூபத்தின் ஏகதேசத்திலே | தன்மை அறிபவர் தாம் | அவனுடைய அஸாதாரண லக்ஷணத்தை அறியவல்லவர்கள் |
| தொன்மை மயக்கிய | பண்டுதான் ஸம்ஹரித்த பதார்த்தங்களை | அவற்கு அன்றி ஆள் ஆவரோ | அப்பெருமானுக்கொழிய வேறொருவனுக்கு அடிமைப் படலாகுமோ? |
| தோற்றிய | பழையபடி உண்டாக்கின | | |

* * *—ப்ரளயத்திலே மங்கிக்கிடந்த ஜகத்தை மீளவுமுண்டாக்கின மஹாகுணத்தை யறிந்துவைத்தால் இப்படிப்பட்ட குணசாலிக்கேயன்றோ ஆளாகப் பெறவேணுமென்கிறார்.

தன்மையறிபவர் — தத்வஸ்திதியை உள்ளபடியே யறியுமவர்கள் என்றபடி. "விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும் பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா" என்கிறபடியே நம்முடைய கரணக்ராமங்கள் பகவத் விஷயத்தில் அந்வயிப்பதற்காகவே படைக்கப்பட்டன வென்கிற தத்துவத்தை யறியும் விவேகிகள் என்றதாயிற்று. மற்றும் பலவகையாகவும் நிர்வஹிப்பதுண்டு.

தன்னைப்படைத்தவனுக்குத் தான் அடிமையாகவேணுமென்பதை ஒருவர் சொல்லவேணுமோ? "கஸ்த்யேய: காரணம் து த்யேய:" என்றன்றோ ஓதிற்று. முதல் தனிவித்தாகிய மூலக் காரணப்பொருளை யறிந்து அதற்கன்றோ ஆட்படவேணும். தேவ மநுஷ்யாதி ரூபத்தாலே பலவகைப்பட்டு, கருமங்களுக்கேற்றவாறு விஸ்த்ருதமான பதார்த்தங்கள் ஒன்றுமில்லாத காலத்து, முற்பட ஜலஸ்ருஷ்டியைப் பண்ணி, பின்னே சதுர்முகனையும் ஸ்ருஷ்டித்து, தன் ஸங்கல்ப ஸஹஸ்ரத்தின் ஏக தேசத்திலே சேதநாசேதநஸமஸ்த வஸ்துக்களையும் ஸ்ருஷ்டித்தருளின இந்த மஹா குணத்தை யநுஸந்தித்தால் அந்த பரம காருணிகனுக்கன்றி மற்றுமொருவற்கு ஆளாக வழியுண்டோ வென்றாராயிற்று. ... .... (௪)

சூழல்கள்சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ *
ஆழப்பெரும்புனல் தன்னுளழுந்தியஞாலத்தை *
தாழப்படாமல் தன்பாலொருகோட்டிடைத்தான்கொண்ட*
கேழல்திருவுருவாயிற்றுக் கேட்டுமுணர்ந்துமே. (௫)

| | | | |
|---|---|---|---|
| பெரு புனல் தன்னுள் ஆழ அழுந்திய ஞாலத்தை | எல்லையற்ற பிரளய ஜலத்திலே மிக ஆழமாக அழுந்திக் கிடந்த பூமியை | கேட்டும் உணர்ந்தும் | இதிஹாஸ புராண முகங்களாலே கேட்டும் மனனம் பண்ணியும் வைத்து |
| தாழப்படாமல் | அசர்த்தப்படாதபடிக்கு | சூழல்கள் சிந்திக்கில் | தம்தம்முடைய அபிமதங்கள் ஸித்திப்பதற்கு விரகு பார்க்குமளவில் |
| தன் பால் ஒரு கோடு இடை தான் கொண்ட | தன் திருமேனியில் ஏகதேசமாயிருப்பதொரு கோட்டினிடத்திலே தானாகவே இடந்தெடுத்துக் கொண்ட | | ஆச்சரிய சேஷ்டிதனான அப்பெருமானுடைய திருவடிகளையொழிய வேறொன்றை ஆச்ரயிப்பரோ? |
| கேழல் திரு உரு ஆயிற்று | ஸ்ரீ வராஹரூப மெடுத்த படியை | மாயன் கழல் அன்றி சூழ்வரோ | |

* * *—அழிந்த ஜகத்தை யுண்டாக்கினவளவேயல்லாமல். அந்த ஜகத்தை ப்ரளயங்கொள்ள மஹாவராஹமாயெடுத்து ரக்ஷித்த மஹாகுணத்தை யநுஸந்தித்தால் அவன் திருவடிகளே தஞ்சமென்றிருக்க வேண்டாவோ வென்கிறார்.

சூழல்கள் சிந்திக்கில்—சூழலாவது உபாயம்; 'நமக்கொரு உஜ்ஜீவநோபாயம் சேமித்து வைத்துக் கொள்ள வேணுமே' என்று சிந்திப்பாருண்டே; அங்ஙனே சிந்தைசெய்யுமளவில் என்றபடி. மாயன் கழலன்றிச் சூழ்வரோ?—ரக்ஷ்யவர்க்கங்களை ரக்ஷிக்க வேண்டுமென்று நினைத்தவளவிலே தன்னையழியமாறியும் காரியஞ் செய்யத் துணியும் மாயவனது கழலையன்றி மற்றொன்றைப் பற்றுவாருண்டோ? * பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டொரு நாள் மாசுடம்பில் நீர்வார மானமிலாப் பன்றியாந் தேசுடைய தேவர்* என்ற நாச்சியார் திருமொழிப் பாசுரம் நினைக்கத் தகும்.

ஆழப்பெரும்புனல் தன்னுளழுந்திய—ஆழமான மஹார்ணவத்திலே அழுந்திய என்றுவது, பெரும்புனல் தன்னுள் ஆழவழுந்திய என்றுவது யோஜிப்பது. தாழப்படாமல்—காலதாமதத்திலே உருமாய்ந்து போகாதபடி; தரைப்படாதபடி. ஒரு கோட்டிடை=கோடு தம்ஷ்ட்ரா.

கேட்டும் உணர்ந்தும்=கேட்பது ஒருகால்; அதனை மறவாமல் மேன்மேலும் ஸ்மரிப்பது உணர்வாம். .... .... .... .... (௯)

கேட்டுமுணர்ந்தவர் கேசவர்க்காளன்றியாவரோ*
வாட்டமிலாவண்கை மாவலிவாதிக்கவாதிப்புண்டு*
ஈட்டங்கொள்தேவர்கள் சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய*
கோட்டங்கைவாமனனாய்ச் செய்தகூத்துக்கள்கண்டுமே. (௰)

| | | | |
|---|---|---|---|
| வாட்டம் இலா வண் கை மாவலி வாதிக்க | ஒருகாலும் குறையாத ஔதார்யத்தையுடைய மஹாபலியானவன் (தன் செருக்காலே) நலிய | கோடு அம் கை வாமனன் ஆய் செய்த கூத்துக்கள் கண்டும் | ஏற்றகையையுடைய ஸ்ரீவாமனமூர்த்தியாய்ச் செய்தருளின மநோஹர சேஷ்டிதங்களை யநுஸந்தித்து வைத்தும் |
| வாதிப்பு உண்டு | ஹிம்ஸைபட்டு | கேட்டும் உணர்ந்தவர் | புராண முகத்தாலே கேட்டும் அறிவுடையராயிருந்தவர்கள் |
| ஈட்டம் கொள் தேவர்கள் சென்று இரந்தார்க்கு | திரண்டு சென்று ப்ரார்த்தித்த தேவர்களுடைய | கேசவற்கு அன்றி ஆள் ஆவரோ | அந்தப்பெருமானுக்கல்லது மற்றொருவற்கு அடிமையாவரோ? |
| இடர் நீக்கிய | இடரை நீக்குவதற்காக | | |

* * *—தன் மேன்மை பாராமல் தான் இரப்பாளனாய் வாமநப்ரஹ்மசாரியாய் மஹாபலியின் செருக்கையடக்கித் தேவர்களைக் காத்தருளின மஹா குணத்தையறிந்து வைத்து மற்றொருவர்க்கு ஆளாக வொண்ணுமோ வென்கிறார்.

"வாட்டமிலாவண்கை" என்று மாவலிக்கு விசேஷணமிட்டு அவனுடைய ஔதார்யத்தைச் சிறப்பித்துக் கூறினது—எம்பெருமானுடைய யாசகத்வத்திற்கு நிரூபகமாக. இந்திரனோ மாவலியால் தகர்ப்புண்டு தன் பதவியை யிழந்து கண்ணுங் கண்ணீருமாய் நின்று யாசகனாயிரா நின்றான்; மஹாபலியோ யஜ்ஞத்திலே தீக்ஷிதனாயிருந்து யார் எது கேட்டாலும் கொடுக்கக் கடவேனென்று ஒப்புயர்வற்ற ஔதார்யம் கொண்டாடியிரா நின்றான்; இவ்விரண்டையும் பார்த்தானெம்பெருமான்; இந்த உதாரன் பக்கலிலே நாம் யாசகனாய்ச் சென்று இந்திரனுடைய அபேக்ஷிதத்தைப் பூர்த்தி செய்ய இயலுமென்று துணிந்து குறட்பிரமசாரியாய் பிக்ஷுகனாய் வந்தான்; ஆகவே இங்கு "வாட்டமிலா வண்கை மாவலி" என்றது நன்று. இந்த அழகை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே ஜைதெளஷாயெரு, யாஜாவிஹ திவெநயஜ வாசனோயீ-ஃ ஸுராஸீ:—தைத்யௌதார்யேந்த்ரயாச்ஞாவிஹதிமபநயந் வாமநோர்த்தீ த்வமாஸீ:* என்றருளிச் செய்தார்.

வாதிக்க—பாதிக்க; வாதிப்புண்டு—பாதைப்பட்டு. பாதா என்கிற வடமொழிப் பகுதியுணர்க. ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந்தார்க்கு—சென்றிரந்த ஈட்டங்கொள் தேவர்கட்கு என்று யோஜித்துக்கொள்வது இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை யருளிச் செயல் காண்மின்;—"ஈச்வராபிமாநிகளாய் 'ஒருவர் பக்கல் செல்லக்கடவோமல்லோம்' என்றும் 'எல்லார்க்கும் இடுமதொழிய ஒருவர் பக்கல் ஒன்றுங் கொள்ளக்கடவோமல் லோம்' என்றுமிருக்குமவர்களாய் தம்மில் தாம் சேர்த்தியன்றிக்கேயிருக்கிற தேவர்கள் ஆபத்தின் மிகுதியாலே தம்மிலே யொருமிடறாய் பக்ஷாபிமானிகளாய்ச் சென்று இரந்தவர் களுக்கு." என்று

நம்பிள்ளையீடு;—க்ராமணிகளைப் போலே ஒருவர் உச்ச்ராயம் ஒருவர் பொறாதே, தலை யறுப்பாரும் தலையறுப்புண்பாருமாய்த் திரியக்கடவ ஜாதியிறே. இப்படி சேராச்சேர்த்தி யாயிருக்கிறவர்கள். ஆபத்தமிக்கவாறே தந்தாம் அபிமானங்களைப் போகட்டு எல்லாரு மொருமிடறாய் வந்து விழுந்தார்கள்."

இடர்நீக்கிய='உங்கள் கோரிக்கையின்படியே உங்கள் அபேக்ஷிதத்தைத் தலைக்கட் டித் தருகிறேன்' என்கிற ப்ரதிஜ்ஞாவசனத்தாலே து:க்க நிவ்ருத்தியைப் பண்ணிக் கொடுத்த என்றபடி. [கோட்டங்கை] கோடு + அம் கை = கோட்டங்கை; கோடு என்று கொள்ளுகை யைச் சொன்னபடி; அதாவது கையேற்கை. செய்த கூத்துக்கள் = கூத்துப்போலே மனோ ஹரமான சேஷ்டிதங்களை யென்றபடி. கண்டும் = கண்ணாலே காண்பது போலே சாஸ்த்ரங் களால் அறிகையும் ஆஸ்திகர்கட்கு ப்ரத்யக்ஷமேயாதலால் இங்ஙனே சொல்லக் குறையில்லை. (சு)

கண்டும்தெளிந்தும்கற்றார் கண்ணற்காளன்றியாவரோ *
வண்டுண்மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்குவாழுநாள் *
இண்டைச்சடைமுடி யீசனுடன்கொண்டுசாச்செல்ல *
கொண்டங்குத்தன்னொடும் கொண்டுடன்சென்றதுணர்ந்துமே (எ)

| | |
|---|---|
| வண்டு உண் மலர் தொங்கல் மார்க்கண்டேயனுக்கு | வண்டுகள் மதுபானம் பண்ணுகிற பூமாலையையுடைய (பாலகனான) மார்க்கண்டேயனுக்கு |
| வாழும் நாள் | ஆயுளுக்காக |
| இண்டை சடை முடி ஈசன் | நிபிடமான ஜடாமண்டலத்தை யுடையவரான சிவபிரான் |
| உடன் கொண்டு உசா செல்ல | தன்னோடுகூட அவனை யழைத்துக்கொண்டு பேசிக்கொண்டே செல்ல |
| அங்கு | அந்நிலையிலே |
| கொண்டு தன்னொடும் கொண்டு | அவனை விஷயீகரித்து தன்னோடே கூட்டிக் கொண்டு |
| உடன் சென்றது | பிரியாதே யிருந்தபடியை |
| உணர்ந்தும் | புராணமுகத்தாலே யறிந்தும் |
| கண்டும் தெளிந்தும் கற்றார் | கண்ணாரக் கண்டும் நெஞ்சாரத் தெளிந்தும் கற்றவர்கள் |
| கண்ணற்கு அன்றி ஆள் ஆவரோ | கண்ணபிரானுக்கல்லது வேறொருவர்க்கு அடிமை யாவரோ? |

* * *—தேவதாந்தர பஜநப் பண்ணிக் கிடந்த மார்க்கண்டேயனை விஷயீகரித்த லாகிற மஹா குணத்தை யநுஸந்தித்தால் அப்பெருமானுக்கன்றி யாளாவரோ வென்கிறார்.

"கண்டுத் தெளிந்துங்கற்றார்" என்றதை உருபு பிரித்துக் கூட்டி "கற்று தெளிந்து கண்டார்" என்று அந்வயிப்பர் நம்பிள்ளை. முதலிலே யொன்றைக் கற்பது; பிறகு அதிலே மனனத்தினால் தெளிவு பிறப்பது; பிறகு அவ்வர்த்தம் கண்ணாற் கண்ட மாத்திரியேயாவது; ஆக விங்ஙனே முறையாதலால். ப்ரிய ஹிதங்களை ச்ரவணம் பண்ணித் தங்களிலே மனனம் பண்ணி அவற்றை ஸாக்ஷாத்கரித்தவர்கள் கண்ணனுக்கன்றி யாளாவரோ? என்கை.

ம்ருகண்டு வென்னும் முனிவர் பிள்ளை யில்லாக் குறையால் பிரமனைக் குறித்துத் தவஞ்செய்தபோது, பிரமன் ப்ரத்யக்ஷமாகி 'முனிவரே! அறிவில்லாமையும் அங்கஹீநத்வமும் பெரும் பிணியும் தீய குணங்களுமுடையனாய் நூறு பிராயம் உயிர் வாழ்பவனான புத்திரனை விரும்புகின்றீரோ? அன்றி, கூர்மையான புத்தியும் அழகு பொலிந்த வடிவமும் ஆரோக்யமும் நற்குணமுமுடையனாய்ப் பதினாறுபிராயமே வாழ்பவனானகுமாரனை விரும்புகின்றீரோ? சொல்லும், என்ன; முனிவர் 'ஆயுள் சிறிதேனும் அறிவும் அழகும் குணமும் சிறந்து பிணியிலனாகும் ஸத்புத்ரனையே வேண்டுகின்றேன்' என்று தம் கருத்தைக்கூற, நான்முகக் கடவுள் அவ்வாறே ¶ அநுக்ரஹித்தனர். அங்ஙனம் ஊழ்வினையால் பதினாறு பிராயம் பெற்றுப்பிறந்த புத்திரனான மார்க்கண்டேயன் தனது அல்பாயுஸ்ஸைக் குறித்து வருந்திய தாய் தந்தையரைத் தேற்றித் தான் விதியைக் கடந்து வருவதாகச் சொல்லி, தீர்க்காயுள்ளை பெறுதற் பொருட்டுத் தினந்தோறும் சிவ பூஜை செய்து வருகையில், ஒரு நாள் யமன் தூதரை யனுப்ப, அவர்கள் மார்க்கண்டேயனது தவக்கனலால் அவனை அணுகமாட்டாது அவன் செய்யும் சிவ பூஜைச் சிறப்பைக் கண்டஞ்சி வெருண்டோடி யமனிடம் செய்தி சொல்ல, யமனும் கோபித்துத் தனது மந்திரியான காலனை ஏவ, அவன் வந்து நயபயங்களாலழைக்கவும் மார்க்கண்டேயன் வரமாட்டேனென்று சொல்லிவிட பிறகு யமன் மிகக் கொதித்துத் தானே நேரில் வந்து மார்க்கண்டேயனைக் காலபாசத்தாற் கட்டியிழுக்கத் தொடங்குகையில் அம்முநிகுமாரன் சிவலிங்கத்தைத் தழுவிக்கொள்ள, யமன் சிவலிங்கமுமுட்பட வலித்திழுக்கும்போது சிவபிரான் ஸ்ரீமந்நாராயணனைச் சிந்தை செய்து அவனது திருவருள் பெற்று அங்கு நின்று வெளிப்பட்டு யமனைக் காலாலுதைத்துத் தள்ளி முனி மகனுக்கு என்றும் பதினாறு பிராயமாகவே அனேக கல்பகாலமளவும் இனிது வாழும்படி தீர்க்காயுஸ்ஸைக் கொடுத்தருளினன் என்பதாகப் புராண வரலாறு.

இங்ஙனம் சிவபிரான் மார்க்கண்டேயனுக்கு அருள் செய்தது திருமாலினருளால் தான் பெற்ற சக்தியினாலேயே யென்பதும், அச் சிவபிரானுக்கு அந்தராத்மாவாய் நின்று தொழில் செய்தவன் ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணனே யென்பதுமாகிய உண்மைபற்றி அவ்வரலாற்றை ப்ரயோஜககர்த்தரவின் காரியம்போலத் திருமாலின் மேலேற்றிக் கூறுவதுமுண்டு. திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் * மன்னு நான் மறை மாமுனி பெற்ற மைந்தனை மதியாத வெங்கூற்றந் தன்னையஞ்சி, நின்சரணெனச் சரணாய்த் தகவில் காலனையுகமுனிந்தொழியா, பின்னையென்றும் நின் திருவடி பிரியாவண்ண மெண்ணிய பேருள் எனக்கும் அன்னதாகுமென்றடியிணை யடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே * என்ற பாசுரத்தில் இக்கதையை சிவபிரானுடைய ப்ரஸ்தாவமேயில்லாமல் அருளிச் செய்துள்ளார்.

சில புராணங்களில் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது, பரமசிவனே மார்க்கண்டேயனுக்கு அபயமளித்ததாகக் காணப்படினும், மஹாபாரதத்தில் ஆரண்ய பருவத்தில்

¶ புராணபேதத்தால் இக்கதை சிறிது பேதப்படுவதுமுண்டு. பிரமனுடைய அநுக்ரஹத்தினால் ம்ருகண்டு முனிவர்க்குப் பிள்ளை பிறந்ததாகவும், அப்பிள்ளை ஒரு நாள் வீதியில் விளையாடிக் கொண்டிருக்கு மிருப்பைத் தாய் தந்தையர் ஆனந்தமாகக் கண்டுகொண்டிருக்குங்கால் 'இப்பிள்ளைக்கு ஆயுள் குறுகிற்று' என்று ஆகாசவாணி யொன்று செவிப்பட, அதனால் அத்தாய் தந்தையர் மிக்க வருத்தங் கொண்டதாகவும், அதுகண்ட மார்க்கண்டேயன் 'இதற்கு நீங்கள் வருந்தவேண்டா, அவ்வாபத்தை நானே போக்கிக் கொள்ளுகிறேன்' என்று அவர்களைத் தேற்றித் தான் சிவபூஜை செய்யத் தொடங்கினனென்பதாகவும் சில புராணங்கள் கூறும்,

நூற்றுத் தொண்ணூற்றிரண்டாமத்யாயத்தில் மார்க்கண்டேயன்தானே தருமபுத்திரரை நோக்கிச் சொல்லுமளவில் ஸ்ரீமந்நாராயணனுடைய வார்த்தைகளை அநுவதிக்குமிடத்து "பித்ருபக்தோஸி விப்ரர்ஷே மாஞ்சைவ ஶரணம் கத:" * [பித்ருபக்தோஸி விப்ரர்ஷே! மாஞ்சைவ சரணம் கத:] என்றுள்ள ச்லோகத்தினால் இவன் ஸ்ரீமந் நாராயணனைச் சரணம் புகுந்தவனென்பது நன்கு விளங்கும்.

ஸ்ரீ பாகவதத்திலும் பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் எட்டாமத்யாயத்தில் "ஆராதயந் ஹ்ருஷீகேசம் ஜிக்யே ம்ருத்யும் ஸுதுர்ஜயம்" என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று. ஸ்ரீமந் நாராயணனை ஆராதித்து, வெல்லவொண்ணாத யமனையும் வென்றெழித்தான் என்றது.

மார்க்கண்டேயன் இங்ஙனம் நெடுநாள் வாழ்ந்து வருகையில், மஹாப்ரளயத்தைத் தான் காணவேணுமென்று ஆசைகொண்டு எம்பெருமானைப்போற்றிப் ப்ரார்த்தித்து அங்ஙனம் காணும்போது, மஹாப்ரளயத்தில் ஸ்ரீமந்நாராயணனொருவனையன்றி மற்றைத்தேவரெவரையும் பிழைத்திருக்கக்காணாதவனாய் அப்பெருமானது திருவயிற்றினுள்ளே அனைவரையுங் கண்டு முடிவில் தான் நற்கதி பெறுதற்பொருட்டுத் திருமாலையே சரணமடைய, அப்பெருமான் அவனைத் தனது திருவடிகளிற் சேர்த்துக் கொண்டானென்பது மார்க்கண்டேய சரித்திரத்தின் முடிவு.

இப்பாட்டில் "இண்டைச்சடைமுடி யீசன்" என்றருளிச் செய்ததன் கருத்தை அடியறிந்து ஆசாரியர்கள் வெளியிட்டருளின அழகு வாசாமகோசரம். ஆறுயிரப்படி ஸ்ரீஸூக்தி காண்மின்,—"மாதா பிதாக்களாலே மஹாதபஸா லப்தனாய் அநவரதம் உபலாலிதனாயிருந்த மார்க்கண்டேயன் தன்னுடைய ஆயுரர்த்தமாக ருத்ரனை யாச்ரயிக்க, அவனும் 'மத்ஸமீஹித ஸித்திக்காக நானும் பரமபுருஷனை நோக்கி தபஶ்சர்யை பண்ணி வர்த்திக்கிறது' என்று சொல்லித் தன்னுடைய தபோவேஷத்தையுங் காட்டி அவனுடைய திருவடிகளையே ஆச்ரயிப்போம் வாவென்று அவனைக்கொண்டு ருத்ரன் வந்து ஆச்ரயிக்க."

உசாச்சேல்ல=உசாவிச்செல்ல. உசாவுதல் வார்த்தையாடுதல். .... (எ)

செல்லவுணர்ந்தவர் செல்வன்றன்சீரன்றிக்கற்பரோ *
எல்லையிலாத பெருந்தவத்தால்பலசெய்மிறை *
அல்லலமரரைச் செய்யுமிரணியனாகத்தை *
மல்லலரியுருவாய்ச் செய்தமாயமறிந்துமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| எல்லை இலாத பெரு தவத்தால் | அபரிமிதமான மஹாதபஸ்ஸுக்களாலே | மல்லல் அரி உரு ஆய் செய்த | பெரிய நரசிங்க வடிவையுடையனாய்க் கொண்டு இருபிளவாகச் செய்த |
| பல செய் மிறை | பலவகையாகச் செய்யப்பட்ட லோகபீடையை யுடையனாய் | மாயம் அறிந்தும் | ஆச்சரியத்தை யறிந்தவைத்தும் |
| அமரரை அல்லல் செய்யும் | (விசேஷித்து) தேவர்களுக்குத் துன்பங்களை யுண்டுபண்ணினவனான | செல்ல உணர்ந்தவர் | பூர்த்தியான ஞானத்தைப் பெற்றவர்கள் |
| இரணியன் ஆகத்தை | ஹிரண்யாஸுரனுடைய உடலை, | செல்வன் தன் சீர் அன்றி கற்பரோ | லக்ஷ்மீபதியான அப்பெருமானுடைய திருக்குணங்களையன்றி வேறொன்றைக் கற்பரோ? |

* * *—நரசிங்க மூர்த்தியாய்த் தோன்றி ஆச்ரிதரக்ஷணம் பண்ணின மஹாகுணத்தைப் பேசுகிறாரிதில். செல்லவுணர்ந்தவர் என்றது=உணர்ச்சி எவ்வளவு தூரம் செல்லலாமோ அவ்வளவும் செல்ல விவேகிக்கவல்லவர்கள் என்றபடி. ஐச்வர்ய கைவல்யங்களில் மாத்திரம் நின்றுவிடாதே எல்லை நிலமான பகவதநுபவம் வரையிலும் உணர்ச்சியைச் செல்லவிட்ட

வர்கள் என்றபடி. அன்னவர்கள் * திருவுக்குந்திருவாகிய செல்வனுடைய சீர்களையே யன்றோ கற்பார். இப்போது தாம் விவக்ஷித்த சீர் இன்னதென்கிறது மேல் மூன்றடிகளில். அளவிறந்த தபஸ்ஸுக்களைச்செய்து அதனால் அபரிமிதமான வரங்களைப் பெற்று, அப்படி வரங்கொடுத்த தெய்வங்களையும் கண்ணீர்பாயவிட்ட இரணியனது உடலை, பெரிய வடிவுகொண்ட நரஸிம்ஹமூர்த்தியாய்த் தோன்றிப் பிளந்த ஆச்சரியத்தை யறிந்துவைத்தும் அந்த ஆச்ரிதவாத்ஸல்ய குணத்தையல்லது வேறொன்றைக் கற்பரோ?

மல்லல்=பெருமை; "அபரிமித பரிமாண ந்ருஸிம்ஹரூபதாரனாய்க் கொண்டு" என்பது ஆறுயிரப்படி. "* ஐஹாவிஷ்ணு என்னும்படியே ஹிரண்யன் ¶ குளப்படியாம்படியாகப் பெரிய வடிவைக்கொண்டு"என்பதுஈடு. ¶குளப்படி=குளம்பு அடி. வத்ஸமாத்ரமென்றபடி.

செய்தமாயம்—* நரஸிம்ஹ தநுஸ்ஸமணீ ...... ஆழ்வான் காட்டின மாயங்கள். ... ... (அ)

> மாயமறிபவர் மாயவற்காளன்றியாவரோ *
> தாயம்செறுமொருநூற்றுவர்மங்க வோரைவர்க்காய் *
> தேசமறியவோர்சாரதியாய்ச்சென்று சேனையை
> நாசம்செய்திட்டு * நடந்தநல்வார்த்தையறிந்துமே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| தாயம் செறும் ஒரு நூற்றுவர் மங்க | தாயாதி முறையில் சண்டை செய்து கிளர்ந்த துர்யோதனாதிகள் தொலைய | நடந்த நல் வார்த்தை அறிந்தும் | தன்னடிச் சோதிக்கெழுந்தருளினனென்கிற நல்வார்த்தையை யறிந்தும் |
| ஒர் ஐவர்க்கு ஆய் | விலக்ஷணர்களான பஞ்ச பாண்டவர்களுக்காகி | மாயம் அறிபவர் | மிகவும் ஆச்சரியமான பகவத் கதைகளை யறியுமவர்கள் |
| தேசம் அறிய | ஸகலலோக ப்ரஸித்தமாம்படி | | |
| ஒர் சாரதி ஆய் சென்று | ஒப்பற்ற ஸாரதியாகப் போய் | மாயவற்கு அன்றி ஆள் ஆவரோ | அப்பெருமானுக்கல்லது மற்றொருவர்க்கு அடிமை யாவரோ? |
| சேனையை நாசம் செய்திட்டு | எல்லாச் சேனைகளையும் அழியச் செய்து | | |

* * *—பஞ்சபாண்டவர்களுக்குக் கையாளாயிருந்து இழிதொழில் செய்து பார்த்தஸாரதி யென்று பேர்பெற்றுத் தாழநின்று அநிஷ்டவர்க்கங்களை அகற்றின மஹாகுணத்தைப் பேசுகிறார்.

தாயம் செறும்—தாயப்ராப்தியாலே செறுகிற என்றபடி. பங்காளிமுறையாலே சண்டை செய்தமையைச் சொன்னபடி.

தேசமறியவோர் சாரதியாய்ச் சென்று—இற்றைக்கும் அர்ச்சாவதாரத்திலுங்கூட அனைவருமறிந்துகொள்ளுமாறு பார்த்தஸாரதி என்று பேர்பெற்று நிற்கிறானன்றோ. தேசமறிய என்றவிடத்து நம்பிள்ளை யருளிச் செய்வது காணீர்;—'நாட்டில் ஸ்வாதந்த்ர்யபாரதந்த்ர்யங்கள் வ்யவஸ்திதமானவிடத்திலும் ரஹஸ்யத்திலேயிறே அவை ப்ரயோகிப்பது. பர்த்தாவும் பார்யையைக் காலைப்பிடிப்பது ரஹஸ்யத்திலேயிறே. இப்படியிருக்கச் செய்தேயிறே ஜகத் ப்ரஸித்தமாம்படி தன்னைத் தாழவிட்டது."

நடந்த—திருநாடேற வெழுந்தருளின என்றபடி. *க்ருஷ்ணாஹாராவதாரணம் ...... என்ற மஹாபாரத ச்லோகம் இங்கே யநுஸந்திப்பது. .... .... ... (கூ)

